# கடவுள் உங்கள் உள்ளேதான் இருக்கிறார்

(சூஃபி கதைகளின் விளக்கம்)

ஓஷோ

மொழியாக்கம்:

பாரி காஸ்டீபன்


கவிதா பப்ளிகேஷன்
தபால் பெட்டி எண்: 6123
8, மாசிலாமணி தெரு, பாண்டிபஜார்
தி. நகர், சென்னை–600017.
✆ : 24364243: 24322177

# முன்னுரை

ஓஷோவைப் பற்றி, அவருடைய அழகான சமூகத்தை விட, வாசகர்கள் அதிகமாகத் தெரிந்து வைத்திருப்பதுதான், ஆச்சரியமான உண்மை. அதிலும், குறிப்பாக இந்த நூல், அவருடைய வாசகர் வட்டத்தை, பெருமளவில் அதிகப் படுத்தப் போவது நிச்சயம்.

ஓஷோவின் வசீகரப் பேச்சுக்களுக்கும், சமூகம் மற்றும் தன்னை - மாற்றம் குறித்தான அவருடைய துணிச்சலான பரிசோதனைகளுக்கும், அவருடைய ஞானத்திற்கும், அவருடைய நகைச்சுவைகளுக்கும் நான் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறேன். (தொண்ணூற்று ஏழு ரோல்ஸ். ராய்ஸ் பற்றிய அமெரிக்காவின் நடவடிக்கையை, ஓஷோ கிண்டல் செய்ததை நீங்கள் ரசித்திருக்கிறீர்களா? சிலர் அதைத் தவறவிட்டிருக்கக்கூடும்.)

அவர் எந்தப் பொருளைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தாலும் ஆங்காங்கே நகைச்சுவைக் கருத்துக்களும், குட்டிக்கதைகளும், வெடித்துக்கொண்டே இருக்கும். அமெரிக்க ஹோட்டல்களில் 13ஆவது மாடி இல்லாதது, விழிப்போடு இருப்பதற்கான பொறுப்புகள், ஆற்றில் குதிக்கும் நாய், குருட்ஜிஃப்பின் அடையாளமின்மை, பாதை மாறிய மகன் (The Prodigal Son), தியானம், விஞ்ஞானத்தின் ஆக்கிரமிப்பு, ஷபிலியும் அவருடைய மூன்று ஆசிரியர்களும் - இப்படிப் பல விஷயங்கள், நம் பகுத்தறிவைப் பட்டை தீட்டுகின்றன. அவருடைய ஆனந்தம் என்பது, மற்ற எல்லாவற்றையும்விட முதன்மை யானது.

ஓஷோவின் எண்ணங்களைப் படிப்பதன் மூலம் அந்தக் காலத்தின் வசந்த நீரை, புதுப்பொலிவோடு நீங்கள் அருந்தி மகிழலாம். சுஃபி கதைகளைக் கருவாகக் கொண்டு, தம்முடைய புத்திசாலித்தனமான கற்பனையைக் கலந்து, அற்புதமான அறிவுப் பொக்கிஷங்களை அள்ளி வழங்கி யிருக்கிறார் ஓஷோ. ஆனால், உங்களுடைய அறிவுஜீவித் தனத்தையோ, அல்லது பகுத்தறிவையோ கொண்டு, இவற்றை அணுகாதீர்கள். நீங்கள் அப்படி வருவதாக இருந்தாலும், அதற்கும் அவர் தயாராகத்தான் இருப்பார். இது, ஒரு நுட்பமான நாடக வடிவம், இந்த நூற்றாண்டின் சொற்பொழிவுகளை, குருட்ஜிஃப்பைவிடப் பிரமாதமாக, வடிவமைத்திருக்கிறார்.

சரி, இந்த நூலின் முன்பகுதியில் நான் என்ன செய்து கொண்டிருக்கிறேன்? ரூமியின் படைப்புகளை, நான் மொழியாக்கம் செய்தவன் என்பதால், எனக்கு இங்கு வாய்ப்பு அளிக்கப்பட்டிருக்கலாம். அல்லது, 1988 ஆம் ஆண்டு, அக்டோபர் மாதம், நான் பூனாவில் உள்ள கம்யூனில் சில நாள்கள் தங்கியிருந்ததுகூட ஒரு காரணமாக இருக்கலாம். 1980களின் ஆரம்பத்தில், என்னை 'ஷ்ரவாகர்' என்று ஓஷோ அழைத்துக் கொண்டிருந்தார்.

இந்த நூலில் அவர் குறிப்பிடாத ஒரு சுஃபி கதையை, இங்கு நான் சொல்ல விரும்புகிறேன்.

Ibn காபிஃப் ஷிராஸி (Ibn Khafif Shirazi) ஒரு முறை கூறினார், ''இரண்டு மகத்தான மாஸ்டர்கள் எகிப்தில் இருப்பதாக நான் கேள்விப்பட்டேன். உடனே அவர்கள் இருப்பைப் பார்ப்பதற்காக, நான் அங்கு சென்றேன். இரண்டு அபாரமான ஆசிரியர்கள் அங்கு தியானித்துக் கொண்டிருப்பதைப் பார்த்தேன். நான் அவர்களைப் பார்த்து மூன்று முறை வணக்கம் தெரிவித்தேன். ஆனால், அவர்கள் எதுவும் பதில் அளிக்கவில்லை. நானும் அவர்களோடு சேர்ந்து நான்கு நாள்கள் தியானம் செய்தேன். நான் நீண்ட

தொலைவிலிருந்து வந்திருப்பதை எடுத்துச் சொல்லி, என்னிடம் பேசுமாறு ஒவ்வொரு நாளும் அவர்களிடம் கெஞ்சுவேன். இறுதியில், இளையவர் கண்களைத் திறந்தார். 'Ibn காபிஃஃப், வாழ்க்கை குறுகியது. உன்னுடைய மீதிக்காலத்தை, உன்னை ஆழமாக்கிக் கொள்வதில் பயன்படுத்து. மக்களை வணங்குவதில் உன் நேரத்தை விரயமாக்காதே!'' என்றார். நான் அவரிடம் எனக்கு அறிவுரை கூறும்படி வேண்டினேன். ''கடவுளை உனக்கு நினைவுபடுத்திக் கொண்டிருப்பவர்களின் முன்னிலையில் நீ இரு. ஞானத்தைப் பற்றிப் பேசுவதோடல்லாமல், ஞானமாகவே இருப்பவர்களின் முன்னிலையில் நீ இரு'' என்று சொல்லிவிட்டு, அவர் மீண்டும் தியானத்துக்குள் சென்றுவிட்டார்.''

Ibn காபிஃஃப் என்ற மனிதரைப் போலத்தான் நான் என்னை உணர்கிறேன். ஓஷோ போன்ற மகான்களின் நூல்களுக்கு முன்னுரை தேவையில்லாதது. ஆனால், இந்த முன்னுரையை எழுதிய எனக்கு, மகத்தான பெருமையும், கௌரவமும் ஏற்படுகிறது என்பதுதான் உண்மை.

சரி, இப்போது இசை ஆரம்பமாகட்டும்.

- காலமன் பார்க்ஸ்
(Coleman Barks)

ஜலாலுதீன் ரூமியின் 'மெதனாவி' படைப்பின் மொழியாக்க ஆசிரியர்:

*Open secret, We Are Three, Delicious Laughter, Feeling the shoulder of the Lion*

மற்றும் சில படைப்புகள்.

# உள்ளே...

# 1

# போதிக்க முடியாத போதனை

*ஸூஃபி குருவான லிப்னானியிடம், (LIBNANI) ஒருவன் வந்தான். அவர்கள் இருவருக்குமிடையே கீழ்க்கண்ட உரையாடல் இடம்பெற்றது.*

*அவன்: நான் கற்றுக்கொள்ள விரும்புகிறேன் எனக்குக் கற்றுத் தருகிறீர்களா?*

*லிப்னானி: எப்படி கற்றுக் கொள்வதென்பது உனக்குத் தெரியும் என்று நான் கருதவில்லை.*

*அவன்: எப்படி கற்றுக் கொள்வதென்பதை நீங்கள் எனக்குக் கற்றுத் தருவீர்களா?*

*லிப்னானி: நான் எப்படிக் கற்றுத் தருவது என்பதை உன்னால் கற்றுக்கொள்ள முடியுமா?*

உண்மையைப் போதிக்க முடியாது. ஆனால் அதனைக் கற்றுக்கொள்ள முடியும். இந்த இரண்டு வாக்கியங்களுக் கும் இடையேதான், அனைத்துப் புரிதலுக்கும் உரிய சூட்சுமம் அடங்கியிருக்கிறது. அதனால், மீண்டும் சொல்கிறேன்: உண்மையைப் போதிக்க முடியாது. ஆனால், அதனைக் கற்றுக் கொள்ள முடியும். ஏனெனில், உண்மை என்பது ஒரு போதனை அல்ல, அது ஒரு கோட்பாடு அல்ல, தத்துவம் அல்ல, வேதாந்தம் அல்ல, அல்லது இவற்றைப் போன்ற எதுவுமல்ல. உண்மை

என்பது இருத்தல். உண்மை என்பது இருப்பது. இதைப் பற்றி எதுவும் சொல்ல முடியாது.

உண்மையைப் பற்றி நீ ஏதாவது சொல்லத் தொடங்கினால் இது போய்க் கொண்டே இருக்கும். அது புதர் போன்றது. அதன் மையத்தை உன்னால் அடையவே முடியாது. நீ அதைப் பற்றிக் கேள்வி கேட்கத் தொடங்கினால் அதைத் தவறவிடும் பாதையில் நீ நுழைந்துவிட்டாய் என்று அர்த்தம். அது, நேரடியாகப் புரியும். ஆனால் புரிய வைக்கப்படுவதல்ல. எந்த வழிமுறைகளும் கிடையாது. உண்மை என்பது இங்கேயே, இப்போதே இருப்பது. உண்மை மட்டுமே உள்ளது, வேறு எதுவும் இல்லை. எனவே, அதைப் பற்றிக் கேள்வி எழுப்புகிற கோணத்திலேயே, உன் மனம் அதை விட்டு விலகிச் சென்றுவிடுகிறது. நீ எங்கோ இருக்கிறாய், இங்கே இப்போது இல்லை. உண்மையைப் போதிக்க முடியாது. ஏனெனில், வார்த்தைகளுக்கு வலிமை இல்லை. அவை ஆண்மையற்றவை. உண்மை என்பது விஸ்தாரமானது, எல்லையற்ற பிரம்மாண்டமான விஸ்தாரம். வார்த்தைகள் மிகமிகக் குறுகியவை. உண்மையை வார்த்தைகளுக்குள் உன்னால் திணிக்க முடியாது. அது முடியாத விஷயம். மேலும், வார்த்தைகள் இல்லாமல் ஒருவர் எப்படிப் போதிக்க முடியும்?

மௌனம் செய்தியைத் தெரிவிக்கலாம். அது வெளிப்படுத்தும், அது ஒரு வாகனமாகச் செயல்படும். இப்போது எழும் கேள்வி, போதிப்பதில் குரு செலுத்தும் அக்கறையல்ல அதனைக் கற்றுக் கொள்வது சீடனின் அக்கறை.

போதிக்க வேண்டும் என்று நீ கேட்டால் குரு ஏதேனும் செய்யக்கூடும்.

ஆனால், வார்த்தைகள் பயனயற்றவை - அவற்றைக் கொண்டு எதையும் செய்ய முடியாது. குரு என்பவர், தன் இருத்தலின் ஒவ்வொரு துளியிலிருந்தும், மௌனத்தின் மூலமாகச் செய்தியைத் தெரிவிக்கலாம் - ஆனால், இப்போது அதனைப் புரிந்து கொள்ள வேண்டியவன் சீடன் தான். எந்த உதவியுமின்றி, குருவின் எந்த உதவியு மின்றி, சீடன் தான் அதனை உணர்ந்து கொள்ளவேண்டும்.

அதனால்தான், ஆன்மிக உலகத்தில் போதனையான வர்கள் இருப்பதில்லை. குருநாதர்கள் மட்டுமே இருக் கிறார்கள். போதனையாளர் என்பவர் போதிப்பவர், குருநாதர் என்பவர் அப்படியே இருப்பவர். போதனை யாளர் என்பவர் உண்மையைப் பற்றிப் பிரசங்கம் செய்பவர், குருநாதர் உண்மையின் வடிவமாக இருப்பவர். நீ கற்றுக் கொள்ள முடியும். ஆனால் குருவால் போதிக்க முடியாது.

குரு எப்போதும் வெளிப்படையாக இருப்பவர் - அவரை நீ அருந்த வேண்டும், அவரை உட்கொள்ள வேண்டும், நீ அவரைக் கிரகிக்க வேண்டும்.

நீ அவர் கருவோடு இரண்டறக் கலக்க வேண்டும். அவரை நீ உட்கிரகிக்க வேண்டும்.

குரு என்பவர் உண்மையின் வடிவமாக இருப்பவர். அவரைக் கிரகிக்க விரும்புவர்கள் அனைவருக்கும் எப்போதும் தயாராக இருப்பவர். அதனால் இயேசு தன் சீடர்களிடம் கூறினார்: என்னை உட்கொள், உண்மை என்பது உட்கொள்ளக் கூடியது. போதிக்க முடியாது அது உன்னை அடைவதற்கு அதை நீ அனுமதிக்கலாம். ஆனால் அதை உன் மீது திணிக்க முடியாது.

உண்மை என்பது பூரணமான அகிம்சை. அது உன் கதவைத் தட்டும் வேலையைக் கூடச் செய்யாது - அது கூட மிகப்பெரிய ஆக்கிரமிப்பு.

நீ அனுபவித்தால், நீ வரவேற்றால், உண்மை புலப்படும். நீ மறுத்தால், நீ வரவேற்கவில்லை என்றால் மில்லியன் ஜென்மங்கள் எடுத்தாலும் அதனை நீ தேடிக் கொண்டே இருக்கக் கூடும். தொடர்ந்து அதனை நீ தவறவிட்டுக் கொண்டே இருப்பாய். அது எப்போதும் இங்கே இருந்து கொண்டே தான் இருக்கிறது. ஓர் அடி கூட அதனை நோக்கி நீ எடுத்துவைக்க வேண்டிய அவசிய மில்லை. கண்களை திறக்க வேண்டியது தான் தேவை. அதனை நோக்கி ஒரு சிறு அடி கூட நகர வேண்டிய தேவையில்லை. அது அங்கே ஏற்கனவே உள்ளது; நீதான் அதை ஆசைப்பட வேண்டும்.

உண்மையைப் போதிக்க முடியாது. ஆனாலும், உன்னால் அதைக் கற்றுக்கொள்ளமுடியும். அதனால் மொத்த சாராம்சமும் உன் சீடத்தன்மையில்தான் அடங்கியுள்ளது.

மனித குலத்தை மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம். முதல் பகுதி, பிரதானப் பகுதி, கிட்டதட்ட தொண்ணூற்று ஒன்பது சதவிகிதம்.

உண்மையைப் பற்றிச் சுற்றும் சட்டை செய்வதில்லை. அது அறியப்படாமலே இருக்கிறது. அது ஆழ்ந்து உறங்கு கிறது. அதைப் பற்றி எந்தக் கேள்வியும் எழுவதில்லை. அது ஏனோதானோ என்று வாழ்ந்துகொண்டிருக்கிறது. உண்மை என்பது என்ற என்ற கேள்வி ஒருபோதும் எழுவதில்லை. அதுதான் மனிதகுலத்தின் பெரும்பகுதி.

அவர்கள் அறியாமையில் வாழ்கிறார்கள். அந்த அறியாமையை அவர்கள் முற்றிலும் உணரவில்லை. அதை உணராதது மட்டுமின்றி. தங்களுக்கு அதைப் பற்றித் தெரியும் என்ற எண்ணத்தில், கனவில் மிதந்து கொண்டிருக்கிறார்கள்.

உண்மை என்னவென்றால், தங்களுக்குத் தெரியும் என்ற எண்ணத்தில் இந்த வர்க்கத்தினர் உறங்கிக் கொண்

டிருக்கிறார்கள். சரி, இதைத் தெரிந்துகொள்வதற்கு என்ன அவசியம் இருக்கிறது? கற்றுக் கொள்ளும் தேவையைத் தவிர்க்க வேண்டுமானால், இதுதானே மிகச் சிறந்த வழி: உங்களுக்கு ஏற்கனவே தெரிந்திருக்கிறது என்ற எண்ணத்திலேயே தொடர்ந்து செல்லுங்கள். பிறகு, கற்றவைப் பற்றிய கேள்வியே இருக்காது. ஒரு சீடனாவதற்கு அவசியமில்லை. உங்கள் கல்லறைவரை உங்களுக்குத் திருப்தி இருக்கும். நீங்கள் இறந்து விட்டவர்.

மனித குலத்தின் பெரும்பான்மையான பகுதி இதுதான். இந்த வர்க்கத்தினரிடம், நீங்கள் உண்மையைப் பற்றிக் கூறினாலும் கூட அவர்கள் சிரிப்பார்கள். நீங்கள் முட்டாள்தனமாகப் பேசுவதாக அவர்கள் கூறுவார்கள். அது மட்டுமல்ல, உண்மை அல்லது கடவுள், அல்லது நிர்வாணம் போன்றவை இருப்பதை அவர்கள் மறுப்பார்கள். ஞான இருத்தலைப் பற்றி அவர்களிடம் விலக்கினால், அப்படி ஓர் இருத்தல் இருப்பதை அவர்கள் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். ''நாங்கள் தான் முழுமையான மனிதகுலம்'' என்பார்கள்.

மதங்கள் தோன்றியதை பற்றி வால்டேரிடம் யாரோ கேட்டபோது, அவர் கூறியுள்ளதாவது: ''உலகில் முதல் வேஷதாரியும் முதல் முட்டாளும் சந்தித்துக் கொண்டபோது தோன்றியதுதான் மதம்.''

வேஷதாரியும் முட்டாளும் சந்தித்துக் கொண்டபோது தோன்றியதுதான் மதம். இதில் உண்மையின் சாயல் உள்ளது. ஒருவிதத்தில் உண்மைதான், ஆனால் மதத்தைப் பற்றி உண்மையல்ல, ஆனால் போலி மதங்களை பொறுத்தவரை உண்மைதான்.

மதம் பிறந்தது, வேஷதாரிக்கும் முட்டாளுக்கும் இடையில் அல்ல. போலி மதங்கள் தான் அந்த வகையில் பிறந்தவை. மதம் என்பது குருவுக்கும் சீடனுக்கும்

இடையில் பிறந்தது. மதம் பிறந்தது, முழுமையை அடைந்தவர்க்கும், உணர்வு ரீதியான நம்பிக்கையோடு அதனை அடையும் தேடலில் ஈடுபட்டவர்க்கும் இடையில் மதம் பிறந்தது. உண்மைக்கும் சீடனுக்கும் இடையில்...

ஆனால், மனித குலத்தின் முதல் பகுதி, முழுமையான அறியாமையில் இருக்கிறது, பேரானந்த அறியாமை. ஏனென்றால், கேள்வி இல்லாதபோது தேடல் இல்லை. எந்தச் சிரத்தையும் இல்லாமல் அவர்கள் சௌகர்யமாக வாழ்கிறார்கள். அவர்கள் கீழ்நோக்கி விழுந்துகொண்டே இருக்கிறார்கள். அவர்களால் எப்போதும் உயர முடியாது. அவர்களுக்குத் தெரியாது. அவர்களுக்குத் தெரியாதது மட்டுமின்றி அனுபவச் சிகரங்களை, சுயத்தை மறந்த உச்சநிலைகளை, அவர்கள் கனவுகூட காண்பதில்லை.

அவர்கள் ஏறக்குறைய மிருகங்களைப் போல வாழ்கிறார்கள். உண்பது, உறங்குவது போன்ற விஷயங்கள். ஒரே மாதிரியான வாழ்க்கை, ஒரு சக்கரத்தைப் போலச் சுழல்கிறார்கள். அவர்கள் பிறக்கிறார்கள், வாழ்கிறார்கள், குழந்தை பெற்றெடுக்கிறார்கள், பிறகு இறந்துவிடுகிறார்கள். சக்கரம் தொடர்ந்து சுற்றிக் கொண்டே இருக்கிறது. அவர்கள் மறுபடியும் பிறக்கிறார்கள். இது மறுபடியும் மறுபடியும் தொடர்கிறது.

அடுத்தது, மனித குலத்தின் இரண்டாவது பகுதி இவர்களில் சிலர் மட்டுமே கேள்வி கேட்கின்றனர். ஆனால், எப்படிக் கற்றுக் கொள்வது என்பது அவர்களுக்குத் தெரிவதில்லை. புரியாமலேயே அவர்கள் தேடுகிறார்கள். இந்தத் தேடலுக்கு உள்ளார்ந்த தன்னிலை மாற்றம் தேவை. அப்போதுதான் அது சாத்தியப்படும் என்பதை அவர்கள் புரிந்து கொள்வதில்லை. உள்ளார்ந்த வேட்கை தேவை.

இந்தக் கோணத்தில் பார்த்தால், இந்தக் கற்றல் மற்ற வகை கற்றலைப் போன்றது அல்ல. உன் பிரக்ஞையை மாற்றிக் கொள்ளாமலேயே, நீ வேதியியல், இயற்பியல்,

கணக்கு பற்றிய கல்வியைக் கற்றக்கொள்ளலாம். பிரக்ஞையை மாற்றிக் கொள்ள வேண்டிய அவசிய மில்லை. நீ எப்படி இருக்கிறாயோ, அந்த நிலையிலேயே உன்னால் கற்றுக்கொள்ள முடியும். ஆனால், மதம் பற்றிய கல்விக்கு, இந்த அடிப்படைத் தேவை அவசியம். முதலில் உன் பிரக்ஞையிலிருந்து நீ மாற வேண்டும்.

கற்றுக் கொள்வதற்கு முன்பாகவே, அதற்கான ஆயத்த நிலைக்கு உன்னை நீ தயார்ப்படுத்திக் கொள்ள வேண்டும். நீண்ட கால ஆயத்தம் அவசியம். இல்லையெனில், நீ கற்க தொடங்க முடியாது.

இரண்டாவது வர்க்கத்தினர் கேள்வி கேட்கிறார்கள், ஆனால், தயார்நிலையில் இருப்பதில்லை. அவர்கள் சுற்றிச் சுற்றி வருகிறார்கள். தத்துவங்கள் அனுமானமல்ல, மனிதமன வெளிப்பாடுகள், வாக்குச் சாதுரியத்தோடு பேசும் மக்களின் கண்டுபிடிப்புகள், மனித மன வெளிப் பாடுகள், வாக்குச் சாதுரியத்தோடு பேசும் மக்களின் கண்டு பிடிப்புக்கள், எழுத்து வடிவமற்ற வாய் மொழிகள், தத்துவங்கள், மெட்டாபிஸிக்ஸ் இந்த வகை மனிதனுக்கு ஆயிரக்கணக்கான தத்துவங்கள் காத்துக் கிடக்கின்றன.

அவன் தேர்வு செய்து கொள்ளலாம் - சந்தை விஸ்தார மானது. அவன் ஒரு தத்துவத்திலிருந்து மற்றொன்றுக்கு மாறிக்கொண்டே இருக்கலாம். ஏனெனில், எந்தத் தத்துவமும் உனக்குச் சரியான வழியைக் காட்டுவதில்லை. தத்துவங்கள் வழிகாட்டாது. அதனால் ஒரு தத்துவத்தில் உனக்கு வெறுப்பு உண்டாகும்போது அடுத்ததைத் தேர்ந்தெடுக்கிறாய். ஓர் ஆசிரியர் மீது உனக்கு வெறுப்பு உண்டாகும் போது அடுத்த ஆசிரியரிடம் தாவுகிறாய், மக்கள் இப்படியே சென்று நாடோடிகளாகத் திரியத் தொடங்கியிருக்கிறார்கள்.

இந்த இரண்டாவது வர்க்க மனிதர்களை நான் அன்றாடம் சந்திக்கிறேன். பிற இடங்களிலிருந்து இந்த

ஆசிரமம், இங்கிருந்து வேறு இடம், ஓர் ஆசிரியரிட மிருந்து இன்னோர் ஆசிரியர், ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடம் என்று இவர்கள் மாறிக்கொண்டே இருக் கிறார்கள். எதுவும் இவர்களுக்குத் திருப்தி அளிப்ப தில்லை. எந்த ஆசிரியர் என்பது முக்கியமல்ல என்பது அவர்களுக்குப் புரிவதில்லை. அடிப்படை ஆயத்தம் அவர்களிடம் இருப்பதில்லை. அவர்கள் சீடனாவதற்குத் தயார் நிலையில் இல்லை. நீ சீடனாவதற்குத் தயார் நிலை யில் இல்லாதபோது உன்னால், குருவை எப்படிக் கண்டு கொள்ள முடியும்? பழைமையான கருத்து என்னவென்றால், சீடன் தயார் நிலையில் இருக்கும்போது, குரு தாமாகவே தோன்றுவார். நீ தேடாமலேயே அவர் வருவார். எப்போ தெல்லாம் சீடன் தயாராக இருக்கிறானோ, அப்போ தெல்லாம் குருவும் உடனடியாகத் தோன்றுவார். நீ தேடிக்கொண்டே இருந்தால், அவர் உனக்குத் தோன்றவே மாட்டார். உனக்குள்ளே ஏதோ ஒரு குறைபாடு உள்ளது. உனக்குள்ளே ஏதோ ஒன்று உன் மொத்த முயற்சியையும் முடக்குகிறது. நீ தயாராக இல்லை.

உன் நிபந்தனைக்கு ஒத்துப்போகும் குரு உனக்குக் கிடைக்கவே மாட்டார். நீ அவருடைய நிபந்தனைகளைப் பூர்த்தி செய்ய வேண்டும். அவர்கள் மாறுவதில்லை, அவர்கள் சாசுவதமானவர்கள், ஒரே நிலையில் இருப் பார்கள். ஒருவன் முதலில் சீடனாவதற்கு கற்றுக்கொள்ள வேண்டும்.

மனித குலத்தின் இரண்டாவது வர்க்கத்தினர் கேள்வி களை எழுப்பும் நாடோடிக் கூட்டமாகி விடுகின்றனர். அவர்கள் பெரியதாக எந்தப் பயனும் பெறுவதில்லை. அவர்கள் உருண்டோடும் கற்களாகி விடுகிறார்கள். அந்தக் கற்கள் எந்தப் பாசியையும் தன்னுடன் சேர்த்துக்

கொள்வதில்லை. அவர்கள் உருண்டு கொண்டே செல்கிறார்கள்.

அடுத்தாக மூன்றாவது வர்க்கத்தினர்: மிகவும் அபூர்வமான மனிதர்கள், விதிவியக்கானவர்கள், மனித குலத்தின் சாரமாகத் திகழ்பவர்கள்.

இந்த மூன்றாவது வர்க்கத்தினர்தான் தேடுபவர்கள். இவர்கள் தான் கேள்விகள் எழுப்புவார்கள். ஆனால் அந்த விசாரணையில் புத்திசாலித்தனம் இருக்காது, ஆனால் அது பரிபூரணமாக இருக்கும். மற்றப் பாடங்களைக் கற்றுக் கொள்வது போல அவர்களுடைய விசாரணை இருக்காது. அந்த விசாரணை முழுமையாக இருக்கும். அதற்காக அவர்கள் உயிரை மாய்த்துக் கொள்ளவும் சித்தமாக இருப்பார்கள். தங்களுடைய முழு இருத்தலையும் மாற்றிக் கொள்ள அவர்கள் தயாராக இருப்பார்கள். எல்லா நிபந்தனைகளையும் பூர்த்தி செய்ய அவர்கள் தயாராக இருப்பார்கள். மரணம் என்பது நிபந்தனை என்றால், உயிரை விடுவதற்கும் அவர்கள் தயார் நிலையில் இருப்பார்கள். எப்படியேனும் உண்மையைக் கற்றுக் கொள்ள விரும்புவார்கள். உண்மை என்னும் உலகத்தில் வாழ விரும்புவார்கள். பொய்யான உலகத்தில் மாயைகளில், கனவுகளில், வெளிவேஷங்களில் வாழ அவர்கள் விரும்புவதில்லை.

இந்த மூன்றாவது வகையினர் மட்டுமே சீடன் ஆகலாம். இந்த மூன்றாவது வகையினர் மட்டுமே, முழுமையை அடையும்போது, குருவாக ஆகலாம்.

அதனால்தான் சொல்கிறேன், உண்மையைப் போதிக்க முடியாது. ஆனால், அதனைக் கற்றுக்கொள்ள முடியும். அதற்கான சாத்தியக் கூறுகள் அனைத்தும் உன்னிடம் தான் உள்ளது.

குரு இருக்கிறார் - குருவின் முன்னால் நீ இருக்க வேண்டும். உன் சுயத்தைத் தூக்கி எறிந்து விட்டு, முழுமை யான வெறுமையுடன் நீ வந்து, குருவின் முன்னிலையில் இருக்க வேண்டும். சரணாகதி என்பது இதுதான்.

தன் சுயத்தைக் கதவுக்கு வெளியே தூக்கி எறிந்து விட்டு சீடன் வருகிறான். தன் காலணிகளை எங்கே கழற்றி வைக்கிறானோ, அங்கே தன்னையும் கழற்றி வைக் கிறான். முழுமையான வெறுமையில் அவன் குருவிடம் வருகிறான். அந்த முழுமையான வெறுமையில், உண்மை என்பது சாத்தியமாகிறது. அந்த முழுமையான வெறுமை யில் குருவின் பிரவாகம் ஆரம்பமாகிறது. குரு ஒரு பிரம்மாண்டமான நீர்வீழ்ச்சி ஆகிறார். அது சீடனின் பள்ளத்தாக்கில் பாய்கிறது. அவருடைய இருத்தலின் சிகரங்களிலிருந்து, சீடனுடைய இருத்தலின் அடி யாழத்தை நெருங்குகிறது. நினைவு வைத்துக் கொள். அவர் எதுவும் செய்வதில்லை. அது இயல்பாக நடக் கிறது. பள்ளத்தாக்கு தயாராக இருக்கும்போது நீர்வீழ்ச்சி தானாக நடைபெறுகிறது. குருவின் இருத்தல் சீடனை நோக்கிப் பிரவாகமாகப் பாயத் தொடங்குகிறது.

குரு செய்வதல்ல இது. சீடன் செய்வதல்ல இது. யாரும் எதையும் செய்வதில்லை. குரு சீடனின் முன்னால் இருக்கிறார். சீடர் குருவின் முன்னால் இருக்கிறான். இந்த அற்புத நிகழ்ச்சி தானாகவே நடைபெறுகிறது. குருவின் ஜ்வாலை சீடனின் இதயத்திற்கு தாவுகிறது. ஆனால், இதற்குத் திறந்த நிலை அவசியம். சீடன் வெறுமையாக இருக்க வேண்டும். பெற்றுக் கொள்பவனாக மட்டுமே இருக்க வேண்டும்.

அதனால்தான், நான் மறுபடியும் மறுபடியும் சொல் கிறேன். பிரக்ஞை கொண்டவனாக இருப்பதுதான்

சீடனாக இருப்பது என்ற கலையாகும். பெண்மையின் பிரக்ஞை கொண்டிருக்க வேண்டும். பெறுபவனாக, அனுமதிப்பவனாக, தடைகள் ஏற்படுத்தாதவனாக கதவுகளை மூடாதவனாக, பாதுகாப்புக்கு முயற்சிக்காதவ னாக இருக்க வேண்டும். உணர்வு ரீதியான நம்பிக்கை இருக்க வேண்டும்.

உணர்வோடு கூடிய நம்பிக்கை என்பதே வாழ்க்கை. அந்த நம்பிக்கையில் தான் உண்மை நிகழ்கிறது. உணர்வு ரீதியான நம்பிக்கை என்பது கற்றலுக்கு தயாராக இருப்பதே. ஆமாம், நம்பிக்கை என்பது வாழ்க்கை. உணர்வு ரீதியான நம்பிக்கை கொள்பவனே. சீடன்.

நீ இன்னமும் சிந்தித்துக் கொண்டிருந்தால், நீ இன்னமும் கட்டுப்பாட்டில் இருக்கிறாய் என்று பொருள். நீ சரணாகதி அடையவில்லை. இது சரி, இது சரியல்ல என்று இன்னமும் நீ சொல்லிக் கொண்டிருந்தால் உன்னுடைய மனம் அங்கே இருக்கிறது என்று அர்த்தம். அதனால் நீ மனித குலத்தின் இரண்டாவது பகுதியில் அங்கம் வகிக்கிறாய், மூன்றாவதில் அல்ல.

இப்போது, புதிய கோணத்தில், மூன்று பகுதிகளையும் நான் மறுபடியும் பிரிக்கிறேன். மனித குலத்தின் முதல் பகுதி, ஆன்மாவில் சந்தேகம் கொள்கிறது. அதாவது, கிட்டத் தட்ட சந்தேகத்தில் நம்பிக்கை கொள்வது, அவ நம்பிக்கையை நம்புவது. அந்த அளவுக்கு வலிமைமிக்கது. ஏனென்றால், மனித குலத்தின் முதல் பகுதி - பெரும்பகுதி - பிரதானப் பகுதி, தம் சொந்த சந்தேகத்தை சந்தேகிப்ப தில்லை. அது சந்தேகத்தில் நம்பிக்கை கொள்கிறது. நீ அதிகமாகச் சந்தேகப்பட்டால், சந்தேகத்தில் தொலி வோடு இருந்தால், நீ முழுமையாக மூடப்பட்டு விடுவாய். ஒரு ஜன்னல் கதவு கூடத் திறக்கப்பட மாட்டாது. நீ சீடனாகும் சாத்தியம் மிக மிக நீண்ட தூரம் தள்ளி உள்ளது.

அந்த நிலையில் மாணவராவது கூடக் கடினம். உன்னைவிட, அடுத்தவனுக்கு அதிகமாகத் தெரிந்தால், உன்னால் அதை ஜீரணிக்க முடியாது.

இந்தப் பகுதியினர் முட்டாள் தனமாக வாழ்பவர்கள். இது ஒரு பாறாங்கல் பகுதி. இறந்தது, உயிர் இல்லாதது. ஏனென்றால், உன் சக்தி தொடர்ச்சியாக தெரியாததை நோக்கி நகராவிட்டால், உனக்கு வாழ்க்கை சாத்தியமில்லை.

ஒவ்வொரு நாளும் தெரியாததை நோக்கி, நீ அடி யெடுத்து வைக்கும்போதுதான் உனக்கு உயிர்ப்பு இருக்கும். ஒரு பதைப்பு உண்டாகும். உன் இதயத்தில் துடிதுடிப்பு இருக்கும். நீ வளர்ந்து கொண்டிருக்கிறாய் என்று அர்த்தம். வளர்ச்சி என்பது எப்போதும் தெரிந்ததிலிருந்து தெரியா ததை நோக்கி அடியெடுத்து வைப்பதிலே தான் அமைந் துள்ளது.

மனித குலத்தின் இரண்டாவது பகுதியினர் கேள்வி கேட்கின்றனர். அதன் சந்தேகம் அசைக்கப்படுகிறது. ஆனால், அதன் உணர்வு ரீதியான நம்பிக்கை சரியானபடி வேரூன்றப்படவில்லை. மனித குலத்தின் பெரும்பான்மை யைச் சேர்ந்தவர்களாக இப்பகுதியினர் இருப்பதில்லை. அவர்களிடமிருந்து சற்றே விலகிச் சென்றுவிட்டது. அப்படிச் சற்றே விலகியது கூட அவர்கள் திரும்புவதற்கு தடையாகிவிட்டது. அவர்கள் அந்தரத்தில் உள்ளனர். அவர்கள் இரண்டுக்கும் இடையில் ஊசலாடிக் கொண்டிருக் கிறார்கள். உணர்வு ரீதியான நம்பிக்கை அவர்களுக்கு இல்லை.

முதல் பகுதி மிக அதிகமாகச் சந்தேகப்படுகிறது. இரண்டாம் பகுதி, சந்தேகத்தில் சந்தேகம் கொள்கிறது. ஆனால், உணர்வு ரீதியான நம்பிக்கை பிறக்கவில்லை. மூன்றாம் பகுதி நம்பிக்கையில் நம்பிக்கை கொண்டிருக் கிறது. உணர்வு ரீதியான நம்பிக்கை பரிபூரணமாக

இருக்கிறது. இரண்டாம் பகுதியினர் உன்னைக் குருடன் என்று கூறுவார்கள். உன் சிரத்தை, நம்பிக்கையில் நீ கொண்டிருக்கும் நம்பிக்கை, அவர்கள் பார்வையில் குருடாகத் தோன்றும்.

மனித குலத்தின் முதல் பகுதி உன்னைப் பைத்தியக் காரன் என்று அழைக்கும். உன் உணர்வோடு கூடிய நம்பிக்கை, அவர்களுக்கு பைத்தியக்காரத்தனமாகத் தோற்ற மளிக்கும். சிந்திக்கும் ஒருவன் எப்படி முழுமையாக நம்பு வான். அது முடியாத விஷயம். ஆனால் மூன்றாவது பகுதி யினரைப் பொறுத்தவரை உணர்வு ரீதியான நம்பிக்கை கொண்டவர்களுக்கு குருட்டுத்தன்மை மட்டுமே பார்ப் பதற்கு ஒரே தகுதியாக இருக்கும். மேலும் பைத்தியக்காரத் தனத்தையே தெளிவான மனநிலையாகக் கருதுவார்கள்.

இந்த மூன்று மாறுபட்ட மனித குலங்களும் வெவ் வேறு மொழிகளைக் கொண்டவை. அவர்கள் ஒருவருக் கொருவர் செய்தித் தொடர்பு வைத்துக் கொள்வதில்லை. ஏறக்குறைய அது முடியாத விஷயம். அது எதைப்போல வென்றால் உன் மொழி தெரியாத ஒருவரிடம் அவர் மொழி யைத் தெரிந்திராத நீ பேசிக் கொள்வதைப் போன்றது. வெறும் அபிப்ராயங்களாலும் சமிக்ஞைகளாலும் சிறிதளவு மட்டுமே செய்திகளைப் பரிமாறிக்கொள்ள முடியும். முழுமையான பரிமாற்றம் சாத்தியமில்லை.

மனித குலத்தின் மூன்றாம் பகுதியினர் மட்டுமே கற்றுக்கொள்ள முடியும் என்பது சூஃபிக்களின் கருத்து. சூஃபி குருமார்கள் மிகவும் நுட்பமாகத் தேர்ந்தெடுப்பவர்கள். சூஃபி குருமார்களிடம் அங்கீகாரம் பெறுவது மிகவும் கடினம். மிகமிகக் கடினம். அவர்கள் எல்லா விதத் தடை களையும் அவர்களைச் சுற்றி உருவாக்கி விடுவார்கள்.

முதலாவதாக, அவர்களுடைய வாழ்க்கை முறையே மிகவும் எளிமையாக இருக்கும். அதனால், உன்னால்

அவர்களைக் கண்டுபிடிக்க முடியாது. அவர்கள் முற்றிலும் எளிமையாக வாழ்பவர்கள். உதாரணத்திற்கு குரு ஓர் இரும்புக் கொல்லனாகவோ, ஒரு செருப்பு தைப்பவனாகவோ, ஒரு நெசவாளியாகவோ, ஒரு கசாப்புக்காரனாகவோ, அல்லது ஒரு தச்சனாகவோ உலகத்தின் அடிமட்டத் தொழிலைச் செய்து கொண்டிருப்பார். உன் செருப்பைத் தைக்கும் சக்கிலியன்தான் குரு என்பதை உன்னால் கண்டுபிடிக்கவே முடியாது. எவ்விதச் சந்தேகத்தையும் அவர் ஏற்படுத்த மாட்டார். இந்த முறையில் தான், தயாராக இல்லாதவர்களிடமிருந்து ஆனால் தான் தயாராக இருப்பதாக நினைத்துக் கொள்பவர்களிடமிருந்து, அழைக்கப்படாமல் வருபவர்களிடமிருந்து அவர் தன்னைப் பாதுகாத்துக் கொள்கிறார்.

ஒரு சுஃபி குரு மசூதிக்கோ, கோயிலுக்கோ, அல்லது ஏதேனும் ஒரு பொதுவான இடத்திற்கோ சென்று வழிபடுவதை உன்னால் பார்க்க முடியாது. நடு இரவில் அனைவரும் ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கும்போது அவர் வழிபடுவார். அவருடைய மனைவிக்குக் கூட அவர் முழுமை அடைந்ததைக் கண்டுபிடிக்க வாய்ப்பில்லை. சுஃபி முறையின் ஒரு பகுதி இது - எவரிடமும் தன்னைக் காட்டிக் கொள்ள அனுமதிக்காதது.

இயேசு, எகிப்தில் சில சுஃபிக்களுடன் வாழ்ந்திருக்க வேண்டும். பைபிளில் காணப்படும் அவருடைய போதனைகளில் ஒன்று இது. உன் வலது கையைக் கொண்டு நீ செய்யும் எதையும், உன் இடது கைக்குத் தெரியாமல் பார்த்துக்கொள். இது ஒரு சுஃபி மரபு. உன் வாழ்க்கை முழுமையாக இருட்டில் இருக்கட்டும். அப்போதுதான் ஒருவருக்கும் தெரியாது. அழைக்கப்படாமல் வருபவர்கள் தவிர்க்கப்படுவார்கள். போலியான ஆத்ம சாதகர்கள்

கதவை தட்ட மாட்டார்கள். உன் நேரத்தையும் சக்தியையும் முட்டாள்கள் வீணடிக்க மாட்டார்கள்.

அடுத்து இரண்டாவதாக ஒரு வேளை, நீ சுஃபி குருவைத் தெரிந்துகொள்ள ஆசைப்பட்டால், அவருடன் நீ வருடக்கணக்கில் காத்திருக்க வேண்டியதிருக்கும். கற்றுக் கொள்பவனாக, தியானத்திற்காக அல்ல. ஒருவேளை, அவர் செருப்பு தைக்கும் சங்கிலியாக இருந்தால், வருடக் கணக்கில் செருப்பு தைக்கும் நுட்பங்களை நீ கற்றுக் கொள்ள வேண்டியிருக்கும். அவர்கள் உன்னிடம் கடுமையாக வேலை வாங்குவார்கள். சில சமயங்களில், பத்துப் பன்னிரண்டு வருடங்கள் கூட இப்படிக் கடந்துவிடும். நீ வெறுமனே செருப்பு தைக்கும் வேலையில் ஈடுபட்டிருப்பாய். "நீ எதற்காக வந்திருக்கிறாய்? உனக்கு என்ன வேண்டும்?" என்று குரு உன்னிடம் தாமாகவே கேட்கும் வரை, நீ அவரிடம் எந்தக் கேள்வியும் எழுப்பியிருக்கக் கூடாது.

அவர் உன்னைக் கவனிப்பார். அவர் உன்னுடனேயே இருப்பார். அந்த ஒருங்கிணைப்பில் ஏதோ ஒன்று வளரத் தொடங்கும். மிகவும் மறைமுகமான முறையில் அது கொஞ்சம் கொஞ்சமாக வளரும். உதாரணத்திற்கு, செருப்பு தைக்கும் வேலை. அது ஒரு தியானம். ஏனென்றால் செருப்பு தைக்கும் வேலையை மட்டுமே செய்யுமாறு சீடனிடம் சொல்லப்படுகிறது. எந்தச் சிந்தனைக்கும் அங்கு அனுமதியில்லை.

இதனை நினைவில் வைத்துக் கொள். உங்கள் கைகளுக்கு நீ வேலை தரும்போது, மனம் வெறுமையாக இருப்பதற்கு அதிக வாய்ப்புகள் உள்ளன. மனத்தோடு சேர்ந்து நீ வேலை செய்யும்போது இந்த வாய்ப்பு குறைந்துவிடுகிறது. காரணம், மனம் யோசிக்கிறது, சிந்தனை செய்கிறது.

சூஃபிக்கள் கைகளைக் கொண்டு வேலை செய்கிறார்கள். நெசவு, செருப்பு, தச்சு வேலை போன்ற எந்த வேலையாக இருந்தாலும், அவர்கள் கைகளைக் கொண்டே வேலை செய்கிறார்கள். மூளையும் கைகளும் இரண்டு துருவங்கள். சக்தி கைகளின் வழியாக நகரும் போது, கூடவே மூளை அமைதி அடைகிறது. இது பல வருடம் பன்னிரண்டு வருடம் என நீண்டகாலம் நீடிக்கிறது. நீ வெறுமனே கைகளால் வேலை செய்யும் போது, நீ மூளையை முற்றிலும் மறந்து விடுகிறாய். அதற்குத் தேவை ஏற்படுவதில்லை. மூளை செயலற்ற நிலைக்கு மாறுகிறது. இதுதான் ஒரு சீடனுக்குத் தேவையான விஷயம். செயலற்ற நிலையில் மூளை இருக்க வேண்டும். மனம் என்பது மனமற்ற நிலைக்கு மாறவேண்டும். சிந்தனைகள், கனவுகள், யோசனைகள் இவை எதுவுமின்றி முழுமையான வெறுமையுடன் இருக்க வேண்டும்.

சீடன் கற்றுக்கொள்பவனாக இருக்கும்போது, செருப்பு தயாரிக்கும் வேலையைச் செய்து கொண்டிருக்கும் போது, அவனுடைய மூளையில் என்ன நடைபெற்றுக் கொண்டு இருக்கிறது என்பதை சக்தி முழுவதும் கைகளில் நகர்கிறதா என்பதை குரு கவனித்துக் கொண்டே இருக்கிறார்.

நீ கைகளால் வேலை செய்து கொண்டிருக்கும்போது அதே சக்தி தலையிலிருந்து நகர்கிறது என்பதை சரீர சாஸ்திர வல்லுநர்கள் இப்போது ஒப்புக்கொள்கிறார்கள். சக்தி என்பது அதேதான். உன்னுடைய வலது கை இடது பக்க மூளையுடன் சேர்ந்து இருக்கிறது. உன்னுடைய இடது கை வலது பக்க மூளையுடன் சேர்ந்து இருக்கிறது. இதை முயற்சி செய். எப்போதெல்லாம் நீ அதிகமாகச் சிந்திப்பதாக உணர்கிறாயோ, எப்போதெல்லாம் உன்னால் அதை நிறுத்த முடியாது என்று உணர்கிறாயோ,

அப்போதெல்லாம், உன்னுடைய இரண்டு கைகளையும் வேகமாகத் தேய்த்துக்கொள். அவை உஷ்ணமாகும் வரை தேய். மூளையின் செயல்பாடு நின்றுவிட்டதாக நீ உணர்வாய். உன் கைகளில் சக்தியின் ஓட்டம் நடைபெறுவதை நீ உணர்வாய்.

தூக்கமின்றித் தவிக்கும் மக்களுக்கு, இதுவரை அவர்கள் அறிந்திராத மிகச் சிறந்த மருந்தாக இது புலப்படும். உன் கண்களை மூடிக்கொண்டு, உன் கைகளை நன்றாகத் தேய்த்துக் கொண்டிரு. அவை உஷ்ணம் அடைவதாக, மேலும் உஷ்ணம் அடைவதாக மேலும் மேலும் உஷ்ணம் அடைவதற்கு எண்ணிக் கொள் - நீ தேய்ப்பதால் கைகள் உஷ்ணம் அடைகின்றன - அவற்றில் சூடு பரவுவதை உன் கற்பனையிலும் நினைத்துக் கொள். கைகள் எப்போது உஷ்ணம் அடைகிறதோ, அப்போது உன் தலை குளிர்ந்து விடும். இவை இரண்டும் இரண்டு துருவங்கள்.

கைகள் வெப்பமாக இருக்க வேண்டும்,தலை குளிர்ச்சி யாக இருக்க வேண்டும். மிக அதிகமாகச் சிந்திக்கும் போது, தலையில் உஷ்ணம் உண்டாகும். இது நல்லதல்ல. நீ சித்த பிரமையை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறாய் என்று அர்த்தம். உன்மூளை அதன் போக்கில், தன்னிச்சை யாக செயல்படும் ஒரு காலகட்டம் வரும். மூளைக்கும், உடலின் மற்ற எந்தப் பாகத்திற்கும் எந்தத் தொடர்பும் இருக்காது. அந்தக் காலகட்டம் தான் சித்த பிரமை என்பது. உடலின் ஒரு பாகம் மட்டும் சுய அதிகாரம் பெற்று விடும். ஒரு பாகம் மட்டும் சற்று அதிகாரத்துடன் செயல்படும்.

ஜப்பானில் உள்ள ஜென் குருக்கள் எப்போதும் கைகளாலேயே வேலை செய்து கொண்டிருப்பார்கள். அரபு நாடுகளில் உள்ள சூஃபி குருகளும், எப்போதும்

கைகளாலேயே வேலை செய்வர். கைகளைக் கொண்டு ஏதைச் செய்தாலும், அவை எப்போதும் அழகானதாகவே இருக்கும். அது உன் மூளையின் சக்தியைக் கீழ்நோக்கிக் கொண்டு வரக்கூடியது.

வருடக்கணக்கில் உன் கைகளைக் கொண்டு நீ வேலை செய்யும்போது நீ தலை இல்லாதவனாகி விடுகிறாய். தலை என்னும் உடற்பாகம், பெயரளவுக்கு மட்டுமே இருக்கும். ஆனால், சக்திப் பகுதி, சிந்திக்கும் பகுதி மறைந்து விடும். நீ தலை இல்லாதவனாக மூளை இல்லாதவனாக ஆகிறாய்.

ஒரு சீடன் என்பவன் வருடக்கணக்கில் குருவுடன் இருக்க வேண்டும். உணர்வு ரீதியான நம்பிக்கை இல்லா விட்டால், இது கடினம். ஏனென்றால் இந்த மனிதன் குருவா, இல்லையா என்பது யாருக்குத் தெரியும்? அவர் முழுமை அடைந்து விட்டாரா, இல்லையா என்பது யாருக்கு தெரியும்? மதிப்பிடுவது எப்படி? ஆனால், உணர்வு ரீதியான நம்பிக்கையை எப்போதும் நீ கொண் டிருந்தால், குரு மீது ஓர் உள்ளார்ந்த கவர்ச்சி உண்டாகும். சில சமயங்களில், காதலர்களிடம் ஓர் உள்ளார்ந்த கவர்ச்சி ஏற்படுமே, அதைப்போல. ஆனால், இந்தக் கவர்ச்சி, அத்தி பூத்தாற்போல, எப்போதாவதுதான் நிகழக்கூடியது. ஏனென்றால், காதலர்கள் எப்போதும் சரண் அடைவ தில்லை. அவர்கள் அதைப் பற்றிப் பேசுவார்களே தவிர, தாங்கள் சரண் அடைந்துவிட்டதாகக் கூறுவார்களே தவிர, உண்மையில் அவர்கள் சரண் அடைவதில்லை. சரணாகதி என்னும் நாடகத்தை ஒருவருக்கொருவர் நடத்திக் கொள் வார்கள். இந்தச் சரண நாடகம் ஒரு வேளை தந்திரமாகக் கூட இருக்கலாம். ஆனால், மோதல் என்பது, காதலர்களி டையே தொடர்ந்து கொண்டேதான் இருக்கும்.

எப்போதேனும், ஆனால், சில சமயங்களில் அது நடைபெறவும் கூடும். இரண்டு காதலர்கள், ஆத்மாத்த மாகக் காதலித்தால், அவர்கள் இருவரிடையே ஓர் உள்ளார்ந்த கவர்ச்சி உண்டாகும். அவர்கள் இருவரும் ஒருவர் ஆசிவிடுவார்கள். பிரபஞ்ச இருப்புக்குள் ஒரு பாலம் வரும். உடல்கள் இரண்டாக இருக்கும். அப்போது அவர்களின் உள்ளார்ந்த ஜ்வாலைகள் நெருங்கி வந்து ஒன்றோடு ஒன்று கவர்ந்துவிடும். காதலில் இது அரிதாக நடைபெறக் கூடியது. அதுவும் ஒரு சில கணங்கள் மட்டுமே - மறுபடியும் ஜுவாலைகள் பிரிந்து விடும், பின்னர் மீண்டும் சேர்ந்து கொள்ளும், பின்னர் மீண்டும் விலகிவிடும். இது இப்படியே தொடரும். ஆனால், சீடனுக்கும், குருவுக்கும் இடையே நெருக்கம் உண்டாகும் போது, அந்த நெருக்கம் மேலும், மேலும் அதிகரித்துக் கொண்டேயிருக்கும். ஒரு கணத்தில் , இரண்டு உடல்கள் மட்டுமே இருக்கும்போது, எங்கோ ஓர் உள்ளார்ந்த உலகத்தில், இந்த இருப்புகள் இரண்டறக் கலந்து விடும். ஜுவாலையின் பாய்ச்சல் நிகழ்ந்துவிடும்.

ஒரு குருவிடமிருந்து கற்றுக்கொள்வதென்பது, அவரோடு இருப்பது எப்படி என்பதை கற்றுக் கொள்வது, ஒரு குருவிடம் கற்றுக் கொள்வதென்பது, உன் சுயத்திலிருந்து விடுபடுவதைக் கற்றுக் கொள்வது.

ஆஃமீகக் கல்வி என்பது மற்ற கல்வியையோ, அல்லது நல்லொழுக்கத்தையோ போன்று அல்லாமல், முற்றிலும் வேறு கோணத்தில் கற்றலாகும். மற்ற வகைக் கல்வியில், நீ அப்படியே தான் இருப்பாய். பலவிதச் செய்திகளை உனக்குள்ளே சேமித்துக் கொண்டிருப்பாய். நீ பூகோளத்தைக் கற்றுக் கொள்ள விரும்பினால், அதற்கான ஆசிரியரிடம் சென்று உன்னால் கற்றுக் கொள்ள முடியும்.

உன் பூகோள அறிவு விருத்தி அடைந்து கொண்டே இருக்கும். ஆனால், நீ அப்படியேதான் இருப்பாய். ஆனால், உன்னுடைய இருத்தல், இருத்தலின் தன்மை, உன்னுடைய இருத்தலின் நிலைப்பாடு, எந்த மாறுதலும் அடையாமல் அப்படியேதான் இருக்கும்.

நீ ஆன்மிகம் அல்லது உண்மையைக் கற்றுக் கொள்ள முற்படுவது வித்தியாசமானது. அது செய்திகளின் தேக்க மல்ல. அது உன்னுடைய அறிவை விருத்தி செய்வதல்ல, அது உன்னுடைய இருத்தலின் வளர்ச்சி. நீ அதிகமாகத் தெரிந்து கொள்வதல்ல. ஆனால் நீயே அதிகமாகிறாய். அது உன்னுடைய நினைவாற்றலைக் கூர்மைப் படுத்தும் வேலையைச் செய்யாது. உன் இருத்தல், உன் முழுமை யான இருத்தல், மேலும், அமைதி அடைந்து பரம சுகம் உண்டாக்கக் கூடியது.

மதம் என்பது இருத்தலைக் கற்றுக் கொள்வது, மற்ற கல்வி அனைத்தும், வெறுமனே நினைவாற்றலுக்கும் பயிற்சி அளிப்பவையே. மற்ற அப்பியாசங்கள் அனைத் தும் உன் அறிவை வளர்க்கும். ஆனால், மதம் உன்னை அறிய வைக்கும். ஆனால், அறிவைத் தராது. அறிவது, பார்க்கும் வல்லமையைப் பெறுவது, இவற்றிற்கு அபரிமிதமான சக்தி அவசியம். இந்த வித்தியாசத்தை முதலில் புரிந்துகொள்ள வேண்டும். அப்போதுதான் இந்த உரையாடலை சக்தி வாய்ந்த இந்தச் சிறிய உரையாடலை நீ புரிந்து கொள்ள முடியும்.

*சூஃபி குருவான லிப்னானியிடம் ஒருவன் வந்தான். அவர்கள் இருவருக்குமிடையே, கீழ்க்கண்ட உரை யாடல் இடம் பெற்றது.*

***அவன்:*** *நான் கற்றுக் கொள்ள விரும்புகிறேன். எனக்குக் கற்றுத் தருகிறீர்களா?.*

அந்த மனிதன் தன் ஆசையை வெளிப்படுத்துகிறான். அவன் ஆசைப்படுவது நியாயம்தான். ஆனால், போது மானதாக இல்லை. நீ ஆசைப்படலாம், ஆனால், நீ தயாராக இருக்கிறாய் என்பது அர்த்தமல்ல. உன்னுடைய ஆசை வெறுமனே ஒரு கனவாகக் கூட இருக்கலாம். தவறான காரணங்களாய், அந்த ஆசை உனக்கு ஏற்பட்டிருக் கலாம். அந்த ஆசையின் பின்னணியில் மன உறுதி இல்லா மல் இருக்கலாம். உன்னுடைய ஆசை, ஒரு பிச்சைக்காரன் கொள்ளும் ஆசையைப் போன்று இருக்கலாம் - ஆனால், உண்மை என்பது பிச்சைக்காரனுக்கு சாத்தியமில்லாத ஒன்று. உன்னுடைய ஆசை குழந்தைத்தனமாக இருக் கலாம். ஒரு விபத்தாகக் கூட இந்த எண்ணம் உனக்கு ஏற்பட்டிருக்கலாம். உண்மையை, கடவுளைப் பற்றி அறிய வேண்டுமென்ற எண்ணம் உண்டாகியிருக்கலாம்.

ஆசை என்பது கொழுந்து விட்டு எரிய வேண்டும். அப்படி இல்லையெனில் அந்த ஆசை பலவீனமாகவே இருக்கும். இதைத்தான் ஸ்ரீ அரவிந்தர் அபிப்சா (ABIPSA) என்கிறார். உன்னை முழுமையாக ஆக்கிரமிக்கக் கூடிய கனல் கக்கும் ஆசை என்பதே அபிப்சாவின் அர்த்தம். அதைத் தவிர வேறு எந்த எண்ணமும் இருக்காது. உன் எண்ணங்களின் ஒரு பகுதியாக அந்த ஆசை இருக்கக் கூடாது. உன்னுடைய எண்ணங்கள் முழுவதிலும் அந்த ஆசை ஆக்கிரமித்திருக்க வேண்டும். அந்த ஆசை உன் னுடைய இருத்தலாக மாறும். அதுதான் அபிப்சா எனப்படு கிறது. அது முழுமையானது; அதுதான் ஒட்டுமொத்த சரணாகதி நிலை.

ஆசை என்பது மனதின் மேற்புறத்தில் எழக்கூடிய ஒரு சிற்றலைதான். நீ சாலையில் போய்க் கொண்டிருக்கும் போது ஓர் அழகான ரோல்ஸ் ராய்ஸ் கார் உன்னைக் கடந்து சென்றால், அதுபோன்ற ரோல்ஸ் ராய்ஸ் காரை வாங்க வேண்டுமென்கிற ஆசை உனக்கு ஏற்படும்.

ஓர் அழகான பெண்ணைப் பார்க்க நேரிடுகிறபோது அவள் மீது உனக்கு ஆசை ஏற்படுகிறது. ஆசை என்பது வெளிப்படிப்பில் தோன்றி மறையக் கூடிய ஒரு சிற்றலை தான். இது போன்ற பலவீனமான வழிகளில் ஆசைப்படு பவர்களுக்கு, உண்மையின் வெளிப்பாடு சாத்திமில்லை. நீ முழுமையை அடைந்தால் மட்டுமே, அது உனக்குச் சாத்தியப்படும். உண்மைக்கு நீ முழுமையாக இருக்க வேண்டும்.

உண்மை என்பது ஒரு பெண்ணைப் போன்றது. உன்னை முழுமையாக ஆக்கிரமிக்கவே அது விரும்பும். உண்மை எந்தப் போட்டியாளரையும் சகித்துக் கொள்ளாது. அது பொறாமை கொண்டது. உண்மையைத் தேடும் உன்னுடைய ஆசை என்பது, நீ கொண்டிருக்கும் நூறு ஆசைகளில் ஒன்றாகத் திகழ்ந்தால், நீ உண்மையை அறிந்து கொள்ளத் தயார் நிலையில் இல்லை என்று அர்த்தம். எப்போது நூறு ஆசைகளும் மறைந்து ஒரே ஓர் ஆசை மட்டும் உனக்கு எஞ்சி இருக்கிறதோ, எப்போது, அந்த ஓர் ஆசையில் மற்ற எல்லா ஆசைகளும் மறைந்து விடுகிறதோ, அப்போது அது அபிப்சா ஆகிறது.

கொழுந்துவிட்டு எரியும் ஆசையாக, முழுமையான ஆசையாக அது மாறுகிறது. உன்னுடைய முழு இருத் தலும் ஜுவாலையாக, கனலாக மாறுகிறது நீ எதையும் எல்லாவற்றையும் பணயம் வைக்க தயாராகிறாய்.

அவன் கூறினான்: நான் கற்றுக்கொள்ள விரும்புகிறேன்.

நீ வெறுமனே விரும்புவதால் மட்டுமே கற்றுக் கொள்ள முடியாது. அன்றாடம் இது நிகழ்கிறது. அதாவது மக்கள் என்னிடம் வருகிறார்கள். கடவுள், தியானம். அது இது என்று பல விஷயங்களைப் பற்றிக் கேட்கிறார்கள். நான் அவர்களின் கேள்விகளுக்கு உடனடியாகப் பதில்

அளிக்காவிட்டால், வேறு ஏதேனும் பற்றிக் கேட்கிறார்கள். நான் அவர்களிடம் ஏதாவது சொல்லிக் கொண்டிருக்கும் போது, ஒரு சில வினாடிகளில், கடவுளைப் பற்றி அவர்கள் கேட்க எண்ணியதை மறந்துவிடுகிறார்கள். இது வெறுமனே ஏற்பட்ட ஓர் ஆசை. மனதில் தோன்றிய பிரமை. அது, ஆழமாக வேரூன்றப்படாத ஒரு விருப்பம். உதாணத்திற்கு, நீ மிகுந்த தாகத்துடன் என்னிடம் வந்து தண்ணீர் கேட்கிறாய் என்று வைத்துக் கொள். நான் உனக்குத் தண்ணீர் தராமல் பிற விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தால், அந்த விஷயங்கள் உன்னுடைய தாகத்தைத் தணிக்காது. மாறாக, நான் பேசிக் கொண் டிருக்கும் போது, உன்னுடைய தாகம் அதிகரித்துக் கொண்டேயிருக்கும். நான் பேச ஆரம்பிக்கும் போதெல் லாம், நீ மீண்டும், மீண்டும் ''எனக்குத் தாகமாக இருக் கிறது, ஒரு டம்ளர் தண்ணீர் கொடுங்கள்'' என்று கேட்டுக் கொண்டே இருப்பாய். நான் தொடர்ந்த பேசிக்கொண்டே இருந்தால் உன்னுடைய தாகமும் அதிகரித்துக் கொண்டே இருக்கும். நான் பேச்சை எங்காவது நிறுத்தும் போது, ''நான் இறந்து விடுவேன், தயவு செய்து ஒரு டம்ளர் தண்ணீர் கொடுங்கள்'' என்று கூறுவாய்.

நீ என்னிடம் வந்து கடவுளைப் பற்றிப் பேசும் போதும், கடவுளை அறிந்து கொள்வதில், உனக்குள்ள விருப்பத்தை நீ வெளியிடும்போது, நான் உன் உடல்நிலை பற்றி, உன் மனைவி, குழந்தைகள் பற்றி விசாரித்தால் உடனே நீ கடவுளை மறந்துவிடுகிறாய். பிறகு என்னுடன் ஒரு மணிநேரம் இருக்கிறாய். ஆனால், கடவுளைப் பற்றி ஒரு வார்த்தை கூடப் பேசுவதில்லை.

உன்னுடைய ஆசையில் தாகம் இல்லை. அது ஒரு நீர்க் குமிழியைப் போலத் தோன்றி மறைந்து விடுகிறது. அது காற்று அசைவதைப் போன்றது. அது வேரூன்றப் படாத ஆசை. அது மனதின் வெளிப்பரப்பில் தோன்றி மறையக்

கூடிய ஒரு சிற்றலை தான், நீ சாலையில் போய்க் கொண்டிருக்கும்போது, ஒரு சந்நியாசியைப் பார்க்கிறாய். அவர் அணிந்திருக்கும் காவி உடையைப் பார்க்கும்போது, உன் மனதில் ஓர் ஆசை தோன்றுகிறது. உடனே, உனக்கு சந்நியாசத்தைப் பற்றி தெரிந்து கொள்ள ஆசைப்படுகிறாய். இதற்கு முன் நீ சந்நியாசத்தை நினைத்துக் கூடப் பார்த்த தில்லை. அந்த எண்ணம் உன் கனவில் கூடத் தோன்றிய தில்லை. அதற்கு முன்னர், நீ சந்நியாசத்தைத் துளி கூட ஆசைப்பட்டதில்லை. சாலையில் ஒரு சந்நியாசியைப் பார்த்தபோது, சட்டெனத் தோன்றிய ஆசைதான் அது. திடீரென்று வீசிய காற்றினால் ஏற்பட்ட சிற்றலை தான் அது. இந்தப் பைத்தியக்காரக் காவி உடை மனிதர்கள் என்ன செய்கிறார்கள் என்பதை நீ சிந்தித்துப் பார்க்கத் தொடங்குகிறாய்.

தியானம் என்றால் என்ன? நீ என்னிடம் வந்து தியானத்தைப் பற்றிக் கேட்கிறாய். ஆனால், அதைப் பற்றித் தெரிந்து கொள்ளும் உள்ளார்ந்த ஆவல் உனக்கு ஏற்படவில்லை. அதைப் பற்றி எதுவுமே தெரியாமல் நீ கேட்கிறாய். பொருள்களை மார்க்கெட்டிலிருந்து வாங்கி வீட்டிற்கு எடுத்துச் செல்வதைப் போல, தியானத்தை என்னிடமிருந்து வீட்டிற்கு எடுத்துச் செல்லலாம் என்று நீ எண்ணிக் கொள்கிறாய்.

தியானத்திற்கு நீண்டகால ஆயத்தம் தேவை. தியானம் உன்னை முழுமையாக மாற்றக்கூடிய வல்லமை கொண்டது.

ஒரு பெண்மணி என்னிடம் வந்தாள். அவள் இந்தியா வின் மிகப்பெரும் பணக்காரக் குடும்பங்களில் ஒன்றைச் சேர்ந்தவள். அவள் தியானம் செய்ய விரும்புவதாக என்னிடம் கூறினாள். ஆனால், தான் தியானம் செய்யத் தொடங்கினால், தன் வாழ்க்கையில் ஏதேனும் பிரச்சினை ஏற்படுமா என்று அவள் கேட்டாள்.

''எந்த மாதிரிப் பிரச்சினைகளை நீங்கள் கூறு கிறீர்கள்?'' நான் கேட்டேன்.

தனக்குக் கணவரும், குழந்தைகளும் பெரிய குடும்ப மும் இருப்பதாக அவள் தெரிவித்தாள். அவள் தியானம் செய்யத் தொடங்கினால், குடும்பத்தில் பிளவு ஏற்படுமா என்று கேட்டாள்,. ஏனென்றால், அவளுடைய கணவருக்குத் தியானத்தில் சற்றும் விருப்பமில்லை. விருப்பமில்லாதது மட்டுமல்ல, அவர் அதை எதிர்ப் பவரும் கூட, ''நான் என் கணவருக்குத் தெரியாமல் தான் வந்திருக்கிறேன். அவருக்குத் தெரியாமல் என்னால் தியானிக்க முடியும். ஆனால், என்னுடைய குடும்ப வாழ்க்கையில் எந்த வகையிலும் எந்தப் பாதிப்பும் ஏற்படாது என்பதற்கு உத்தரவாதம் வேண்டும்.''

அந்தப் பெண்மணி, தன்னுடன் இன்னொரு பெண்ணை அழைத்து வந்திருந்தார். அவருடன் வந்த அந்தப் பெண் கூறினாள், ''என்ன உளறுகிறாய்? தியானம் உனக்கு நல்லதைத் தான் செய்யும். தியானத்தினால் உனது நிம்மதியும் மகிழ்ச்சியும் மேலும் அதிகமாகும் - அது எவ்வாறு உன் வாழ்க்கையைப் பாதிக்க முடியும்? உன்னுடைய வாழ்க்கை மேலும் மேன்மை அடையும்.

அவர்கள் இருவரும் பேசிக் கொண்டிருப்பதை நான் கவனித்துக் கொண்டிருந்தேன். பிறகு, அந்தப் பெண்மணி கூறினாள், ''சரி, அப்படியானால் நான் தயார்.''

நான் அவர்களிடம் கூறினேன், ''நீங்கள் நினைப்பது போல, இது அவ்வளவு சுலபமான விஷயம் அல்ல. ஏனென்றால், உனக்கு ஏற்படக்கூடிய நல்லது, கெட்டது இங்கு முக்கியமல்ல. நீ மாறினால் உன் குடும்ப உறவில் பாதிப்பு ஏற்படத்தான் செய்யும்,''

சில நேரங்களில் நான் கவனித்திருக்கிறேன், உன் னுடைய உணர்வு நிலை கீழே இறங்கினால், அது குடும்ப

உறவில் பெரிய பாதிப்பை ஏற்படுத்துவதில்லை. ஆனால், உன்னுடைய நிலைமை உயர்ந்தால், நீ மென்மேலும் வளர்ந்தால் உன்னைச் சார்ந்தவரின் சுயநல உணர்வு காயப்படுத்தப் படுகிறது.

ஒரு கணவன் தியானம் செய்யத் தொடங்கும்போது, மனைவின் சுயநல உணர்வு காயப்படுத்தப் படுகிறது. தன் கணவன் தன்னைக் கடந்து செல்கிறான், அது மட்டு மல்லாமல் தன்னை விட்டு நீங்கிச் செல்கிறான், என்ற எண்ணம் மனைவிக்கு ஏற்படும். கணவன் அமைதியாக இருக்கத் தொடங்குவான். தன் மனைவி கோபப்படும் போது கணவன் எந்தவித எதிர்வாதமோ, கோபமோ படாமல் அமைதியாக இருக்கக்கூடும். இது மனைவியின் கோபத்தை மேலும் அதிகரிக்கக் கூடும். அவள் யோசிப்பாள், ''இவர் தன் மனதில் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறார். சாமியாராக ஆகிவிட்டாரா?''

நீ முன்பிருந்த நிலைக்கு, அதாவது உன்னைக் கீழ் நோக்கி இழுக்க அவள் முயற்சிப்பாள். உன்னுடைய கோபம் அவளுக்குப் தெரியும். ஆனால் உன்னுடைய இந்த அமைதி அவளுக்கு பழக்கமற்றது. அவளுக்கு நீ வித்தியாச மாகத் தென்படுவாய். அவளுடைய கணவனைப் போல நீ நடந்துகொள்ள மாட்டாய். நீ முற்றிலும் மாறுபட்ட மனிதனாக விளங்குவாய். நீ தியானத்தில் மேலும் மேலும் மூழ்கும்போது, நீ மேலும் மேலும் சுதந்திரம் அடைகிறாய் - தான் கீழே இறக்கப்பபட்டு விட்டதாக, மனைவிக்கு எண்ணம் உண்டாகும். இதை அவளால் சகித்துக் கொள்ள முடியாது.

தன் கணவன் குடிகாரனாக இருந்தாலும் பரவா யில்லை, பெரிதாக எந்தப் பாதிப்பும் ஏற்பட்டுவிட வாய்ப் பில்லை. மாறாக, தன் கணவனைவிடத் தான் உயர்வாகக் காட்சியளிப்பதால், அவளுக்கு மகிழ்ச்சியாகவே

இருக்கும். தன் கணவனைக் கண்டிக்க முடியும், அவன் மீது கோபப்பட முடியும், அவனோடு சண்டை போட முடியும், அவனை அறிவுறுத்த் முடியும், அவனுடைய குடிப்பழக்கத்தைக் காரணமாகக் காட்டி, அவனை எப்போதும் குற்றவாளியாகவே வைத்திருக்க முடியும். ''நீ குடிப்பதால் என்னையும் குழந்தைகளையும் மொத்தக் குடும்பத்தினரையும் சீரழிக்கிறாயே'' என்று கணவனை அடிக்கடி குற்றம் சாட்ட முடியும். உன் நிலைமை கீழே இறங்கினால், மனைவிக்கு மகிழ்ச்சி உண்டாகும். இந்த ஒப்பீட்டு உணர்வு எப்போதும் இருப்பது. ஒரு குடிகாரன் சகித்துக் கொள்ளப் படுவான். கணவன் விபச்சாரியிடம் செல்வது கூடச் சகித்துக்கொள்ளப்படும். ஆனால், ஒரு கணவன் தியானிக்கத் தொடங்கினால், ஆன்மிகவாதியாக மாறினால், எந்த மனைவியும் பொறுத்துக்கொள்ள மாட்டாள். அந்தச் சகிப்புத் தன்மை எந்த மனைவிக்கும் இருக்காது. அது அவளைக் காயப்படுத்தும், ஆழமாகக் காயப்படுத்தும்.

நான் அந்தப் பெண்ணிடம் கூறினேன், ''எனக்குத் தெரிந்தவரை, நீ தியானம் செய்யத் தொடங்கினால், அது பிரச்சினைகளை உருவாக்கும். நீ அமைதியாக இருப்பாய், நீ மகிழ்ச்சியாக இருப்பாய், ஆனால், தான் கீழே தள்ளப்பட்டு விட்டதாக உன் கணவன் நினைப்பான். உங்கள் இருவருக்கிடையே இடைவெளி உண்டாகும். உங்களுக்குள் நிலவிய சமதள மனப்பாங்கு மாறும். நீ விலகிச் செல்லத் தொடங்குவாய்.''

உடனே அவள் கூறினாள், ''சற்றுப் பொறுங்கள், நான் தியானம் செய்ய விரும்பவில்லை. எந்த அமைதியும், எந்தப் பிரார்த்தனையும், எதுவும் எனக்குத் தேவையில்லை. என்னுடைய வாழ்க்கையில் நான் மகிழ்ச்சியாக இருக்கிறேன். அதனைச் சிதைத்துக்கொள்ள நான் விரும்பவில்லை.''

இதுதான் ஆசை என்பது. நீ சிலவற்றை அடைய விரும்புகிறாய். ஆனால், உன்னுடைய வாழ்க்கையில் எந்த விதப் பாதிப்பும் ஏற்படாத வகையில், அவற்றை அடைய விரும்புகிறாய். ஆனால் ஏதாவது ஒரு வகையில் பாதிப்பு ஏற்படுத்தாமல் எந்த மதிப்புமிக்க விஷயங்களையும் உன்னால் அடைய முடியாது. அதற்கு வாய்ப்பே இல்லை. உண்மை என்னவென்றால், அதிகமான அற்புதங்கள் அதிக மான பாதிப்பை உண்டாக்கும். உனக்குக் கடவுள் வேண்டு மென்றால், அனைத்தையும் நீ ஒப்படைக்க வேண்டி யிருக்கும். சீடனாக மாற வேண்டுமானால் உன்னிடம் உள்ள அனைத்தையும் நீ சரணளித்துவிட வேண்டும். அந்தச் சரணாகதி மட்டுமே, இருப்புணர்வு நியை மாற்றத்துக்கான ஒரே வழி.

புத்தர் மற்றும் மகாகாஷ்யப் கதைகளை நான் மீண்டும் மீண்டும் சொல்லிக் கொண்டிருக்கிறேன். ஏனெனில், அவற்றில் பலகோண அர்த்தங்கள் பொதிந்துள்ளன. ஒரு நாள் காலைப்பொழுதில், புத்தர் தம் கையில் ஒரு மலருடன் ஒரு மரத்தின் அடியில் அமர்ந்திருந்தார். அவருடைய உபதேசத்தைக் கேட்பதற்காக சந்நியாசிகள் ஆவலுடன் காத்துக் கொண்டிருந்தனர் - பத்தாயிரம் பிட்சுக்கள் அங்குக் குழுமியிருந்தனர். வெப்பம் அதிகரித்துக் கொண்டே இருந்தது. சூரியன் தலையின் உச்சிக்கு வந்துவிட்டான். ஆனால், புத்தர் அந்த மலரைப் பார்த்தபடி, அமைதியாக அமர்ந்திருந்தார். அப்போது, மகா காஷ்ய என்ற பெயர் கொண்ட சீடன் உரக்கச் சிரிக்கத் தொடங்கினான். வயிறு குலுங்க சிரித்த அவன் சிரிப்பொலி பலமாகக் கேட்டது.

அங்கிருந்த அனைவரும் மகா காஷ்யப்பைப் பார்த் தார்கள். அவனுடைய சித்தம் கலங்கிவிட்டதா? அந்தக் காலைப் பொழுது வித்தியாசமாகக் காட்சி அளித்தது.

புத்தர் அதற்குமுன், அப்படி இருந்தது கிடையாது - அவர் எப்போதும், அங்கு வந்ததும் உபதேசம் செய்வது வழக்கம். அன்று, அவர் கையில் ஒரு மலருடன் அமர்ந்தபடி, அந்த மலரையே பார்த்துக் கொண்டிருந்தார். அங்குக் கூடியிருந்த பத்தாயிரம் சீடர்களையும் அவர் மறந்துவிட்டதாகப் புலப்பட்டது.

பிறகு என்ன நடந்தது? இப்போது மகாகாஷ்யப் சிரித்துக் கொண்டே இருக்கிறான் - இதற்கு முன் அவன் இப்படிச் சிரித்தது கிடையாது. அந்தளவுக்கு அவன் அமைதியானவன். இன்னும் சொல்லப் போனால், இதற்கு முன் அவனை எவரும் அறிந்திருக்கக்கூட இல்லை. பொது இடத்தில் அவன் இப்படி நடந்துகொள்வது இதுவே முதல் முறை. அவன் அமைதியே வடிவமாக, ஒரு நிழலைப் போல வாழ்ந்தவன். அவன் இருப்பது கூட எவருக்கும் தெரியாது. அவனால் எப்போதும் எந்தத் தொல்லையும் ஏற்பட்டதில்லை. நீ இருப்பதைப் பிறருக்கு உணர்த்த நினைப்பதற்குப் பெயர் பலாத்காரம். பிறருடைய கவனத்தை நீ இழுக்க முயற்சிக்கிறாய். இந்த மனிதனைப் பற்றி ஒருவருக்கும் தெரியாது. இவனுக்கு என்ன ஆயிற்று? பைத்தியம் பிடித்து விட்டதா?

புத்தர் தலை நிமிர்ந்து பார்த்தார். மகாகாஷ்யப்பைத் தன் அருகில் அழைத்தார். அவரிடம் அந்த மலரைக் கொடுத்து, இப்படிக் கூறினார், ''வார்த்தைகள் மூலம் எவற்றை எல்லாம் தர முடியுமோ, அவை அனைத்தையும் மற்றவர்க்குக் கொடுத்துவிட்டேன். வார்த்தைகளால் புலப்படுத்த முடியாதவற்றை உனக்குத் தருகிறேன் மகாகாஷ்யப்.''

ஜென்னில் இதனை சாஸ்திரங்களுக்கு அப்பாற்பட்ட நிலைமாற்றம், வார்த்தைகளுக்கு அப்பாற்பட்ட நிலை மாற்றம் என்று சொல்வார்கள்.

மகாகாஷ்யப்பிடம் என்ன கொடுக்கப்பட்டது? இன்றும் ஜென் மடாலயங்களில் குழம்பிக் கொண்டிருக் கிறார்கள். இப்போதும், புத்த சந்நியாசிகள் இதைப் பற்றி ஆழ்ந்து யோசித்துக் கொண்டிருக்கிறார்கள். அந்தக் காலைப் பொழுது நிகழ்ச்சி நடந்து, இருபத்தைந்து நூற்றாண்டுகள் கடந்துவிட்டன. மிகப்பெரிய தத்துவ ஞானிகள், இதைப்பற்றி இன்னமும் சிந்தித்துக் கொண்டிருக்கிறார்கள். அந்தக் காலைப் பொழுதில் என்ன நிகழ்ந்தது? நிலைமாற்றம் அடைந்த நிகழ்ச்சி அது. அது ஒரு மலரின் இடப்பெயர்ச்சி அல்ல. மலர் என்பது வெறுமனே ஓர் அடையாளம்தான். புத்தரின் மொத்த இருப்புணர்வும் மகா காஷ்யப்பிடம் இடம் பெயர்ந்த நிகழ்ச்சி அது. ஆனால், புத்தர் மகா காஷ்யப்பிடம் செல்ல வில்லை. அவர் அப்படியேதான் இருந்தார். அதாவது, எரிந்து கொண்டிருக்கும் ஒரு விளக்கினை, எரியாத ஒரு விளக்கின் அருகில் கொண்டு வந்தால், உடனடியாக, எரிகின்ற விளக்கின் சுடர், எரியாத விளக்கின் மேல் சட்டெனத் தாவி விடுவதைப் போல. ஏற்கெனவே எரிந்து கொண்டிருக்கும் விளக்கு அப்படியே தான் இருக்கும். எந்த இழப்பும் ஏற்படாது. ஒரு துளிகூட இழப்பில்லை. அதே சமயத்தில், இப்போது ஒரு புதிய விளக்கு எரிந்து கொண்டிருக்கிறது. அந்தக் காலைப்பொழுதில் நிகழ்ந்தது, இப்படிப்பட்டதுதான். அது உண்மையின் பாய்ச்சல்.

புத்தர் அந்த மலரைக் கொடுத்தது அடையாளத்துக் காக. பூரணமான பிரக்ஞையின் அடையாளச் சின்னமாக, அந்த மலர் இந்தியாவில் தங்கிவிட்டது. தாமரை மலர் என்பதன் அர்த்தம், பிரக்ஞை உணர்வு பூரணமாகப் பொழிவது, பேரண்டம் முழுவதும் நறுமணம் வியாபித்து நிற்பது. அந்தக் காலைப் பொழுதில் புத்தர் தாவினார். புத்தரின் ஜ்வாலை மகாகாஷ்யப்புக்குள் தாவியது. இப்படித்தான் உண்மையின் நிலைமாற்றம் நிகழ்கிறது.

வெறுமனே அதற்கு நீ ஆசைப்படுவதால், அது உனக்குக் கிட்டாது. நீ ஆசைப்பட வேண்டும், ஆழமாக ஆசைப்பட வேண்டும், நீ ஆசையாக மாறவேண்டும். அந்த ஆசை நெருப்பைப் போல இருக்க வேண்டும். கொழுந்துவிட்டு எரியும் ஜ்வாலையாக அந்த ஆசை இருக்க வேண்டும். அறிந்து கொள்வதில் உனக்கு இருக்கும் ஆசை கொழுந்துவிட்டு எரிய வேண்டும். திடீரென்று ஒரு நாள் அது நிகழும். சாஸ்திரங்களுக்கு அப்பாற்பட்ட ஒரு நிலை மாற்றம், வார்த்தைகளுக்கு அப்பாற்பட்ட ஒரு நிலைமாற்றம். இருத்தலிலிருந்து இருத்தலுக்கு ஏற்படும் நிலைமாற்றம். ஆனால், மனதிலிருந்து மனதிற்கு அல்ல. அதனால்தான் புத்தர் கூறினார். ''எவற்றையெல்லாம் வார்த்தைகளால் கொடுக்க முடியுமோ, அவை அனைத்தையும் மற்றவர்களுக்கு கொடுத்து விட்டேன். மனதிலிருந்து மனதிற்கு இடம் பெயரும் நிலைமாற்றத்தைத் வார்த்தைகளால் கொடுக்க முடியாததை, நான் உனக்குத் தருகிறேன் மகாகாஷ்யப்'' இருத்தலிலிருந்து இருத்தலுக்கு ஏற்படக் கூடிய ஒரு நிலைமாற்றம். மற்றவர்கள் அனைவரும் மாணவர்கள், மகாகாஷ்யப் ஒரு சீடர். மகாகாஷ்யப் இரண்டாவது புத்தராக மாறினார்.

*அந்த மனிதன் கூறினான்: நான் கற்றுக்கொள்ள விரும்புகிறேன்.*

இது மிகவும் பலவீனமான விஷயம். நீ பூகோளத்தை, வேதியியலை அல்லது இதைப்போன்ற முட்டாள்தனமான பாடங்களைக் கற்றுக்கொள்ள ஆசைப்படுவதன் மூலமாகக் கற்றுக் கொள்ள முடியும். விருப்பம் இல்லாவிட்டால் கூட, இந்தப் பாடங்களை மக்களால் கற்றுக் கொள்ள முடியும். வெறுப்பு இருந்தாலும் கூட, மக்களால் இந்தப் பாடங்களைக் கற்றுக்கொள்ள முடியும். குழந்தைகளைப் பாருங்கள். அவர்கள் விருப்பத்துக்கு மாறாக, கட்டாயப்படுத்தப்பட்டுப் பள்ளிக்கு அனுப்பப்படு

கிறார்கள். பள்ளிக்குச் செல்ல அவர்கள் விரும்புவ தில்லை. ஆனால், அவர்கள் நிர்ப்பந்திக்கப் படுகிறார்கள். அவர்களும் கல்வி கற்கிறார்கள். கற்றுக் கொள்வதில் எந்த விருப்பமுமின்றி, Ph.d பட்டத்துடன் அவர்கள் பல்கலைக் கழகத்திலிருந்து வெளியே வருகிறார்கள். இப்போது அவர்கள் டாக்டர்களாகிறார்கள். Phd.,D.Lit. பட்டங் களுடன் பேராசிரியர்களாகிறார்கள். அவர்கள் பிறருக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கிறார்கள். அந்தப் பிறரும் விருப்பமில்லாமல் கல்வி கற்கிறார்கள்.

உலகியல் அறிவைப் பொறுத்தவரை, விருப்பம் இல்லாமலே கூடக் கற்றுக்கொள்வது சாத்தியம். ஆனால், ஆன்மிக அறிதலைப் பொறுத்தவரை, விருப்பம் இருந் தாலும் கூட சாத்தியமில்லை. அந்த விருப்பம் கொழுந்து விட்டு எரியும் கனவாக மாறவேண்டும் - அபிப்சா.

ஆங்கிலத்தில் அபிப்சாவுக்கு இணையாக ஒரு வார்த்தையும் இல்லை. இதன் பொருள் ஆசை மட்டுமே இருக்கும்போது, வேறு எதுவும் இருப்பதில்லை. ஆசை கொள்பவனும் கூட அங்கு இருப்பதில்லை. அவனும் ஆசையின் ஒரு பகுதியாகி விடுகிறான். ஆசை உன் னுடைய பகுதியாக இல்லாதபோது, ஆனால், நீ ஆசையின் பகுதியாக ஆகும்போது அபிப்சா உண்டாகிறது.

*நான் கற்றுக்கொள்ள விரும்புகிறேன், அந்த மனிதன் கூறினான். எனக்குக் கற்றுத் தருகிறீர்களா?*

குருவிடம் இவ்வாறு கேட்பது கூடாது. கற்றுக் கொடுப்பதற்குக் குரு விரும்புகிறாரா, இல்லையா என்பது கேள்வி அல்ல. கற்றுக் கொடுப்பதற்கு அவர் எப்போதும் தயாராகத்தான் இருக்கிறார். அவர் விரும்புகிறாரா, இல்லையா என்பது கேள்வி அல்ல. அவரே ஒரு போதனை. அவர் வெறுமனே அமைதியாக அமர்ந்திருந் தாலும் கூட, அவர் போதித்துக் கொண்டிருக்கிறார். அவர்

அமைதியாக சுவாசிக்கிறார். அவர் கற்றுக் கொடுக்கிறார். அவர் நடக்கிறார். அவர் கற்றுக் கொடுக்கிறார். அவர் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார். அவர் கற்றுக் கொடுக்கிறார். அவர் தூங்குகிறார் - அவர் கற்றுக் கொடுக்கிறார்.

குரு என்பவர் தொடர்ந்து கற்றுத்தந்து கொண்டே இருப்பவர். அவரே ஒரு பாடம்.

ஒருமுறை இது நிகழ்ந்தது: ஒரு மனிதன் ஜென் குருவிடம் வந்து, தனக்குக் கற்றுத்தரும்படி கேட்டான். குரு கூறினார், ''சரி, நீ இங்கே இரு, நான் உனக்குக் கற்றுத் தருகிறேன்.'' அந்த மனிதன் காத்துக் கொண்டிருந்தான். ஒரு மணி நேரம் ஆயிற்று. பிறகு இரண்டு, மூன்று மணி நேரம். அவன் பொறுமையை இழந்து கொண் டிருந்தான்.

அங்கு பலர் வந்து சென்ற வண்ணம் இருந்தனர். பலர் பலவிதக் கேள்விகளைக் கேட்டார்கள். குருவிடம் நிறைய சீடர்கள் இருந்தார்கள். அந்த மடாலயம் பெரிதாக இருந்தது. அவர் அங்கு வந்தவர்களிடம் பேசிக் கொண்டே இருந்தார், அவர்களுக்குக் கற்றுத் தந்தபடி இருந்தார். அவர்களுடைய பிரச்சினைகளைத் தீர்க்கக்கூடிய வழி முறைகளைச் சொல்லிக் கொண்டிருந்தார். அந்த மனிதன் ஓர் ஓரத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தான். அவனுடைய பொறுமை எல்லை மீறியது.

அதற்கு மேல், பொறுமையாக இருக்க முடியாமல் அவன் கூறினான், ''நில்லுங்கள், நான் இங்கே பல மணி நேரமாக உட்கார்ந்து கொண்டிருக்கிறேன். ஆனால், எனக்கு நீங்கள் எதையும் கற்றுத்தரவில்லை.''

குரு அவனைப் பார்த்துக் கூறினார், ''இவ்வளவு நேரமும் நான் என்ன செய்து கொண்டிருந்ததாக நினைக் கிறாய்? மக்கள் வந்தார்கள், அவர்கள் என்னிடம் கேள்விகள் கேட்டார்கள், அவற்றுக்கு நான் பதில்

கூறிக்கொண் டிருந்தேன். அதில் போதனை இருக்கிறது - அது நான் கூறிய பதிலில் அல்ல, நான் பதிலளித்த விதத்தில். நான் எப்படிப் பதிலளித்தேன் என்பதை நீ கவனித்திருக்க வேண்டும். மக்கள் வந்தார்கள், வணங்கினார்கள், நான் பதிலளித்தேன். அதில் போதனை இருக்கிறது. சில நேரங்களில் மக்கள் வந்தார்கள், அவர்கள் வெறுமனே என் அருகில் அமர்ந்திருந்தார்கள். நானும் மௌனமாக இருந்தேன். அவர்களும் மௌனமாக இருந்தார்கள்- அதில் உனக்குப் போதனை இருக்கிறது. இந்த மூன்று மணி நேரமும் உனக்குக் கற்றுத் தந்து கொண்டிருந்தேன்; முட்டாளே!''. ஆனால், அந்த மனிதனுக்கு ஏமாற்றமாக இருந்தது. இது எந்த மாதிரிப் போதனை என்பதை அவனால் புரிந்துகொள்ள முடியவில்லை.

குரு என்பவர் போதிப்பதில்லை. அவரே ஒரு போதனை. அவருடைய முழு இருத்தலும் செய்தியைப் பரிமாறும். அது ஒரு தொடர் செய்திப் பரிமாற்றம். அவர் கண்களை அசைக்கும் முறை, அவர் சமிக்ஞை செய்யும் முறை, அவருடைய தோற்றம் - அவருக்குள் இருக்கும் ஏதோ ஒன்று தொடர்ச்சியான கருத்துப் பரிமாற்றத்தைச் செய்து கொண்டிருக்கும். உன்னால் பார்க்க முடியவில்லை என்றால் நீ குருடன்.

'எனக்குக் கற்றுத் தருகிறீர்களா?' என்ற கேள்வியை நீ குருவிடம் கேட்கக்கூடாது. அவர் இருப்பதே அதற்காகத் தான். அவருடைய சொந்த வேலைகள் அனைத்தும் நிறைவேறிவிட்டன. அவருடைய பணிகள் அனைத்தும் செய்யப்பட்டு விட்டன. அவரைப் பொறுத்தவரை, மேற்கொண்டு சுவாசிப்பதற்கான தேவை எதுவுமில்லை. அனைத்தும் முடிந்துவிட்டன. கரையில் நின்றபடி, அவர் சற்றுத் தயங்குகிறார் என்றால், அது உனக்காகத்தான். அவர் பயணிப்பதற்கான கப்பல் ஏற்கெனவே கரையை

அடைந்துவிட்டது. உண்மையைச் சொல்லப் போனால், நீண்ட காலமாகக் கப்பல் அவருக்காகக் காத்துக் கொண்டிருக்கிறது. அவர் இன்னமும் கரையில், சற்று தயங்கிக் கொண்டிருக்கிறார் என்றால், அது உனக்காகத் தான். உனக்குக் கற்றுக் கொடுப்பதற்காகத்தான். அவர் அடைந்ததை உன்னிடம் பங்கு போட்டுக் கொள்வதற்காகத் தான். 'எனக்குக் கற்றுத் தருகிறீர்களா?' என்பது குருவிடம் கேட்கக்கூடிய கேள்வி அல்ல. ஆனால், மாறாக, 'கற்றுக் கொள்வதற்கு நான் தயாராக இருக்கிறேனா?' என்ற கேள்வியையே, ஒருவன் கேட்டுக்கொள்ள வேண்டும்.

*லிப்னானி கூறினார். ''எப்படிக் கற்றுக் கொள்வ தென்பது உனக்குத் தெரியும் என்று நான் கருதவில்லை.''*

நீ குருவிடம் வரும்போது, நீ என்ன சொல்கிறாய் என்பது முக்கியமல்ல. நீ என்ன சொல்கிறாய் என்பதைக் கேட்பதில் குருவுக்கு அக்கறை இருக்காது. உன்னைப் பற்றி அவர் உணர்ந்து கொள்வார். நான் கற்றுக்கொள்ள விரும்புகிறேன் என்று நீ கூறலாம். அல்லது கற்றுக் கொள்வதற்கு நான் ஆசைப்படுகிறேன் என்று நீ கூறலாம். அல்லது, என்னுடைய ஆசை கொழுந்துவிட்டு எரிகிறது, நான் சரணாகதி அடையத் தயாராக இருக்கிறேன் என்று நீ கூறலாம்.

இது அடிக்கடி நிகழும் நிகழ்ச்சி: மக்கள் என்னிடம் வந்து இப்படிக் கூறுவார்கள், ''எங்களை ஏற்றுக் கொள்ளுங்கள். உங்கள் கட்டளைக்குக் கீழ்ப்படிய நாங்கள் முற்றிலும் தயாராக இருக்கிறோம். எங்களிடமிருந்து எவ்வளவு முடியுமோ, அவ்வளவையும் வெளியே கொண்டு வாருங்கள். நாங்கள் உங்களிடம் சரணாகதி அடைந்துவிட்டோம்.'' அவர்கள் என் காலைத் தொட்டுக் கும்பிடுவார்கள். நான் அவர்களிடம், ''அப்படியானால், நீங்கள் சந்நியாசியாக மாறுங்கள்'' என்று கூறுவேன். உடனே அவர்கள், ''அது கடினம், மிகமிகக் கடினம். காவி

உடை அணிந்தபடி, மார்க்கெட்டில் நடந்து செல்வது முடியாத விஷயம்.'' என்று கூறுவார்கள்.

ஒரு கணத்திற்கு முன்பு, ''நாங்கள் உங்கள் கட்டளைக் காகக் காத்துக் கொண்டிருக்கிறோம், சரணாகதி அடைந்து விட்டோம், எங்களிடம் எவ்வளவு முடியுமோ, அவ்வள வையும் வெளியே கொண்டு வாருங்கள்'' என்றெல்லாம் கூறியவர்கள், தங்கள் உடையைக் கூட மாற்றிக் கொள்ளத் தயாராக இல்லை. அவர்கள் இருத்தலையே மாற்ற என்னை அனுமதிப்பதாக கூறுகிறார்கள்.

ஒரு கணத்துக்கு முன்னால், தாங்கள் என்ன கூறினோம் என்பது அவர்கள் நினைவில் இருப்பதில்லை. அவர்கள் பேசுவது, தூக்கத்தில் உளறுவதைப் போன்றது. குடி போதையில் பிதற்றுவது போன்றது. தாங்கள் என்ன கூறினோம் என்பது அவர்கள் நினைவில் இருக்காது. அவர்கள் என் காலைத் தொட்டு வணங்கும்போது, தாங்கள் என்ன செய்கிறோம் என்பதே அவர்களுக்குத் தெரிவதில்லை. காரணம், அவர்கள் அதை சம்பிரதாய மாகச் செய்கிறார்கள். அதற்கு எந்தப் பலனும் இல்லை. இந்த வழக்கமான சம்பிரதாயத்துக்கு எந்த முக்கியத் துவமும் இருக்காது. ஆனால், அது உண்மையாக, உணர்வு ரீதியான முழு நம்பிக்கையோடு செய்யப்பட்டால், அது நிலைமாற்றச் சக்தியாக உருவெடுக்கும்.

''உங்கள் உடைகளை மாற்றுங்கள்'' என்று நான் உடனடியாகக் கூறினால், அவர்கள் பயப்படுகிறார்கள். அப்படி இருக்கும்போது, ''உங்கள் இருத்தலை மாற்றுங் கள்'' என்று நான் அவர்களிடம் கூறினால், அது மட்டும் அவர்களுக்கு எப்படி சாத்தியமாகும்? வெறுமனே உடையை மாற்றுவதால், உங்களுக்கு மார்க்கெட்டில் பிரச்சினை ஏற்படும் என்று நீங்கள் நினைக்கும்போது,

உங்கள் இருத்தலை நீங்கள் மாற்றினால், எங்கும் எப்போதும் தொடர்ந்து பிரச்சினைகள் ஏற்படுமே! நீ எங்குச் சென்றாலும், பிரச்சினைகளும் உன்னைப் பின் தொடர்ந்து வருமே? நீ வித்தியாசமான உலகத்தைச் சேர்ந்தவனாக இருப்பாய். எவருமே உனக்குப் பழக்கப் பட்டவர் போலப் புலப்படாது. உன் நெருங்கிய உறவினர் கூட உன்னிடமிருந்து விலக்கப்பட்டு விடுவார். அவர் களால் உன்னைப் புரிந்து கொள்ள முடியாது. உன் சொந்த வீட்டில் நீ அயலாக ஆகிவிடுவாய். நீ வெளி ஆளாகக் கருதப்படுவாய். மக்கள் உன்னை ஒதுக்கி விடுவர். உன் அருகில் அவர்கள் வரமாட்டார்கள். உன்னைக் கண்டு அவர்கள் பயப்படுவார்கள். காரணம், உன்னுடைய வியாதி அவர்களையும் தொற்றிக் கொள்ளும் என்று நினைப்பார்கள்.

ஒருவர் குருவிடம் கேட்க வேண்டிய அவசியமில்லை. அவர் வெறுமனே குருவின் முன்னிலையில் இருக்க வேண்டும். இந்தியாவில் 'தர்ஷன்' என்ற வார்த்தையைப் பயன்படுத்துகிறோம். இதன் அர்த்தம், குருவின் முன் னிலையில் இருக்க வேண்டும் என்பது. நீ எதுவும் சொல்லத் தேவையில்லை. நீ சொல்லாமலேயே அவர் அறிந்துகொள்வார். நீ உன்னைப் பற்றிக் கூறுவது அனைத் தும் உண்மையாக இருக்க வாய்ப்பில்லை. ஏனென்றால், நீ மாறுபட்ட எண்ணங்களைக் கொண்டவன். உன்னுடைய ஒரு பகுதி, சிலவற்றைச் சொல்லும். இன்னொரு பகுதி, வேறு சிலவற்றைச் சொல்லும் - நீ ஒரு கும்பல், நீ தனிப்பட்டவன் அல்லன். இந்தக் கணத்தில் நீ சொல்வதை, அடுத்த கணத்தில் மாற்றிக் கொள்வாய். நீ ஒரு குழப்பவாதி.

நீ குருவிடம் செல்லும்போது, நீ வெறுமனே அவர் முன்னிலையில் இருந்தால் போதும். நீ எந்த மாதிரி

மனிதன் என்பதையும், உனக்குச் சாத்தியமாவது எது என்பதையும் அவர் முடிவுக்கு விட்டுவிடு. குரு தீர்மானிக் கட்டும். நீ எதுவும் சொல்ல வேண்டாம்.

லிப்னானி கூறினார்: நான் கருதவில்லை. நீ விரும்புவ தாகக் கூறுகிறாய். எப்படிக் கற்றுக்கொள்வதென்பது உனக்குத் தெரியும் என்று நான் கருதவில்லை. நீ தகுதியற்றவன்; கற்றுக்கொள்ளும் தகுதி உனக்கு இல்லை. கற்றுக்கொள்ளக் கூடிய பெண்மையான இருத்தல் உணர்வு உன்னிடம் இல்லை. திறந்த நிலையில், நீ இல்லை. என்னால் பார்க்க முடிகிறது - உன்னைச் சுற்றிலும் உள்ள எல்லாக் கோணங்களிலிருந்தும் நீ மூடப்பட்டிருக்கிறாய். ஏதாவதொன்று, உன்னுள் நுழைவதற்கு ஒரு சாவித் துவாரம் கூட இல்லை. அனைத்து ஜன்னல்களும் மூடப் பட்டிருக்கின்றன. எல்லாக் கதவுகளும் அடைக்கப்பட் டிருக்கின்றன.

நீ மூடப்பட்டிருக்கும்போது, உன்னைச் சுற்றிலும் வித்தியாசமான அதிர்வுகள் இருக்கும். ஒரு மனிதன் மூடிய நிலையில் இருக்கிறானா, அல்லது திறந்த நிலையில் இருக்கிறானா என்பதைப் பல மைல்களுக்கு அப்பால் அவன் வரும்போதே, குரு உணர்ந்து கொள்வார். திறந்த நிலையில் இருப்பவன், வித்தியாசமான குணாதிச யங்கள் கொண்டிருப்பான். அவன் எடையின்றி இருப் பான். அவன் நடக்க மாட்டான்; பறப்பான். ஏனெனில் புவி ஈர்ப்பு விசை அவனைப் பாதிக்காது. அவன் பூமியின் அங்கமாக இருக்க மாட்டான். திறந்த நிலையில் உள்ள ஜீவன் முற்றிலும் வேறுபட்டிருக்கும். திறந்த நிலையில் நீ குருவிடம் வந்தால், நீ கற்றுக்கொள்வதற்குத் தயாராக இருக்கிறாய் என்று பொருள்.

அந்த மனிதன் மூடப்பட்டிருக்க வேண்டும். அவன் கற்றுக் கொள்வதற்காக வந்திருக்கிறான். ஆனால், அவன்

திறந்த நிலையில் இல்லை. நீ திறந்த நிலையில் இல்லாத போது, எப்படி கற்றுக்கொள்ள முடியும்? தவறான அபிப் ராயங்கள், கொள்கைகள், கோட்பாடுகள், சாஸ்திரங்கள், அறிவு ஆகியவற்றால் நிரம்பியுள்ள மனம் கற்றுக் கொள் வதற்குத் தகுதியானது அல்ல. ஒருவன் கற்றுக்கொள்ள வேண்டுமானால், அதற்குக் கல்லாமை அவசியம். கற்றுக் கொள்ளாமையே கற்றுக் கொள்வதற்கு வழியை உண்டாக்கும்.

உனக்கு என்னெல்லாம் தெரியுமோ, அவை அனைத் தையும் தூக்கி எறிந்துவிட வேண்டும். ஒரு தூய்மையான மனநிலை வேண்டும். நீ அதிகமாகத் தெரிந்து வைத்துள் ளாய். உன் தலையில் ஏற்கெனவே அளவுக்கு அதிகமான அறிவைச் சுமந்துகொண்டிருக்கிறாய். அந்த மனிதன், அறிஞனாகவோ, அல்லது ஒரு பண்டிதனாகவோ இருந் திருக்க வேண்டும். அவன் குரானைப் படித்திருக்க வேண் டும். அதனை அக்குவேறு ஆணிவேறாக அலசியிருக்க வேண்டும்.

குரு கூறினார், எப்படி கற்றுக் கொள்வதென்பது உனக்குத் தெரியவில்லை என்று நான் கருதுகிறேன். நீ என்னிடம் வந்திருக்கிறாய், ஆனால் என்னிடம் நீ வரவில்லை. உன்னுடைய உடைமைகள் அனைத்தையும் சுமந்துகொண்டு நீ வந்திருக்கிறாய் - உன் மனதில் உள்ள குப்பைகளை, அழுகிப் போன சரக்குகளை வெளியே தூக்கி எறிந்துவிடு. அப்போதுதான், சிலவற் றைக் கற்றுக்கொள்ளும் சாத்தியம் உனக்கு உண்டாகும்.

ஒரு மனிதன் ரமண மகரிஷியிடம் சென்று கூறினான், ''நான் நீண்ட தொலைவிலிருந்து, ஜெர்மனி நாட்டிலிருந்து வந்திருக்கிறேன். நான் தங்களிடம் கற்றுக்கொள்ள விரும்புகிறேன். ரமணர் கூறினார், ''அப்படியானால் நீ

வேறு எங்காவது செல். ஏனென்றால், இங்கு நாங்கள் கற்றுக் கொள்ளாமையைத்தான் கற்றுக் கொடுக்கிறோம். கற்றல் என்பது எங்கள் பாதையல்ல. நீ வேறு எங்காவது செல்.''

அவர் ஒரு வேளை ஜெர்மானியப் பண்டிதராக இருந் திருக்கக் கூடும். வேதங்களையும் உபநிஷதங்களையும் அவர் படித்திருக்கக் கூடும். அவருடைய அந்தக் கல்வியே, ரமண மகரிஷி, மீது ஓர் ஈடுபாட்டை ஏற்படுத்தி யிருக்கக் கூடும். உபநிஷதங்களை வாசிக்கும்போது, மகான்களைத் தேடிக் கண்டுபிடிக்கும் ஆசை எழும்பி யிருக்கக் கூடும். வேதங்களை வாசிக்க; வாசிக்க, அதன் மீது ஒரு வசீகரம் ஏற்படுகிறது. ஒரு காந்தக் கவர்ச்சி உண்டாகிறது. ஒரு ஹிப்னாடிச மயக்கம் ஏற்படுகிறது. உடனே அவன் வேதங்களில் சொல்லப்பட்டிருக்கும் தீர்க்கதரிசியைத் தேடிக் கண்டுபிடிக்கப் புறப்படுகிறான். இந்தத் தேடுதல் வேட்கையை, மகானைக் கண்டுபிடிக்கும் ஆசையை சாஸ்திரங்கள் தான் அவனுக்கு ஏற்படுத்து கின்றன.

ஆனால், அறிந்துகொண்ட மனிதனைப் பற்றி உன்னால் தெரிந்துகொள்ள முடியவில்லை. அவர் எப்போதும் சாஸ்திரங்களுக்கு எதிரானவர். சாஸ்திரங்கள் அவரிடம் கொண்டு உன்னை சேர்த்தாலும் அவர் அனைத்து சாஸ்திரங் களையும் தூக்கி எறியும்படி உன்னிடம் கூறுவார். நீ ஏறி வந்த ஏணி யைத் தூக்கி எறியும்படி கூறுவார். ''நீ எப்போது என்னிடம் வந்துவிட்டாயோ, வேதங்களும், உபநிஷதங் களும், குரானும் தேவையில்லை. அவற்றைக் கைவிடு. நான் இங்கே உயிரோடு இருக்கிறேன்.''

இயேசு கூறினார்: ''நானே உண்மை, சாஸ்திரங்களை இங்குக் கொண்டுவர வேண்டிய அவசியமில்லை.'' ரமணர்

கூறினார், அப்படியானால் நீ வேறு எங்காவது செல். ஏனென்றால், இங்கு நாங்கள் கல்லாமையைக் கற்றுக் கொடுக்கிறோம். நீ கற்றுக் கொள்ளாமல் இருப்பதற்குத் தயாராக இருந்தால், இங்கு இருக்கலாம். நீ மேலும் கற்றுக் கொள்வதற்கு விரும்பினால், இது சரியான இடமல்ல. நீ வேறு எங்காவது செல். கற்றுக் கொடுப்பதற்காகப் பல்கலைக் கழகங்கள் இருக்கின்றன. நீ என்னிடம் வரும்போது, கல்லாமையைக் கற்றுக்கொள்ள வா. இது கல்லாமைக்கான பல்கலைக் கழகம். மனமற்ற நிலையை உருவாக்கும் பல்கலைக்கழகம். உனக்குத் தெரிந்தது அனைத்தையும் வெளியே எடுத்துப்போட வைக்கும் பல்கலைக் கழகம்.

நீ சேகரித்த அறிவு அனைத்தும் கைவிடப்பட வேண்டும். அப்போதுதான் உன்னால் அறிந்துகொள்ள முடியும். இதனால் உனக்கு ஒரு பூரணத்துவம், ஒரு தெளிவு உண்டாகும். இதனால் உன் கண்களில் தேங்கியிருக்கும் விவரணங்கள், தத்துவங்கள், தவறான அபிப்ராயங்கள், தப்பெண்ணங்கள் ஆகிய அனைத்தும் அப்புறப்படுத்தப்பட்டு, உன் கண்களில் தெளிவும் பிரகாசமும் ஏற்படும். இப்போது உன்னால் பார்க்க முடியும். உண்மை அங்கு ஏற்கெனவே இருக்கிறது. அது எப்போதும் அங்குத் தான் இருக்கிறது.

*லிப்னானி கூறினார்: எப்படி கற்றுக் கொள்வ தென்பது உனக்குத் தெரியும் என்று நான் கருதவில்லை.*

*அவன்: எப்படி கற்றுக்கொள்வதென்பதை நீங்கள் எனக்குக் கற்றுத் தருவீர்களா?*

அவன் ஒரு லாஜிக்கான மனிதனாக இருந்திருக்க வேண்டும். சட்டரீதியாக அவன் பதிலளிக்கிறான். அவன் கூறுகிறான். சரி, கற்றுக்கொள்வதற்கு நான் தயாராக

*இல்லை என்று நீங்கள் கருதினால், எப்படி கற்றுக் கொள்வது என்பதை எனக்கு கற்றுக் கொடுங்கள். எப்படி கற்றுக்கொள்வதென்பதை நீங்கள் எனக்குக் கற்றுத் தருவீர்களா?*

லாஜிக்காகப் பேசுபவரிடம் இதுதான் பிரச்சினை. பிரச்சினை அப்படியே தான் இருக்கும். லிப்னானி கூறுகிறார்: *எப்படி கற்றுக் கொள்வதென்பது உனக்குத் தெரியும் என்று நான் கருதவில்லை.* அந்த மனிதன் லாஜிக் காகப் பதில் கூறுகிறான். அவன் லாஜிக் பார்க்காதவனாக, புரிந்துகொள்ளக் கூடிய மனிதனாக இருந்திருந்தால், அவன் தன் கண்களை மூடியிருந்திருப்பான். அவன் பார்வையைத் தன்னுள் செலுத்தியிருப்பான். தன்னுடைய சொந்த இருத்தலையும் சுயத்தையும் சுற்றிக் கவனித் திருப்பான். ''லிப்னானி என்ன கூறுகிறார்? எப்படி கற்றுக்கொள்வது என்று எனக்குத் தெரியவில்லை என்று கருதுவதாகக் கூறுகிறார்'' - தன்னுடைய சொந்த இருத்தலை அவர் ஆழமாகக் கவனித்திருக்க வேண்டும்.

அவன் புரிந்துகொண்ட மனிதனாக இருந்திருந்தால், குரு கூறியதைத் தியானித்திருப்பான். அவன் லிப்னானி யிடம் இப்படிக் கூறியிருப்பான், ''நான் உடனே சென்று, தாங்கள் கூறியதைத் தியானிக்கிறேன். தாங்கள் ஒரு மாபெரும் உண்மையைச் சொல்லியிருக்கிறீர்கள். தாங்கள் ஏற்கெனவே எனக்குக் கற்றுத்தரத் தொடங்கிவிட்டீர்கள். நான் ஏற்கெனவே எனக்குக் கற்றுக்கொள்ளத் தொடங்கி விட்டேன் - அதாவது கற்றலைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியவில்லை என்பதை நான் உணர்கிறேன். இது எனக்கு ஓர் ஆரம்பத்தைக் கொடுத்திருக்கிறது. நான் இப்போதே சென்று, தாங்கள் கூறியதைத் தியானிக்கிறேன். தாங்கள் என்னிடம் கூறியது ஆழம் மிகுந்த உண்மை. நீங்கள் சரியாகக் கணித்திருக்கிறீர்கள். நீங்கள் என்னிடம் கூறியது

அனைத்தையும் புரிந்துகொள்வதற்காக, இந்தக் கணம் முதல், நான் என்னையே கவனிக்கப் போகிறேன்.

ஆனால், அந்த மனிதன் லாஜிக்கல் மனிதனாக இருந்திருக்க வேண்டும். புரிந்துகொள்ளக்கூடிய மனிதனாக அவன் இல்லை. அனைத்தும் அறிந்த அறிவாளியாக அவன் தன்னை நினைத்துக் கொண்டிருந்திருக்க வேண்டும். அவன் ஒரு வழக்கறிஞரைப் போல வாதாடுகிறான். அவன் கூறுகிறான், ''சரி, எப்படி கற்றுக் கொள்வதென்பது எனக்குத் தெரியவில்லை என்று தாங்கள் கருதினால், எப்படி கற்றுக்கொள்வது என்பதை எனக்குக் கற்றுத் தருகிறீர்களா?'' மீண்டும் குருவின் மீது பாரம் அழுத்தப்படுகிறது. ''தாங்கள் எனக்குக் கற்றுத் தருகிறீர்களா?'' அழுத்தம் சற்றும் இடம் மாறவில்லை.

உண்மை என்பது கற்றுத் தரக் கூடியது என்ற கோணத்திலேயே அவன் தொடர்ந்து சிந்திக்கிறான். ஆனால், உண்மை என்பது கற்றுக்கொள்ளக் கூடியது என்ற நிஜத்தை, லிப்னானி வலியுறுத்திக் கூறுகிறார். இவை இரு துருவங்களாக இருக்கின்றன. மிகவும் நுட்பமானவை. அவன் மையத்தைத் தவற விட்டுவிட்டான். அவன் மீண்டும் அதையே சொல்கிறான். எப்படி கற்றுக் கொள்வது என்பதைக் கற்றுத் தருகிறீர்களா?

*லிப்னானி: நான் எப்படி கற்றுத்தருவது என்பதை உன்னால் கற்றுக்கொள்ள முடியுமா?* இரண்டு தரப்பினரும் அவரவர் கருத்துக்ளில் ஆணித்தரமாக இருக்கிறார்கள். மீண்டும் லிப்னானி கூறுகிறார்: *நான் எப்படி கற்றுத் தருவது என்பதை உன்னால் கற்றுக்கொள்ள முடியுமா?*

உண்மையைப் போதிக்க முடியாது. ஆனால், அதைக் கற்றுக்கொள்ள முடியும். அதனைக் கற்றுத்தர முடியும் என்று நீ நினைத்தால், நீ அலைந்துகொண்டே,

அலைந்துகொண்டே, அலைந்துகொண்டேதான் இருக்க வேண்டும்.

நீ பல ஆசிரியர்களையும், குருமார்களையும் சந்திக்கக் கூடும். ஆனால், உண்மையை ஒருபோதும் உன்னால் சந்திக்க முடியாது. காரணம், ஆரம்பத்திலேயே, நீ தவறான அடி எடுத்துவைத்து விட்டாய். உண்மையைக் கற்றுக்கொள்ளத்தான் முடியும் என்பதை நீ அழுத்தந்திருத்த மாக உணர வேண்டும். இது சீடனைப் பொறுத்துத்தான் இருக்கிறது. சீடன் தயார் நிலையில் இருக்கும்போது, குரு தாமாகவே தோன்றுவார்.

சீடத்தன்மை என்றால் என்ன? அது திறந்த நிலை. அது கற்றுக்கொள்ளும் தன்மை கொண்டது. வரவேற்கும் மனோபாவம் கொண்டது. அது உணர்வோடு கூடிய நம்பிக்கையைக் கொண்டது.

நீ ரோஜாப்பூவைக் கவனித்திருக்கிறாயா? மாலை நேரத்தில் சூரியன் அஸ்தமனம் ஆகும்போது, பகல் பொழுது முடிகிறபோது, பகல்பொழுதை அந்த ரோஜாப் பூ கழித்துவிட்ட போது, அது மறைவதற்கான நேரம் இப் போது வந்துவிட்டது. ரோஜாப் பூவின் இதழ்கள் விழத் தொடங்குகின்றன. எந்தவிதத் தயக்கமுமின்றி நிலத்தை நோக்கி, அந்த இதழ்கள் விழத் தொடங்குகின்றன. மிகவும் நுட்பமாகவும், மிகவும் வலிமையாகவும் விளங்கும் ரோஜா இதழ், தான் கீழே விழுவதைப் பற்றியோ, எங்கே செல்கிறோம் என்பதைப் பற்றியோ, தன்னைச் சுமப்பதற்கு அங்கு பூமி இருக்கிறதா, இல்லையா என்பதைத் தெரிந்து கொள்வதிலோ, தான் ஓய்வெடுக்கப் போகிறோமா, அல்லது தூங்கப் போகிறோமா, அல்லது இறக்கப் போகி றோமா என்பதைப் பற்றியோ, எந்தச் சிந்தனையையும் கொள்ளாமல், எந்தத் தயக்கமும் இல்லாமல் அது கீழே

விழத் தொடங்குகிறது. யாருக்குத் தெரியும்? ஆனால், எந்தத் தயக்கமும் இல்லை. மிகவும் மிருதுவான, மிகவும் நுட்பமான, மிகவும் வலிமையான நிச்சயம் இல்லாததாக விளங்கும் ரோஜா இதழ், உரிய நேரம் வந்ததும், பூவிலிருந்து விலகிப் பூமியில் விழுகிறது.

ஒரு சூஃபி மாஸ்டர் தன் சீடர்களிடம் சொல்வது வழக்கம்: ரோஜா இதழ் எப்படி உணர்வுபூர்வ நம்பிக்கை யுடன் விழுகிறதோ அதைப்போல விழுந்து விடுங்கள்.

நீ குருவிடம் வரும்போது, ஒரு ரோஜா இதழைப் போல வா! குருவின் மீது விழுந்துவிடு! ரோஜா இதழ் பூமியை நோக்கி விழும்போது, எந்தத் தயக்கமுமின்றி, தன்னைச் சுமப்பதற்கு அங்கு பூமி இருக்க வேண்டும் என்ற பூரண நம்பிக்கையுடன், தான் ஓய்வெடுக்கப் போகிறோமா அல்லது இறக்கப் போகிறோமா என்ற எந்த எண்ணமுமின்றி, பூமியில் விழுவதைப் போல, நீ குருவின் மீது விழுந்துவிடு. புவி ஈர்ப்பு விசையைப் பூமி தானாகச் செயல்படுத்தும். உணர்வு ரீதியான நம்பிக்கை கொள்ள வேண்டியதுதான் உன் வேலை. ரோஜா செடியை பிடித்து கொண்டு இருப்பதில்லை. ரோஜா இதழும் நம்பிக்கை யோடுதான் பூமியில் விழுகிறது.

வெறுமனே உணர்வோடு கூடிய நம்பிக்கை. சீடத்தன்மை என்பது இதுதான். ஒரு ரோஜா இதழ் எப்படி நம்பிக்கையோடு பூமியில் விழுகிறதோ, அதைப் போல நீ குருவிடம் விழுந்துவிடு.

இன்றைக்கு இதுபோதும்.



# 2

# நீ எதற்காக வந்திருக்கிறாய்?

பகாதீன் EI-ஷா (Bahauddiu - El-Shaw), தன்னுடைய சீடகோடிகளுடன் அமர்ந்திருந்தார். அப்போது, அவரைப் பின்பற்றும் பலர், அவரைச் சந்திப்பதற்காகப் பார்வையாளர் அன்றைக்கு வந்தனர்.

EI-ஷா அவர்கள் ஒவ்வொருவரையும் பார்த்து, அவர்கள் அங்கு வந்திருப்பதற்கான காரணத்தைக் கூறுமாறு கேட்டார். முதலாமவன் கூறினான். இந்த உலகத்தில் தாங்கள் தான் மிகச் சிறந்த மனிதர். ''அவன் உடல்நிலை சரியில்லாமல் இருந்தபோது, அவனுக்கு நான் மருந்து கொடுத்தேன். அதனால் நான்தான் இந்த உலகத்தில் மிகச் சிறந்த மனிதர் என்று அவன் கருதுகிறான்'' என்று EI-ஷா கூறினார்.

இரண்டாமவன் கூறினான். தங்களைப் பார்க்க நான் அனுமதிக்கப்பட்டதால், என்னுடைய ஆன்மிக வாழ்க்கையின் கதவு திறக்கப்பட்டு விட்டது.

''அவன் நோய்வாய்ப்பட்டிருந்தான். அவனைக் கவனிக்க எவருமில்லை. அப்போது அவன் அருகில் நான் அமர்ந்தேன். அவனுடைய முகத்தில் ஒரு

*சாந்தம் ஏற்பட்டது. அதைத்தான், தன் ஆன்மிக வாழ்க்கையின் கதவு திறக்கப்பட்டதாக அவன் கூறினான்'' என்றார் உ1ஷா.*

*மூன்றாமவன் கூறினான்: தாங்கள் என்னைப் புரிந்துகொண்டு, என்னுடைய ஆத்ம திருப்திக்காக, தங்களுடைய உபதேசத்தைக் கேட்கும் பாக்கியத்தை எனக்கு அளிக்க வேண்டும்.*

*அவனுடைய செய்கைகளை விமரிசித்தாலும் கூட, தன் மீது பிறரின் கவனத்தைத் திருப்ப அவன் விரும்புகிறான். இதைத்தான் ஆத்மதிருப்தி என்று அவன் குறிப்பிடுகிறான்.*

*நான்காமவன் கூறினான். நான் பலருடைய போதனைகளை மாற்றி மாற்றிக் கேட்டு, அதன்படி செயல்பட்டு வந்தேன். தங்களைச் சந்தித்த பிறகு, தங்களுடைய வாசிபா (Wazifa) பயிற்சியைப் பெற்றபிறகுதான், நான் உண்மையான தெளிவை அடைந்திருக்கிறேன்.*

*''நான் இந்த மனிதனுக்குக் கொடுத்த பயிற்சி இயல்பான ஒன்று. அதற்கும் ஆன்மிக வாழ்க்கைக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. நான் அவனுடைய உண்மையான ஆன்மிகத் தன்மையைத் தொடுவதற்காக, ஒரு மாயத் தோற்றத்தை முதலில் அவனிடம் உண்டாக்கினேன். அதன் மூலமாக, அவனுடைய உண்மையான ஆன்மிக மையத்தைத் தொட்டேன்'' என்றார் EI-ஷா*

தேடல் என்பது ஆன்மசாதகனைப் பொறுத்தது. குருமார்கள் பாதையை மட்டுமே காட்ட முடியும். தேடல் ஆன்மசாதகனைப் பொறுத்தது - எந்த மாதிரிக்

குணாதிசயம் கொண்ட இருத்தல், எந்த மாதிரிக் குணாதிசயம் கொண்ட விசாரணை என்பதை ஆத்மசாதகன் தான் கொண்டு வர வேண்டும். அனைத்தும் அவனைப் பொறுத்துத்தான் அமைகிறது. அவன் எதற்காகத் தேடுகிறான்? அதற்கான காரணம் என்ன? ஏனெனில், தேடல்தான் அவனுடைய வளர்ச்சிக்கான காரணகர்த்தாவாக அமைகிறது. காரணம் தவறாக இருந்தால், ஆரம்பத்திலேயே அவன் தவறான அடி எடுத்து வைத்தால், இந்தத் தவறான தொடக்கம், சரியான முனைக்குக் கொண்டு செல்லாது. முதல் அடியே கடைசி அடியாக அமைந்துவிடும்; ஏனென்றால், முதல் அடியிலேயே, கடைசி அடியின் சக்தி மறைமுகமாக அமைந்துவிடும்.

விதை தான் மரம். காரணம், விதையே மரமாக மாறுகிறது. ஆன்ம சாதகனின் வளர்ச்சியைப் பொறுத்தே, எல்லையும் அமையும். தொடக்கத்திலேயே தேடலில் தவறான காரணம் அமைந்துவிட்டால், அனைத்தும் வீணாகிவிடும். குருமார்கள் பாதையை மட்டுமே காட்டுவார்கள். அவர்கள் சுட்டிக்காட்ட மட்டுமே செய்வார்கள். மற்ற அனைத்தையும் நீ தான் செய்ய வேண்டும். சீடன் தான் செய்ய வேண்டும். நல்லொழுக்கம் உன்மீது திணிக்கப்பட மாட்டாது. எந்த குருவும் நல்லொழுக்கத்தை எவர் மீதும் திணிப்பதில்லை. உன் நல்லொழுக்கத்தைக் கண்டுபிடிக்க மட்டுமே அவர் உதவுவார். இதுதான், போலி குருவுக்கும் உண்மையான குருவுக்கும் உள்ள வித்தியாசம்.

போலி குரு என்பவர், ஏற்கெனவே தயாராக வைத்துள்ள சூத்திரத்தைக் கொண்டு, ஏற்கெனவே வடிவமைக்கப்பட்ட ஒரு வழிமுறையைக் கொண்டு, அவரிடம் வரும் அனைவரிடமும் திணிக்கக் கூடியவர். போலி

குருவுக்கு அவரிடம் வரும் நபரை பற்றிய அக்கறை இருக்காது. அங்கு வரும் மனிதர்கள் வெறும் எண்ணிக்கை மட்டுமே. அவன் மனிதனாகக் கருதப்படாமல், ஏதோ ஒரு ஜடமாக, ஒரு பொருளாகத் தான் பாவிக்கப்படுவான். போலி குரு, அவன் மீது நல்லொழுக்கங்களைத் திணிப்பார். அது வழக்கமாக நடைபெறும் ஒரு ரெடிமேட் நிகழ்ச்சியாகத் தான் இருக்கும். அவருடைய மனத்தில் ஏற்கெனவே ஒரு புளூ பிரிண்ட் இருக்கும். இந்த வகையில், போலி குருமார்கள் பலரைக் கொல்கிறார்கள். பலரை அழிக்கிறார்கள். ஏனெனில், ஒவ்வொருவரும், அவரவர்க்கான புளூ பிரிண்ட்களை அவரவர் மனதில் வைத்திருக்கிறார்கள். வெளிப்புறத்திலிருந்து திணிக்கப் படும் நல்லொழுக்கம் அவசியமில்லை.

ஓர் உண்மையான குரு, பகாதீன் போன்ற ஒரு குரு, உன்மீது எதையும் திணிப்பதில்லை. உன்னுடைய நல்லொ ழுக்கத்தைத் தெரிந்துகொள்ள, அவர் வெறுமனே உதவி செய்கிறார். உன் பாதையைத் தெரிந்துகொள்ள அவர் உதவுகிறார். உன்னுடைய வளர்ச்சிக்கு அவர் உதவுகிறார். ஆனால், இது, அவரது கண்ணோட்டத்தில் அல்லாமல், உன்னுடைய சொந்த இருத்தலின் கண்ணோட்டத்தின் வழியாகத்தான். ஏனென்றால், நீ தான் விதை. மரம் உன்னிடமிருந்து தான் வரப்போகிறது. குரு என்பவர் அதிகபட்சம், ஓர் அன்பான தோட்டக்காரனாகத்தான் இருப்பார். உன்மீது இரக்கத்தைப் பொழிபவர் அவர். உன்னை ஜாக்கிரதையாகப் பேணுபவர் அவர். உன்மீது அவர் எதையும் திணிப்பதில்லை.

உண்மையான குருவினால் கூட நீ இறக்க நேரிடும். ஆனால், மீண்டும் நீ உயிர்த்தெழுவாய். ஆனால், போலி குருமார்கள், உன்னை வெறுமனே அழித்துவிடுவார்கள். நீ மீண்டும் வளர வாய்ப்பே இல்லை.

இதனை, நீங்கள் அனைவரும் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். நீ இங்கே என்னுடன் இருக்கிறாய். நல்லொழுக்கத்தினை நான் உனக்கு வலுக்கட்டாயமாகத் திணிக்கவில்லை. நான் நல்லொழுக்கத்திற்கு எதிரானவன் என்பது இதன் பொருளல்ல. நானும் அதை விரும்பு கிறவன் தான். ஆனால், அந்த நல்லொழுக்கம் உன்னிட மிருந்துதான் வெளிப்பட வேண்டும். உன்னுடைய நல்லொழுக்கம் என்பது, உன்னுடைய தனிப்பட்ட நல்லொழுக்கமாக இருக்குமே தவிர, மற்றவர்களுக்கு உரியதாக இருக்காது. உன்னுடைய மலர் உன்னுடையது தான். மற்றவர்க்குச் சொந்தமானது அல்ல. அது உன் னுடைய தனித்தன்மையைக் கொண்டது. அதுதான் அழகு - அதாவது, எப்போதெல்லாம் உண்மை அடையப்படு கிறதோ, அது எப்போதும் தனித்தன்மையோடுதான் விளங்கும். ஏனென்றால், ஒவ்வொருவரும் அவரவர் சொந்த வழிகளில் அடைகிறார்கள். அனைவரும் அவர்வர் தனித்தன்மையுடன் வளர்கிறார்கள். நீ மேலும் மேலும் ஆணித்தரமுள்ள தனிமனிதன் ஆகிறாய்.

உயிர்த்தெழுதலின் அர்த்தம் இதுதான் - உனக்குள் இருக்கும் பொய் இறந்துவிடும். ஆனால், உண்மை உன்னுடனேயே இருக்கும். நீ அதனுடன் இரண்டறக் கலந்திருப்பாய். அதற்கு உதவி தேவைப்படுகிறது.

உண்மையான குரு என்பவர் யார்? சாக்ரடீஸ் தம்மைப் பற்றி அடிக்கடி இப்படிச் சொல்வார். - தான் ஒரு மருத்து வச்சி என்று அவர் அடிக்கடி குறிப்பிடுவதுண்டு. உண்மை யான குரு என்பவர் ஒரு மருத்துவச்சியாகச் செயல்படக் கூடியவர். அவர் உனக்கு எதுவும் தரமாட்டார். வெறுமனே உனக்கு உதவிகள் செய்வார். உன்னை வெளிச்சத்திற்குக் கொண்டு வர, உனக்கு விடுதலையை அளிக்க மட்டுமே

செய்வார். ஆனால், நீ தவறான காரணத்துடன் வந்தால், குருவினால் உனக்கு உதவ முடியாது. ஏனென்றால், அவருடைய அத்தனை முயற்சிகளையும் நீ வீணடித்துவிடுவாய்.

சில தினங்களுக்கு முன்பு, சிலோ (Silo) என்பவர், என்னைச் சந்திப்பதற்காகத் தென் அமெரிக்காவிலிருந்து வந்திருந்தார். என்னைப் பார்ப்பதற்காக மட்டுமே அவர் நீண்ட பயணத்தை மேற்கொண்டிருந்தார். ஆனால், அவரால் என்னைப் பார்க்க முடியவில்லை. அவர் அவருடைய சொந்த முயற்சி செய்ததிலேயே விரக்தி அடைந்துவிட்டார்.

அவரும் ஒரு வகையில் குரு ஸ்தானத்தில் இருப்பவர். லத்தீன் அமெரிக்காவில் அவரைப் பின்பற்றுபவர்கள் நிறைய பேர் இருக்கிறார்கள். இதுவே, பிரச்சினைக்குக் காரணம். அவர், தம்மைத் தாமே உயர்வாகக் கருதினார். அதனால், அவர் என்னைத் தனிப்பட்ட முறையில், மற்ற எவரும் அருகில் இல்லாத வகையில் ஸ்பெஷலாகச் சந்தித்துப் பேச விரும்பினார். ஆனால், வழக்கமாக நான் மக்களைச் சந்திக்கும் நேரமான, மாலை ஏழு மணிக்கு அவர் வரத் தயாராக இல்லை. தன்னுடைய சுயகௌரவத்தை அது பாதிக்கும் என்று அவர் கருதினார். அவருக்காக மட்டும், பிரத்யேகமான ஸ்பெஷல் இண்டர்வியூ வேண்டுமென்பது அவர் விருப்பம். நான் அதைச் செய்திருக்கலாம். ஆனால், அது தவறானது. அவருக்காகத் தனிப்பட்ட முறையில் நேரத்தை ஒதுக்குவதில் எந்தப் பிரச்சினையும் இல்லை. ஆனால், அவருடைய வளர்ச்சியை அது மிகவும் பாதிக்கும். ஏனென்றால், நான் தவறான காரணத்திற்கு உட்படுவதாக ஆகிவிடும்.

அவர் தன்னை ஸ்பெஷலாக நினைத்துக் கொண்டிருந்ததால், அவருக்கு ஸ்பெஷல் இண்டர்வியூ தேவைப்

பட்டது. இந்த ஈகோ உணர்வினால் எந்தப் பயனும் இல்லை. ஆரம்பத்திலேயே, ஏதோ ஒன்று தவறாகி விடுகிறது. முதன் முதலில் எடுத்து வைக்கும் அடியே தவறாகி விடுகிறது. அதனால், நான் அவருக்கு ஸ்பெஷல் இண்டர்வியூ தர மறுத்துவிட்டேன். நான் அவரிடம் கூறினேன், ''நாளை மாலை ஏழு மணிக்கு வாருங்கள்.'' அவருக்கு வெறுப்பு ஏற்பட்டிருக்க வேண்டும். அவர் எனக்கு ஒரு கடிதம் எழுதினார். அதில், மறுநாள் பகல் நான்கு மணிக்கு அமீர் ஹோட்டலில், அவர் எனக்காகக் காத்துக் கொண்டிருப்பதாக எழுதப்பட்டிருந்தது. அவர் எழுதியிருந்த விதத்தை இரண்டு அர்த்தங்களில் எடுத்துக் கொள்ளலாம். ஹோட்டலில் அவர் என்னைச் சந்திக்க விரும்பியதை, சரீர சந்திப்பாகவும் எடுத்துக் கொள்ளலாம். அல்லது ஆன்மிக உணர்வுக் கலப்பாகவும் எடுத்துக் கொள்ளலாம். இது கூட ஒரு தந்திரமான செயல்பாடுதான்.

மறு நாள் நர்ன்கு மணிக்கு நான் அவரைச் சந்திப்பதற்கு உண்மையிலேயே முயற்சி செய்தேன். ஏனென்றால், அந்த மனிதர் சக்தி வாய்ந்தவராக எனக்குப் புலப்பட்டது. அந்தச் சக்தி வாய்ந்த மனிதருக்கு, என்னால் அதிக அளவில் உதவ முடியும் என்று கருதினேன். அவர் வளர்ச்சியடைந்து ஓர் அழகான மலராக மலரக்கூடிய சாத்தியமிருக்கிறது. ஆனால், அதே அளவுக்கு அவருடைய ஈகோவும் அதிகமாக இருந்தது.

நான்கு மணிக்கு அவரைச் சந்திப்பதற்கு, ஆன்மிக ரீதியாக நான் முயற்சி மேற்கொண்டேன். ஆனால், அவர் எனக்காகக் காத்திருக்கக்கூட இல்லை. நான் அவர் அறையை அடைந்தபோது, அது சிகரெட் புகையால் சூழப்பட்டிருந்தது. அதனால், அவர் எனக்காகக் காத்துக் கொண்டிருக்கவில்லை என்பதை நான் புரிந்து

கொண்டேன். அவர் தியானத்தில் இருந்திருக்க வேண்டும். அறைக் கதவை மூடிக்கொண்டு, எவ்வளவு அமைதியாக இருக்க முடியுமோ, அவ்வளவு அமைதியாக இருந்திருக்க வேண்டும். ஏனென்றால், பிரத்யேகத் தயாரிப்பு எதுவும் இல்லாமலே, உடல் ரீதியான தொடர்பு என்பது உனக்குச் சாத்தியமாகும். ஆனால், ஆன்மிக ரீதியான தொடர்புக்கு முன் தயாரிப்பு அவசியம். பெற்றுக்கொள்ளக் கூடிய மனப்பான்மை அதற்குத் தேவைப்படும். ஒரு நுட்பமான விழிப்புணர்வு அதற்குத் தேவைப்படும். இந்த அதிசய நிகழ்ச்சி மிகவும் நுட்பமானது. அது ஒரு மெல்லிய தென்றல் காற்றைப் போன்றது. நீ விழிப்போடு இல்லா விட்டால், அதை உன்னால் உணர முடியாது. நீ ஆழ்ந்த தூக்கத்திலிருந்தாலும், உன்னை எழுப்பிவிடுவதற்கு அது புயல் காற்றைப் போன்றல்ல.

அங்கு நான் சென்று, அவர் அருகில் நின்றேன். அவருக்கு வெளிப்புறத்தில் சிகரெட் புகை சூழ்ந்திருந்தது. அவருடைய உள்புறத்தில், அதைவிட ஆழமான ஈகோவின் புகை சூழ்ந்திருந்தது. அவருடைய மனதில் பலவகை எண்ணங்கள் அலைமோதிக் கொண்டிருந்தன. ஆனால், என்னைப் பற்றிய எண்ணம் ஒரு சிறுதுளிகூட அதிலில்லை.

அன்று மாலை ஏழு மணிக்கு அவர் என்னைப் பார்க்க வரவில்லை. மீண்டும் ஒரு செய்தி: ''தாங்கள் என்னை நான்கு மணிக்குச் சந்திக்க வராததால், நான் தங்களைப் பார்க்க அங்கு வரவில்லை.''

பிறகு அவர் திரும்பச் சென்றுவிட்டார். என்னைப் பார்ப்பதற்காக, அவ்வளவு நீண்ட பிரயாணம் மேற் கொண்டும், அவருடைய மொத்த முயற்சிகளையும் அவருடைய ஈகோ வீணடித்துவிட்டது. அவர், ஏதோ சில

தவறான காரணங்களுக்காகத்தான் வந்திருக்க வேண்டும். ஏதோ ஒரு வகையில் அவர் சிறப்புமிக்கவர் என்ற அங்கீகாரத்தை நான் அளிக்க வேண்டும் என்பதற்காகத்தான் அவர் வந்திருக்க வேண்டும். ஆமாம், உண்மையிலேயே அவர் சிறப்புமிக்கவர் தான். ஆனால், என் அங்கீகாரத்தைப் பெறுவதற்காக, அவர் செய்த முயற்சிகள் அனைத்தையும் அவருடைய அகங்காரம் பாழடித்துவிட்டது. அவருடைய முதல் அடியே தவறாகிவிட்டது.

அவர் ஒரு சாதாரண மனிதராக இருந்திருந்தால், நான் உட்பட்டிருப்பேன். அமீர் ஹோட்டலுக்கு நான் சென்றிருப்பேன். அதில் எந்தப் பிரச்சினையும் இல்லை. உடல் ரீதியாக என்னால் சென்றிருக்கமுடியும். ஏனென்றால், அது என்னைப் பணயம் வைப்பதாக ஆகாது. அந்த மனிதர் சக்திவாய்ந்தவர் தான். மாபெரும் வாய்ப்பு அவருள் இருக்கிறது. ஆனால், அவர் தன்னைத் தானே கெடுத்துக் கொள்கிறார். அவர் எளிமையைக் கடைப்பிடிக்க வேண்டும். அப்போதுதான் அவர் சரியான முறையில் ஆரம்பிக்க முடியும். ஆனால், அவர் ஏற்கெனவே குருவாக இருப்பவர். பிரச்சினையே அதுதான். அவரைப் பின்பற்றுபவர்கள் இருக்கிறார்கள். உன்னைப் பின்பற்றுபவர்களை உருவாக்குவது எளிது. முட்டாள்தனமான உலகம் இது. உன்னைவிட அதிக முட்டாள்களை நீ எளிதாகக் கண்டு பிடிக்க முடியும். உன்னை அவர்கள் பின்பற்றுவார்கள். அதில் எந்தச் சிக்கலுமில்லை.

நீ என்னிடம் வரும்போது, நீ எதற்காக வந்திருக்கிறாய் என்பது, தொடரப்போகும் மொத்த நாடகத்தின் பெரிய பாகமாக விளங்கப் போகிறது. தவறான ஆரம்பம் ஏற்பட்டுவிடக் கூடாது என்பதில் நான் கவனமாக இருக்க வேண்டும். காரணம், ஒரு முறை தொடங்கப்பட்டு விட்டால், அதை மாற்றுவதென்பது மிகவும் கடினம். அது

மேலும் மேலும் வலிமை அடைந்துவிடும். ஆரம்பத்தி லேயே அதைத் தடுத்து நிறுத்திவிட வேண்டும்.

ஒரு விதை தவறானதாக இருந்தால், அது எரிக்கப் பட்டுவிட வேண்டும். ஒரு விதை முளைவிட்டுப் பூமியி லிருந்து கிளம்பும்போதே, அதன் வேர்கள் ஊன்றத் தொடங்கிவிடுகின்றன. அது வலிமையடையத் தொடங்கி விடுகிறது. அது பெரிய மரமாக வளர்ந்த பிறகு அதை அழிப்பது கடினம்... மிக மிகக் கடினம்.

ஒரு விதையை எளிதாக எரித்துவிடலாம். ஆனால், மரத்தை வெட்டுவதோ, அல்லது எரிப்பதோ மிகவும் கடினம். இப்போது நீ மரமாக இருக்கிறாய். அதனால் உன்னிடம் நிறைய கிளைகள், நிறைய இலைகள், நிறைய பழங்கள் - இவை அனைத்தும், தவறானதாக, விஷம் கொண்டதாக விளங்கும். ஆனாலும், நீ எதிர்த்து நிற்பாய். எதுவும் வெட்டப்படக் கூடாது. மரம் அங்கு இல்லாத போதே, வெறுமனே விதையாக இருக்கும்போதே, எந்த அளவுக்கு நீ எதிர்ப்பைக் காட்டுவாய்? மரம் அங்கு இருக்கும்போது, நீ வளர்ந்துவிட்டதாகக் கருதும்போது - நீ தவறாக வளர்ந்திருக்கும்போது, நீ எந்த அளவுக்குப் போரிடுவாய்? நினைவு வைத்துக் கொள், தானாக வளர்வது என்பது பெரிய விஷயமல்ல. ஒருவன் தவறான வழியில் தானாக வளர முடியும்.

உள்ளுக்குள் வளர்வது என்பது இலக்கல்ல. சரியான வளர்ச்சியும் உண்டு, தவறான வளர்ச்சியும் உண்டு. மேற்கில், இப்போது வளர்ச்சி பற்றிய எண்ணம் குறித்து நிறைய ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. ஆனால், உள்ளுக்குள் வளர்ச்சியடைவது என்பது இலக்கல்ல என்பதில் விழிப்போடு இருக்கும் எவரையும்

நான், இதுவரை சந்திக்கவில்லை. நீ தவறாகவும் வளரலாம், சரியாகவும் வளரலாம்.

அதனால் உள்ளுக்குள் வளர்ச்சி என்பது இலக்கல்ல - ஆனால் அந்த வளர்ச்சி சரியாக இருக்க வேண்டும். நீ தவறான முறையில் வளரத் தொடங்கினால், ஒவ்வோர் அடியிலும், வளர்ச்சியின் ஒவ்வொரு கட்டத்திலும் நீ மிகவும் கஷ்டப்படுவாய். நீ மேலும் முன்னேறிச் செல்லச் சரியான பாதைக்குத் திரும்புவது என்பது மிகவும் கடினமாக இருக்கும். ஏனென்றால், வளர்ச்சி என்பது விறைப்பாக, கடினமாக இருக்கும். சரியான வளர்ச்சி என்பது முற்றிலும் வித்தியாசமான விஷயம். ஆரம்பத்திலேயே ஒருவன் விழிப்போடு இருக்க வேண்டும். அதற்குத் தான் குரு தேவைப்படுவார். ஏனென்றால், ஆரம்பத்திலேயே உன்னால் எப்படி விழிப்போடு இருக்க முடியும்? முடிவில்தான் உனக்கு விழிப்புணர்ச்சி ஏற்படும். ஆரம்பத்தில் எப்படி நீ விழிப்போடு இருக்க முடியும்? அது இருட்டில் தடவுவது போலத்தான் இருக்கும்.

உன் விருப்பப்படி நீ நகர்ந்தால், தவறான முறையில் வளர்வதற்கு நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது வாய்ப்புகள் உள்ளன. ஏனென்றால், இந்த முறையில் நீ வளரக் கூடாது என்று உனக்கு எடுத்துச் சொல்வதற்கு யார் இருக்கிறார்கள்? மேலும் ஒவ்வொரு வளர்ச்சியும் ஆரம்பத்தில் நல்லவிதமாகத்தான் தோன்றும். காரணம், நீ விரிவடைகிறாய், நீ பெரிதாகிறாய். ஒவ்வொரு வளர்ச்சியும், தவறான வளர்ச்சியும் கூட நல்லவிதமாகவே தோன்றும். மேலும் தவறான வளர்ச்சிக்கு அதிக முயற்சிகள் தேவைப்படாது. அது தோட்டத்தில் உள்ள புல் செடிகளைப் போன்றது. அவற்றிற்கு அதிக கவனிப்பு தேவையில்லை. எப்போதாவது ஊற்றப்படும் தண்ணீரே அவற்றின்

வளர்ச்சிக்குப் போதுமானது. ஆனால், நீ ரோஜாக்களை வளர்க்கும்போது, அவற்றிற்கு மிகுந்த கவனிப்பு தேவை. அவற்றிற்கு ஒரு தோட்டக்காரன் தேவை. புல் செடி களுக்குத் தோட்டக்காரன் தேவையில்லை. ஆனால், ரோஜாக்களுக்கு அவன் தேவைப்படுவான்.

மேற்கில் வளர்ச்சி இயக்கம் என்பது பலவிதக் கோணங்களில் நகர்ந்து கொண்டிருக்கிறது. ஆனால், தவறான முறையில் மக்கள் வளர்வதற்கு நீ உதவி செய்தால், பின்னாளில் அது பெரும் பிரச்சினையை உருவாக்கிவிடும் என்ற உண்மையை அவர்கள் முற்றிலும் அறிந்து கொள்ளவில்லை. பிறகு, நீ உருவாக்கியவற்றை ஒவ்வொரு நாளும் அழிப்பதென்பது மேலும் மேலும் சிக்கலை ஏற்படுத்திவிடும். ஆரம்பத்திலேயே, தவறான விதைகளை அழித்து, உன்னுள் இருக்கும் சரியான விதையைச் சுட்டிக் காட்டுவதற்குக் குரு தேவைப்படு கிறார். நீ சரியான விதைகளையும் உன்னுள் சுமந்து கொண்டிருக்கிறாய்.

எது சரி, எது தவறு என்பதைத் தீர்மானிப்பதில் நீ ஒரு குழப்பவாதி. நல்லதையும் கெட்டதையும் நிர்ணயிக்க முடியாத ஒரு குழப்பவாதி. புல் செடிகளையும் ரோஜாக் களையும் இனம் பிரிப்பதில் நீ ஒரு குழப்பவாதி. யாரோ ஒருவர், உனக்காக இதை இனம் பிரித்துக் காட்ட வேண்டும். ஏனென்றால், உன்னுடைய தற்போதைய பிரக்ஞை நிலையில், இதனை உன்னால் இனம் காண முடியாது. உன்னுடைய முழு இருத்தலும் ஒரு குழப்பம்.

ஒரு சீடன் குருவிடம் வரும்போது, குருவின் மனதில் தோன்றக்கூடிய முதல் விஷயம். இவன் என்னிடம் எதற்காக வந்திருக்கிறான்? அவர் சீடனுக்குள் பார்க்கிறார். ஏன்? என்ன காரணம்? எது இவனை என்னிடம் அழைத்து வந்திருக்கிறது?

என்னிடம் வரும் ஆயிரக்கணக்கான மக்களை நான் கவனித்திருக்கிறேன். எப்போதாவது இது நிகழும். அதாவது, சரியான காரணத்துக்காக ஒரு மனிதன் வருவது என்பது, எப்போதாவது நிகழக்கூடியது. சரியான காரணத் துக்காக, தான் வந்திருப்பதாக அவன் நினைக்கக் கூடும். விஷயம் அதுவல்ல. அவன் நினைப்பது இங்கு முக்கிய மல்ல. ஏனென்றால், உண்மையான காரணம், அவன் பிரக்ஞையோடு இல்லாத நிலையில் ஆழமாகப் பதிந்திருக் கிறது. அது மேற்புறத்தில் தெரிவதில்லை. அதைப் பற்றி அவனால் யோசிக்க முடியாது.

குருவுக்குத் தோன்றக்கூடிய முதல் விஷயம். ஏன்? - இந்த மனிதன் என்னிடம் எதற்காக வந்திருக்கிறான்? சொல்வதைக் கேட்கும் நிலையில் அவன் இருக்க மாட்டான். நீ கூறுவது அனைத்தும் முக்கியத்துவம் கொண்டதல்ல. காரணம், அடுத்த கணம் நீ அதை மாற்றிக் கொள்வாய். உன் எண்ணத்தை நாளை மாற்றிக் கொள்வாய். அது மாறுபடும் தன்மை கொண்டது. பதில் சொல்லக்கூடிய பளிங்கு மையம் உனக்குள் இல்லை. உன்னுடைய பிரக்ஞையற்ற தன்மையின் ஆழத்திற்குக் குரு செல்ல வேண்டும். உன்னுடைய இருத்தலின் அடிவேர் களை அலச வேண்டும். நீ எதற்காக வந்திருக்கிறாய் என்பதைப் பார்க்க வேண்டும். நீ சொல்வதை அவரால் நம்ப முடியாது. காரணம், அது நம்பத் தகுந்தது அல்ல. உன்னை அறியாமலேயே நீ ஏமாற்றலாம். ஆனால், நீ உன்னையே ஏமாற்றிக் கொள்கிறாய். நீ எதற்காக வந்திருக்கிறாய் என்பது தெரிந்தால்தான், ஏதாவது செய்ய முடியும். பின்னர், அதை உன் பிரக்ஞை உணர்வுக்குக் கொண்டுவர வேண்டும். சரியான காரணத்தைப் பொறுத் துத்தான் உன் எதிர்கால வளர்ச்சிக்கு அடித்தளம் போட முடியும்.

பகாதீன் E.I. ஷாவின் வாழ்க்கையில் நடந்த இந்தச் சிறிய நிகழ்ச்சி, ஓர் அழகான நிகழ்ச்சி. பல விஷயங்களைப் புரிந்துகொள்ள இது உனக்கு உதவும்.

*பகாதீன் E.I-ஷா, தன்னுடைய சீடகோடிகளுடன் அமர்ந்திருந்தார். அப்போது, அவரைப் பின்பற்றும் பலர், அவரைச் சந்திப்பதற்காகப் பார்வையாளர் அறைக்கு வந்தனர்.*

சீடர்களுக்கும் பின்பற்றுபவர்களுக்கும் இடையே வித்தியாசம் உண்டு. பின்பற்றுபவன் என்பவன் கவரப்பட்டிருக்கிறான், ஆனால், இன்னும் சீடனாகவில்லை. இன்னமும் குருவின் வலையில் விழுந்துவிடவில்லை. அவனால் குருவைவிட்டு விலகவும் முடியாது, அதே சமயத்தில் உணர்வோடு கூடிய நம்பிக்கையை அவர் மீது ஏற்படுத்திக் கொள்ளவும் முடியாது. பின்பற்றுபவன் என்பவன், தெளிவான முடிவை எடுக்க முடியாமல் ஊசலாடிக் கொண்டிருப்பவன். குருவைவிட்டு விலகிச் செல்வதா, அல்லது நெருங்கி இருப்பதா என்று குழப்பிக் கொள்பவன். அவன் நெருங்கி வருவதற்குப் பயப்படுவான். காரணம், குரு என்பவர் மரணமாக விளங்குபவர். அவன் குருவைவிட்டு விலகிச் செல்லவும் பயப்படுவான். காரணம், குரு உயிர்த்தெழக் கூடியவர்.

பின்பற்றுபவன் என்பவன், ஒன்று சீடனாவான். அல்லது அவருடைய எதிரியாக மாறுவான். பின்பற்றுபவன் ஒன்று, குருவிடம் நெருங்கிச் சீடனாவான். அல்லது ஏதாவது காரணங்கள் கற்பித்து, அவரிடமிருந்து விலகி எதிரி ஆவான். எப்போதெல்லாம் பின்பற்றுபவன் விலகிச் செல்கிறானோ, அவன் எதிரியாகத்தான் மாற வேண்டும். இல்லையென்றால், பகுத்தறிவு இல்லாமல் அவன் எதற்காக விலகிச் செல்ல வேண்டும்? மாபெரும்

மனிதரான பகாதீனை, தூய ஆன்மா கொண்டவரை, குருக்களின் சக்கரவர்த்தி என்று அழைக்கப்படும் பகாதீனை விட்டு விலகிச் செல்வதற்கு, அவன் எவ்வாறு திருப்திப் பட்டுக் கொள்ள முடியும்? அதனால் E.I-ஷா: பகாதீன் என்பது அவர் பெயர். E.I-ஷா என்று அவருடைய சீடர்கள் அழைப்பார்கள். குருக்களின் குரு, குருக்களின் சக்கரவர்த்தி என்பது இதன் பொருள். அவர் சூஃபிக்களின் சரித்திரத்தில் மாபெரும் காந்த சக்திகளுள் ஒன்றாகத் திகழ்ந்தவர்.

பகாதீனைப் போன்ற மனிதர்களின் அருகில் நீ வரும்போது, நண்பனாக இருப்பதா அல்லது எதிரியாக இருப்பதா என்பதை நீ தீர்மானிக்க வேண்டும். பட்டும் படாமலும் உன்னால் இருக்க முடியாது. ஒரு தீர்மானம் எடுக்கப்பட்டே ஆகவேண்டும். நீ எந்தத் தீர்மானமும் இல்லாமல் வாழ்ந்தாலும், பகாதீன் போன்ற மனிதர்கள் உனக்குள்ளேகூட தீர்மானிக்கும் எண்ணத்தைத் தோற்று வித்து விடுவார்.

நீ தீர்மானம் இல்லாமலே வாழ்கிறாய், தீர்மானம் இல்லாமலே இறக்கிறாய். நீ என்ன செய்கிறாய் என்று உனக்குத் தெரிவதில்லை. நீ எதற்காகச் செய்கிறாய்? நீ நிஜமாகவே செய்ய விரும்புகிறாயா? அல்லது செய்ய விரும்பாமல் இருக்கிறாயா? கூட்டத்தினரின் மத்தியில் உன் மனம் அலைபாய்கிறது.

நீ குருவின் அருகில் வரும்போது நீ தீர்மானித்தாக வேண்டும். ஏனென்றால், அது ஒரு சாதாரண விஷயம் அல்ல. அதில் மிகுந்த அபாயம் இருக்கிறது. உன்னுடைய மொத்த வாழ்க்கையும் அபாயத்தில் இருக்கிறது. அதனால் நீ இந்தியாவைச் சுற்றி வந்தால், ஒன்று என் நண்பர்களைக் காண்பாய். அல்லது என் எதிரிகளைக் காண்பாய். சிலர் என் மீது தீவிரமான அன்பு செலுத்துவார்கள். அல்லது

சிலர் என்னைத் தீவிரமாக எதிர்ப்பார்கள். இப்படித்தான் எங்கும் இருக்கும். இதற்கான காரணம் சாதாரணமானது தான். என்னிடம் தீவிரமாக அன்பு செலுத்தும் தரப்பினரும், என்னைத் தீவிரமாக எதிர்க்கும் தரப்பினரும், இருவருமே தங்கள் எண்ணத்தில் தீர்மானமாக இருப்பவர்கள்தான்.

அழுத்தமான தீர்மானம் தேவை. என்னை எதிரியாகத் தீர்மானிக்கும் பட்சத்தில், என்னை எதிர்த்து நீ பேசிக்கொண்டே இருக்க வேண்டும். ஏனென்றால், அதுதான் உனக்குப் பாதுகாப்பானது. இல்லையென்றால், நீ உள்ளே இழுக்கப்பட்டு விடுவாய். நீ வலையில் சிக்கிக் கொள்வாய். தொடர்ந்து என்னை எதிர்த்துப் பேசினால் மட்டுமே, உன்னை நீ பாதுகாத்துக்கொள்ள முடியும் - என்மீது அவதூறுகளை நீ பரப்புகிறாய் என்பதல்ல அது பக்கவிளைவுப் பொருளாக இருக்கக்கூடும். ஆனால், நிஜத்தில் உன்னை நீ தற்காத்துக் கொள்கிறாய், அவ்வளவு தான். என்னை நீ தொடர்ந்து வசைமாரிப் பொழிவதன் மூலம், உன்னை நீ தற்காத்துக் கொள்கிறாய் என்று அர்த்தம். என்னை எதிர்ப்பதை நீ நிறுத்திவிட்டால், என்னை நெருங்கி விடுவாயோ என்ற பயம் உனக்கு உள்ளது. என்னை நெருங்கிவிட்டால், நீ இறந்துவிடுவாயே என்ற அச்சம் உனக்கு ஏற்படுகிறது.

பின்பற்றுபவன் என்பவன் மதிலின் நடுவில் நின்று கொண்டிருப்பவன். வீட்டின் உள்ளே குதிப்பதா? அல்லது வீட்டின் வெளியே குதித்து ஓடிவிடுவதா? என்று அவனால் தீர்மானிக்க முடியவில்லை. மதில்மேல் இருப்பவன் தான் பின்பற்றுபவன். சீடன் என்பவன் வீட்டிற்குள்ளேயே குதிக்கத் தீர்மானித்தவன். தன் குருவின் வீட்டில் ஒரு பகுதியாக மாறியவன்.

தங்கள் வாழ்க்கை முழுவதும் மதில்மேல் வாழ்ப வர்கள் பலர் இருக்கிறார்கள். அவர்கள்தான், இந்த உலகத் தில் முட்டாள்தனமான மக்கள். ஏனென்றால், மதில்மேல் உட்கார்ந்திருப்பது சௌகர்யமான நிலை அல்ல. மதில் மேல் உட்கார்ந்திருப்பது உனக்கு எதையும் தராது. அது உன் வாழ்க்கையையும் நேரத்தையும் வீணடிக்கும். ஒன்று உள்ளே வா, அல்லது வெளியே வா. நீண்ட காலம் மதில் மேல் இருக்காதே. ஏனென்றால், அது பழக்கமாகிவிடும். பிறகு, இதனால் ஏற்படக்கூடிய பலன் ஒன்றுமில்லை என்பது தான்.

*பகாதீன் EI-ஷா, தன்னுடைய சீடகோடிகளுடன் அமர்ந்திருந்தார். அப்போது அவரைப் பின்பற்றும் பலர், அவரைச் சந்திப்பதற்காகப் பார்வையாளர் அறைக்கு வந்தனர்.*

பின்பற்றுபவர்கள் இன்னமும் யோசித்துக் கொண் டிருக்கிறார்கள். எதைச் செய்வது, எதைச் செய்யக் கூடாது என்று முடிவெடுக்க முடியாமல் இருக்கிறார்கள். செயல் படுத்துவதில் அவர்களுக்கு இன்னமும் பயம் இருக்கிறது.

*E.I-ஷா அவர்கள் ஒவ்வொருவரையும் பார்த்து, அவர்கள் அங்கு வந்திருப்பதற்கான காரணத்தைக் கூறுமாறு கேட்டார்.*

அவர் பின்பற்றுபவர்களைத் தான் கேட்டார், சீடர்களை அல்ல. நீ தீட்சை பெற்றுக்கொள்ளும்போது, நீ குருவைத் தேர்ந்தெடுத்திருப்பதாக எடுத்துக் கொள்ள முடியாது. நிஜத்தில், இது தலைகீழாக விளங்குகிறது. குரு உன்னைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்.

தேர்ந்தெடுப்பதற்கு உனக்குச் சுதந்திரம் இருப்பதாக நீ நினைக்கலாம். உன்னுடைய அகம்பாவம் அப்படி ஓர்

எண்ணத்தை உனக்கு உண்டாக்கும். சுதந்திரமாகத் தேர்ந்தெடுக்கக்கூடிய மனப்பான்மை உனக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கும். ஆனால், நிஜம் என்னவென்றால், நீ குருவைத் தேர்ந்தெடுத்திருப்பதற்கு முன்னர், குரு உன்னை ஏற்கெனவே தேர்ந்தெடுத்திருப்பார். நீ அவரைத் தேர்ந்தெடுத்திருப்பதற்குக் காரணம், அவர் உன்னை ஏற்கெனவே தேர்ந்தெடுத்துவிட்டதுதான். இல்லையென்றால், உன்னால் அவரைத் தேர்ந்தெடுக்க முடியாது. அவரைத் தேர்ந்தெடுக்க முடியாத ஒரு சூழ்நிலையை அவர் உருவாக்கிவிடுவார். அவர், உன்னை வலுக்கட்டாயமாக வெளியேற்றவும் கூடும்.

எப்போதும் நினைவு வைத்துக்கொள். குரு உன்னைத் தேர்ந்தெடுத்த பிறகுதான், உன்னால் அவரைத் தேர்ந்தெடுக்க முடியும். அவருடைய ஒப்புதல் தான், அவரைத் தேர்ந்தெடுப்பதற்கான ஆசையை உனக்குள் தோற்றுவிக்கும். அவர் உன்னை ஏற்றுக்கொள்ளவில்லையானால், அவரைத் தேர்ந்தெடுப்பதற்கான ஆசை உனக்குள் எழும்பாது. அல்லது அது பலவீனமான ஆசையாக அமைந்து, நீர்க்குமிழி போல விரைவாக மறைந்துவிடும். அது தொடர்ந்து நீடிக்காது.

நீ இருக்கும் நிலையில், எதுவுமே நீண்ட காலம் தொடர்ந்து இருக்காது. நீ சந்நியாசம் பெற்றுக்கொள்ள விரும்புகிறாயா என்று உன்னிடம் நான் கேட்கும்போதே, நான் உனக்குத் தீட்சை கொடுத்துவிட்டதாகத்தான் அர்த்தம். இப்போது நடைபெறுவது வெறுமனே ஒரு விளையாட்டு. நீ சற்று நேரம் விளையாடலாம், சற்று நேரம் ஏமாற்றலாம், அவ்வளவுதான், ''யோசித்துச் சொல்கிறேன்'' என்று நீ கூறலாம். ''பொறுங்கள், எனக்கு இன்னும் சரியான நேரம் வரவில்லை. முழுமனதுடன்

என்னால் அதில் ஈடுபட முடியாது. ஐம்பது சதவிகிதம் எனக்கு உடன்பாடு உள்ளது, ஐம்பது சதவிகிதம் எனக்கு உடன்பாடு இல்லை'' என்று நீ கூறலாம்.

நான் கூறுவேன், ''சரி, முடிவெடு, தீர்மானித்துக் கொள், அதைப்பற்றி யோசி, நீ தீர்மானம் எடுத்தபின் என்னிடம் வா.''

ஆனால், நான் ஏற்கெனவே உன்னிடம் வந்துவிட்டேன். உன்னுடைய முடிவு இப்போதோ, அல்லது பிற்பாடோ, உன்னுடைய பிரக்ஞையிலிருந்து வெளி வரும். நீ சற்றுத் தாமதிக்கலாம், அவ்வளவுதான். நீ சற்றுத் தள்ளிப் போடலாம், அவ்வளவுதான்.

இதுதான் நடக்கக்கூடியது. ஒரு சீடன் குருவை எவ்வாறு தேர்ந்தெடுப்பது? எந்த அடிப்படையில் தேர்ந்தெடுப்பது?

எவ்வாறு மதிப்பிடுவது? ஒரு சீடன் என்பவன் குருவுக்குள் ஊடுருவ முடியாத நிலையில் இருப்பவன். வெளிப்புறத்திலிருந்து மட்டுமே அவன் மதிப்பிட முடியும். ஆனால் குரு வெளிப்புறத்தில் இருப்பவர் அல்லர். அவர் அனைத்துப் பொருள்களிலும் உள்ளே இருக்கக் கூடியவர்.

வெளிப்புறத்தில், குரு சில தந்திரங்களைக் கையாளலாம். அவர் அப்படிச் செய்தாக வேண்டும். காரணம், சிலரை அவர் தவிர்க்க வேண்டும். உண்மையில் சொல்லப் போனால், பலர் - மனித குலத்தின் முதல் பகுதி, பிரதானப் பகுதி, எந்தவித விசாரணையும் மேற்கொள்ளாத பகுதி - அவர்களும் குருவிடம் வருகிறார்கள். கடவுளையோ, உண்மையையோ தேடுவதற்காக அல்ல. வெறுமனே ஆர்வம், குழந்தைத்தனமான ஆர்வம். குரு அவர்களை

யெல்லாம் தவிர்க்க வேண்டும். அவர்களுக்குத் தன் மீது கவர்ச்சி ஏற்படாமல் தடுக்க, தன்னைச் சுற்றிச் சில சூழ்நிலைகளை அவர் உருவாக்க வேண்டும். அவர் தன்னைப் பற்றிச் சில வதந்திகளைப் பரப்பக்கூடும். அவர் தன்னுடைய முகத்தை வெவ்வேறு மக்களிடம் வெவ்வேறுவிதமாகக் காட்டிக் கொள்வார். குறிப்பிட்ட சில கூட்டத்தினரிடம், அவர் மிகவும் கடுமையாக, கொடூரமாக நடந்துகொள்வார். தன்னை ஒரு முட்டாள் என்று காட்டிக்கொள்ளச் சிலரிடம் முயற்சிப்பார். இதனால், இந்த மனிதன் தனக்கு ஏற்றவரல்லர் என்று அவர்களை முடிவெடுக்க வைப்பார். தன்னைவிட்டு விலகும்படி செய்வார்.

வெளிப்புறத்திலிருந்து பார்க்கும்போது, இவர் உட்புறத்தில் எந்த மாதிரி மனிதன் என்று தீர்மானிக்கக் கூடிய வாய்ப்பு இல்லை.

உன் சொந்த இருப்பின் உட்புறத்தை நீ தெரிந்து கொள்ளாத போது, ஒரு குருவின் உட்புறத்தில் உன்னால் எப்படி ஊடுருவ முடியும்? அது ஒரு மாபெரும் பள்ளத்தாக்கைப் போன்றதல்லவா? ஒருவன் மேலும், மேலும், மேலும் அதில் விழத் தொடங்குகிறான். அதனால்தான், குரு அச்சத்தை உருவாக்குகிறார். ஆழமான பிளவின் விளிம்பாகக் கருதி, நீ நடுங்கத் தொடங்குகிறாய். நீ அவரைப் பார்க்கும்போது, அவருக்குத் தலைச்சுற்றல் ஏற்படுகிறது. பயத்தால் உன் உடல் வியர்த்து நடுங்கத் தொடங்குகிறது. இல்லை, சீடன் தீர்மானிப்பதற்கு எந்த வழியும் இல்லை.

சீடனைப் பொறுத்தவரை, குருவின் மீது உணர்வு ரீதியான நம்பிக்கை கொள்வதென்பது, அவரிடம் அன்பு கொள்வதாகும். அது நிகழ்கிறது. ஆனால், குருவைப்

பொறுத்தவரை அது நிகழக் கூடியதல்ல. குருவைப் பொறுத்தவரை, அது அவருக்கு மிகவும் கவனம் கொண்ட பிரக்ஞையான நிகழ்ச்சி. சரியான மனிதனை அவர் பார்த்த கணமே, அவர் கதவுகளைத் திறந்து விடுகிறார். சரியான காரணத்திற்காக வந்திருக்கும் சரியான மனிதனை அவர் ஏற்றுக் கொள்கிறார். அந்த ஏற்றுக் கொள்ளும் தன்மை உன்னிடம் ஏதோ ஒன்றை உருவாக்குகிறது. ஒரு தீர்மானம், ஒரு குறிக்கோள், ஒரு கொழுந்துவிட்டு எரியும் ஆசை, அபிப்ஸா. நீ மேலும் மேலும் அவரிடம் நெருங்கும்போது, மரணம் என்றாலும்கூட, நீ பயப்பட மாட்டாய். அது ஒரு மரணம்தான். ஏனென்றால், மரணம் நிகழ்ந்தால்தான் உயிர்த்தெழுதல் சாத்தியமாகிறது.

குரு சீடகோடிகளுடன் அமர்ந்திருக்கிறார். அவரைப் பின்பற்றும் பலர், அவரைச் சந்திப்பதற்காகப் பார்வையாளர் அறைக்கு வந்தனர்.

*El-ஷா அவர்கள் ஒவ்வொருவரையும் பார்த்து, அவர்கள் அங்கு வந்திருப்பதற்கான காரணத்தைக் கூறுமாறு கேட்டார்.*

அது சீடர்களுக்காக நடத்தப்பட்ட ஒரு நிரூபண செயல்முறை நிகழ்ச்சி. அவர் சீடர்களிடம் சிலவற்றைச் செய்து காட்டிக்கொண்டிருந்தார். சூஃபி குருக்கள் நேரடியான போதனையை நம்புவதில்லை. அவர்கள் ஒரு சூழ்நிலையை உருவாக்கி, அதன்பிறகு செய்து காட்டுவார்கள்.

சீடர்கள் கவனித்தனர். குரு அங்கு வந்திருந்த பின்பற்றுபவர்களைப் பார்த்து, ஒவ்வொருவராக அழைத்து, அவர்கள் அங்கு வந்ததற்கான காரணம் என்ன, எது அவர்களை அங்கு வரவழைத்தது, என்ன காரணம், என்ன அவசியம், எதைத் தேட என்று கேட்டார்.

*முதலாமவர் கூறினார்: இந்த உலகத்தில் தாங்கள்தான் மிகச் சிறந்த மனிதர். அதனால் தான் நான் இங்கு வந்துள்ளேன்.*

பகாதீன் என்ற மனிதன் உலகிலேயே மிகச் சிறந்த மனிதன் என்பதை நீ எவ்வாறு அறிவாய்? இதற்கான அடிப்படை என்ன, மைல்கல் என்ன, யார் சிறந்தவர், யார் மிகச் சிறந்தவர் என்பதை உன்னால் எப்படித் தீர்மானிக்க முடிந்தது?

*EI-ஷா கூறினார்: அவன் உடல்நிலை சரியில்லாமல் இருந்தபோது, அவனுக்கு நான் மருந்து கொடுத்தேன். அதனால், நான் தான் இந்த உலகத்தில் மிகச் சிறந்த மனிதர் என்று அவன் கருதுகிறான்.*

இதுதான் காரணம். அடிப்படையும் மைல்கல்லும் இதுதான். அவன் நோய்வாய்ப்பட்டிருந்த போது, நான் கொடுத்த மருந்து உதவியது. அதனால், நான் இந்த உலகத்திலேயே மிகச் சிறந்த மனிதன். ஒருவேளை, அந்த மருந்து சரியாக வேலை செய்யாமல் இருந்திருந்தால், அவன் என்னை ஏறெடுத்தும் பார்த்திருக்க மாட்டான். அவன் நன்றாக வேலை செய்யக்கூடிய மருந்தை அளிக்கும் பிறகு, நன்றாக வேலை செய்யக்கூடிய மருந்தை அளிக்கும் வேறொரு மனிதனை அவன் பார்த்திருப்பான். அவனை, இந்த உலகிலேயே மிகச் சிறந்த மனிதன் என்று சொல்லியிருப்பான்.

நீ எப்படி மதிப்பிடுகிறாய்? இதைப் போன்ற சிறிய விஷயங்களால் தான். நோய், மருந்து போன்ற சிறிய விஷயங்கள். நீ குணமடைந்தால் கூட, அதற்காக, பகாதீனிடம் வருவது ஒரு பெரிய விஷயமல்ல. நீ ஒரு மருத்துவரிடம் சென்றிருந்தால், உனக்கு இதைவிடச் சிறப்பான நிவாரணம் கிடைத்திருக்கக் கூடும்.

உடல்நிலைக் கோளாறினால் பலர் என்னிடம் வருகிறார்கள். பலவித மருத்துவர்கள், அந்தப் பதி, இந்தப் பதி என்று பலவற்றையும் முயற்சி செய்து பார்த்துவிட்டு, எந்தப் பலனும் ஏற்படாததால், அவர்கள் இங்கு வருகிறார்கள். பிறகு, அவர்கள் கடவுளைப் பற்றிப் பேசுகிறார்கள். அவர்களுக்குக் கடவுள் மீது எந்த ஈடுபாடும் இல்லை என்பது எனக்குத் தெரிகிறது. அவர்கள் மனரீதியாகவும், உடல் ரீதியாகவும் நோய்வாய்ப்பட்டிருக்கிறார்கள். ஏதாவது அற்புதம் நடைபெறாதா என்று ஏங்குகிறார்கள். அதிசய மருந்தைத் தேடுகிறார்கள். அவர்கள் தியானத்தைப் பற்றிப் பேசுகிறார்கள், கடவுளைப் பற்றிப் பேசுகிறார்கள், சந்நியாசம் பெற்றுக்கொள்ளக்கூட அவர்கள் தயாராக இருக்கிறார்கள். ஆனால், அவர்களுடைய தேடல் தவறானது. அவர்கள் என்னிடம் வர வேண்டியவர்கள் அல்லர். அவர்கள் செல்ல வேண்டியது மருத்துவர்களிடம். காரணம், அவர்களிடம் உள்ள ஆன்மிக உந்துதலைப் பற்றிக்கூட அவர்கள் அறிந்திருக்கவில்லை. அது ஏதோ உடல்ரீதியாகவோ, அல்லது மனரீதியாகவோ ஏற்படுவது. இரண்டும் ஒன்றுதான். ஏனென்றால், உன் மனமும் உடலும் வெவ்வேறானவை அல்ல. அவை ஒரே அசாதாரணத் தோற்றத்தின் இரண்டு துருவங்கள்.

நீ குணம் அடைந்தாலும் கூட, எதுவும் உன்னுள் குணப்படுத்தப்படவில்லை. உனக்கு ஆரோக்கியமான உடம்பு இருந்தாலும் கூட, உன்னுடைய உள்புற வளர்ச்சியிலும், எந்த வித்தியாசமும் ஏற்படப் போவதில்லை. உன்னுடைய ஆரோக்கியம், உனக்கு சந்தோஷத்தைத் தராமல் கூட இருக்கலாம். அது உனக்கு சாபக்கேடாகவும் கூட இருக்கலாம்.

இயேசுவின் வாழ்க்கையில் நடந்த ஒரு நிகழ்ச்சி என் நினைவுக்கு வருகிறது. கிறிஸ்துவ நூல்களிலோ, பைபிளிலோ இடம்பெறாத உபகதை இது. ஆனால், சுஃபிக்கள் இயேசுவைப் பற்றிய இந்தக் கதையைச் சொல்வதுண்டு.

அந்தக் கதையில், இயேசு ஒரு சிறிய நகரத்துக்குள் நுழைகிறார். அப்போது, ஒரு வேசியின் பின்னால், ஒரு ஹிப்னாடிச மயக்கத்தில், காந்தக் கவர்ச்சியில், ஒரு மனிதன் சென்று கொண்டிருந்தான். இயேசு, அந்த மனிதனை நிறுத்திக் கேட்டார், ''நீ என்ன செய்கிறாய்? இதுபோன்ற முட்டாள்தனமான காரியங்களில் உன்னுடைய வாழ்க்கையை ஏன் பாழாக்கிக் கொள்கிறாய்?''

அந்த மனிதன் இயேசுவைப் பார்த்துக் கூறினான். ''ஆண்டவரே, என்னைத் தெரியவில்லையா? ஆனால், எனக்கு உங்களை நினைவிருக்கிறது - என்னால் எப்படி மறக்க முடியும்? நான் குருடனாக இருந்தபோது, என்னுடைய கண்களை நீங்கள் தொட்டீர்கள், இப்போது என்னால் பார்க்க முடிகிறது. ஆனால், பார்வை பெற்ற என் கண்களைக் கொண்டு, ஓர் அழகான உடலை ரசிப்பதை விட நான் வேறு என்ன செய்யமுடியும்? பார்ப்பதற்கு வேறு என்ன இருக்கிறது? நான் குருடனாக இருந்தபோது, ஆண்டவரே, தங்களுடைய மேன்மையால் என்னை ஆசீர்வதித்தார்கள். இப்போது, என்னால் பார்க்கவும், அனுபவிக்கவும் முடிகிறது.

இயேசு மிகுந்த வருத்தம் அடைந்தார். குருடனுக்கு அளிக்கப்பட்ட பார்வை, அவனுக்கு சாபக்கேட்டை உண்டாக்கும் என்று அவர் நினைத்துப் பார்க்கவில்லை.

அந்த மனிதனைப் போல இருந்தால், உனக்கு அளிக்கப் படும் ஆசீர்வாதங்கள் அனைத்தும் சாபக்கேடாக மாறிவிடும்.

பிறகு, அவர் இன்னொரு மனிதனைச் சந்தித்தார். அவன் குடிபோதையில் சாக்கடையில் புரண்டு கொண் டிருந்தான். அவன் கத்திக்கொண்டும், அழுதுகொண்டும், உளறியபடி இருந்தான். இயேசு அந்த மனிதனின் அருகில் சென்று கேட்டார்.

''குடிப்பழக்கத்தால், உன்னுடைய வாழ்க்கையை ஏன் பாழடித்துக் கொண்டிருக்கிறாய்? வாழ்க்கை என்பது தெய்விகத்தை அறிந்துகொள்வதற்கும், உணர்ந்து கொள் வதற்கும் உள்ள ஒரு மாபெரும் வாய்ப்பு அல்லவா? இருப்பது ஒரே ஒரு வாழ்க்கை. அதைத் தவறவிட்டால், பிறகு எப்போதும் கிடைக்காதே! காலம் மீண்டும் திரும்புவதில்லை. உன்னால் அதை மறுபடியும் பெற முடியாது. விழித்துக் கொள்.

இயேசு கூறியதைக் கேட்டதும், அந்தக் குடிகாரன் கண்களைத் திறந்து கூறினான்: ''ஆண்டவரே, என்னை மறந்துவிட்டீர்களா? நான் நோயினால் பாதிக்கப்பட்டுப் பத்து வருடங்களாகப் படுத்த படுக்கையில் கிடந்தேன். நீங்கள் என்னைத் தொட்டவுடன் நான் குணமடைந்தேன். இப்போது நான், ஆரோக்கியமாக இருக்கிறேன். இந்த உடம்பை வைத்துக்கொண்டு, நான் வேறு என்ன செய்வது? நான் அனுபவித்துக் கொண்டிருக்கிறேன். சாப்பிடுவது, குடிப்பது என்று மகிழ்ச்சியாக இருக்கிறேன். நான் இப்போது ஆரோக்கியமாக இருப்பதற்குக் காரணம் நீங்கள் தான். நீங்கள் ஒரு மகத்தான புண்ணியவான்.''

இயேசு மிகவும் வருத்தமடைந்தார். ஒரு மனிதனின் ஆரோக்கியம் சாபக்கேடாக மாறக்கூடும் என்று அவர் எதிர்பார்க்கவில்லை. அவர் திரும்பி விட்டார். மிகுந்த வருத்தத்தினால், அவர் நகரத்திற்குள் தொடர்ந்து செல்ல வில்லை.

அவர் அந்த நகரத்தைவிட்டு வெளியேறியபோது, ஒரு மனிதன், ஒரு மரத்தில் தூக்குக் கயிறை மாட்டித் தற்கொலை முயற்சியில் ஈடுபட்டுக் கொண்டிருப்பதைப் பார்த்தார். சரியான நேரத்தில் அங்கு சென்ற இயேசு, அவனைத் தடுத்து நிறுத்திக் கூறினார், ''நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்? வாழ்க்கை என்பது ஒவ்வொரு கணமும் விலை மதிக்க முடியாதது. கடவுள் உனக்குத் தந்திருக்கும் இந்த வெகுமதியை நீ அழிக்க முயற்சிக் கிறாயே, ஏன் இப்படிச் செய்கிறாய்?''

அவன் இயேசுவைப் பார்த்துக் கூறினான், ''எனக்குப் பிரச்சினையை உருவாக்கியவர் நீங்கள்தான் என்பதை என்னால் மறக்க முடியாது. நான் இறந்துவிட்டேன். தாங்கள் என்னைத் தொட்டதால், எனக்கு மீண்டும் உயிர் வந்துவிட்டது. நான் இப்போது என்ன செய்வது? வாழ்க்கையென்பது அர்த்தமற்றது. நான் உங்களிடம் கேட்டுக் கொள்வதெல்லாம் இதுதான், என்னைத் தொடாதீர்கள். முடிந்தது முடிந்து விட்டது. இறந்துபோன எனக்கு உயிர் தந்தீர்கள். ஆனால், இதைப் போன்று வேறு யாருக்கும் செய்யாதீர்கள். எனக்கு வாழ்க்கை வெறுத்துவிட்டது. மரணத்தை நான் ஆசீர்வாதமாக நினைத்தேன். ஆனால், நீங்கள் மீண்டும் எனக்கு உயிர் கொடுத்துவிட்டீர்கள். நீங்கள் என்னைத் தொட்டால்,

மறுபடியும் மூன்று வருடம் நான் தொடர்ந்து கஷ்டப்பட நேரிடும். நான் இப்போது தற்கொலை செய்து கொள்ளப் போகிறேன். தயவுசெய்து இங்கிருந்து போய் விடுங்கள். யாருக்குத் தெரியும், நீங்கள் மறுபடியும் என்னைத் தொட்டாலும் தொடுவீர்கள்.''

ஆரோக்கியம், வாழ்க்கை, வலிமை, இளமை - அனைத்தையும் நீ சாபக்கேடாக மாற்றிவிடுகிறாய். ஏனென்றால், அனைத்தும் உன் பிரக்ஞையைப் பொறுத்தே அமைகிறது. சிலர் இருக்கிறார்கள் - தங்கள் நோயை ஆசீர்வாதமாக மாற்றியவர்கள், தங்கள் பார்வைக் குருடை ஆழ்ந்த அறிவாக மாற்றியவர்கள், மரணத்தைப் புதிய வாழ்க்கையாக மாற்றியவர்கள். அனைத்தும் அவரவர் மனப்பாங்கைப் பொறுத்தது.

*EI-ஷா கூறினார்: அவன் உடல்நிலை சரியில்லாமல் இருந்தபோது, அவனுக்கு நான் மருந்து கொடுத்தேன். அதனால் நான் தான் இந்த உலகத்தில் மிகச் சிறந்த மனிதர் என்று அவன் கருதுகிறான்.*

அதனால்தான் அவன் இங்கு வந்திருக்கிறான், எனக்காக அல்ல. உள்ளார்ந்த தேடலுக்காக அவன் வரவில்லை. அவன் வந்திருப்பது, நான் மருந்து கொடுத்ததற்காக. சொல்லப்போனால், நான் சிறந்தவனல்லன், அந்த மருந்துதான் சிறந்தது. ஒருவேளை, அவனுக்கு மறுபடியும் நோய் உண்டானால் நான் மருந்து கொடுப்பேன் என்பதற்காகத்தான் அவன் இங்கே வருகிறான்.

அவனைப் பொறுத்தவரை நான் ஒரு மருத்துவன் மட்டுமே. வேறு எதுவும் இல்லை. எவ்வளவு பெரிய

விஷயம் வீண்? பகாதீன் போன்ற மகத்தானவரை நீ வீணடிக்கிறாய். அவர் தரும் வாய்ப்பினை நீ வீணடிக் கிறாய். அவரை மருத்துவர் என்ற கண்ணோட்டத்தில் நீ பார்க்கிறாய்.

ஆனால், இந்த உலகத்தில் வாழும் மிகப் பலர், சந்நியாசிகள் அற்புதங்கள் செய்வார்கள் என்ற எண்ணத்தில் தான், அவர்களிடம் செல்கிறார்கள். இவர்கள் தவறான மக்கள். அதனால்தான், நான் சொல்கிறேன். நீ தவறான மனித குலத்தை, மூன்றாவது பகுதியினரை, பிரதான பகுதி யினரைச் சந்திக்க விரும்பினால், நீ செய்ய வேண்டியது சத்ய சாய்பாபாவிடம் - அங்கே, பலதரப் பட்ட தவறான மக்கள் அவரைச் சூழ்ந்திருப்பதை நீ காணலாம். அதிசயங்கள் எங்கெல்லாம் நடத்தப்படு கிறதோ, அவை அதிசயங்களாக இருக்க வாய்ப்பில்லை. அது வெறுமனே ஒரு மேஜிக், தந்திரம். ஆனால், இந்த அதிசயங்களை நிகழ்த்துபவர்களிடம் தவறான மக்கள் உடனடியாகக் கவர்ந்து இழுக்கப்படுகிறார்கள். பெரும் பாலான மக்கள் கூட்டம் அவர்களைப் பின்தொடர்ந்து ஓடுகிறது. அவர்கள், தங்களை ஆன்ம சாதகர்களாகக் கருதிக் கொள்கிறார்கள். மக்கள் செல்வது ஆரோக்கியத் திற்காகவும், பணத்திற்காகவும், இன்னும் இதுபோன்ற சில ஆசைகளுக்காகவும் தான்.

நீ உன்னுடைய உலக ஆசையைப் பூர்த்தி செய்து கொள்வதற்காக இங்கு வந்திருப்பாயேயானால், நீ தவறான மனிதனை நெருங்குகிறாய் என்று அர்த்தம். ஏனென்றால், நான் எந்த அதிசயத்தையும் செய்யப் போவதில்லை. ஆனால், தவறான மக்களைக் கவர்ந்திழுக்க அதுதான் வழி. நான் உன்னைக் குணப்படுத்தப் போவதில்லை.

தவறான காரணத்திற்காக, நான் எதையும் செய்யப் போவ தில்லை.

*இரண்டாவமன் கூறினான்: தங்களைப் பார்க்க நான் அனுமதிக்கப்பட்டதால், என்னுடைய ஆன்மிக வாழ்க்கை யின் கதவு திறக்கப்பட்டுவிட்டது.*

*EI-ஷா கூறினார்: அவன் நோய்வாய்ப்பட்டிருந்தான். அவனைக் கவனிக்க எவருமில்லை. அப்போது அவன் அருகில் நான் அமர்ந்தேன். அவனுடைய முகத்தில் ஒரு சாந்தம் ஏற்பட்டது. அதைத்தான், தன் ஆன்மிக வாழ்க்கையின் கதவு திறக்கப்பட்டுவிட்டதாக அவன் கூறுகிறான்.*

மேற்கில் உள்ள மனோதத்துவ சிகிச்சை முறை மொத்தமும் இப்படித்தான் செயல்படுகிறது. ஒரு மனோதத்துவ நிபுணர் எதையுமே செய்வதில்லை. அவர் வெறுமனே கேட்டுக் கொள்கிறார். நோயாளி படுக்கை யில் சௌகர்யமான நிலையில் படுக்க வைக்கப்படு கிறான். மனோத்த்துவ நிபுணர் அவன் அருகில் அமர்ந்தபடி. அவன் கூறுவதைக் கேட்கிறார். நோயாளி, தன் மனதில் என்னவெல்லாம் நினைக்கிறானோ, அவை அனைத்தையும் சொல்வதற்கு அனுமதிக்கப்படுகிறான். அவன் மனதில் தோன்றும் எல்லா விஷயங்களையும் வெளிப்படுத்த, அவனுக்கு அனுமதி அளிக்கப்படுகிறது. பிறகு, ஒரு மணிநேரம் கடந்ததும், நோயாளிக்கு ஒருவித அமைதி ஏற்படுகிறது.

வெறுமனே பேசுவதன் மூலம் கிடைக்கக்கூடிய ஒரு மன அமைதி இது. மூன்று அல்லது நான்கு அல்லது ஐந்து வருடம், இந்த மனோதத்துவ சிகிச்சை முறை தொடரும் போது, நோயாளிக்கு நிறைய பணம் செலவாகிறது. அதுவும்கூட உன்னை அமைதிப்படுத்த உதவுகிறது.

எப்போதுமே, விலை அதிகமான மருந்து, விலை குறைவான மருந்தைவிட நன்றாக வேலை செய்யும். விலை குறைவான மருந்து சிறப்பாக வேலை செய்யக்கூடும். ஆனால், அது முக்கியமல்ல. அதன் விலைதான் முக்கியம். நீ அதிகமாக விலை கொடுக்கும் போது, உனக்கு ஏதோ ஒரு திருப்தி உண்டாகிறது. இல்லையென்றால், உன்னை நீயே முட்டாளாக நினைத்துக் கொள்வாய்.

ஐந்து வருடம் மனோதத்துவ சிகிச்சை, ஆயிரக் கணக்கான டாலர்கள் செலவு - இதுதான் ஒருவனுக்குத் திருப்தியை உண்டாக்கக் கூடியது. இல்லையென்றால், நீ முட்டாளாகக் கருதப்படுவாய். மக்கள் சிரிப்பார்கள்.

ஆனால் பேசுவது உதவும். மனத்தில் உள்ள பாரம் இறங்கிவிடும். அது ஒரு கேத்தார்ஸிஸ் (Catharsis) மனம் அதன் போக்கில் சொல்லிக்கொண்டே இருக்கும்போது, உன் மனதில் உள்ள விஷயங்கள் வெளியேறுகின்றன. இதை யாரோ ஒருவர் கேட்டுக் கொண்டிருக்கிறார். இதுதான் ஒட்டுமொத்தத் தந்திரம். மனோதத்துவ சிகிச்சை முறையின் வியாபார ரகசியம் இதுதான். நீ சொல்வதை யாரோ ஒருவர் கேட்டுக் கொண்டிருப்பது. இந்த உலகத்தில், இந்த வாழ்க்கையில், எவர் பேசுவதை எவர் கவனிக்கிறார்கள்? நீ சொல்வதை எவரும் கவனிப்ப தில்லை. உண்மையில் சொல்லப் போனால், நீ எப்போது பேச்சை நிறுத்துவாய் என்றுதான் காத்துக் கொண்டிருப் பார்கள். அப்போதுதானே, அவர்கள் பேசத் தொடங்க முடியும்?

நான் கேள்விப்பட்ட ஒரு நிகழ்ச்சி: டவுன் ஹாலில் ஒரு கூட்டம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. ஒரு வயதான அரசியல்வாதி பேசிக்கொண்டே இருந்தார்.

அவர் தன் பேச்சை நிறுத்துவதாகத் தெரியவில்லை. அங்கு கூடியிருந்த மக்கள், கொஞ்சம் கொஞ்சமாக, அந்த ஹாலைவிட்டு வெளியேறத் தொடங்கினர். கடைசியில் முல்லா நசிருதீன் மட்டும் அங்கு இருந்தார். அவர் ஒருவர் மட்டும்தான். மிகுந்த மகிழ்ச்சியடைந்த அந்தப் பேச்சாளர், நசிருதீனுக்கு நன்றி கூறினார்: ''தாங்கள் என் பேச்சை, இவ்வளவு தூரம் விரும்புவீர்கள் என்று நான், நினைக்கவில்லை. என்னுடைய சிந்தனைகள் இவ்வளவு தூரம் தங்களைக் கவர்ந்திருப்பதையோ, அல்லது என்னுடைய தத்துவங்கள் தங்களை ஈர்த்திருப்பதையோ நான் எதிர்பார்க்கவில்லை.

நசிருதீன் கூறினார்: ''நீங்கள் என்னைத் தவறாகப் புரிந்துகொண்டீர்கள். உங்களுக்கு அடுத்ததாகப் பேச இருக்கும் பேச்சாளர் நான். தாங்கள் பேச்சை எப்போது நிறுத்தப் போகிறீர்கள் என்பதற்காகத் தான் நான் காத்துக் கொண்டிருக்கிறேன்.''

ஆனால், இது அன்றாடம் நிகழக்கூடியது. நீ யாரிடமாவது பேசும்போது, உன் பேச்சில் நீ மிகுந்த ஆர்வத்தைக் காட்டுவாய். அது ஒரு கேதார்ஸிஸ். அது உதவுகிறது: நீ சற்று அமைதியடையவும், உன்னுடைய மனம் இறுக்கத்திலிருந்து விடுபடவும் அது உதவுகிறது. நீ அவர்களைப் பற்றிப் பேசுகிறாய், அவர்களைப் பற்றிச் சிறிது விழிப்பு உனக்கு உண்டாகிறது. அவர்கள் ஒரு பெரிய சுமையாக உனக்கு இருப்பதில்லை. அவர்களை நீ ஏற்றுக்கொள்ள முடிகிறது.

ஆனால், அடுத்தவர் கவனிப்பதில்லை. காரணம், அவரும் அதே படகில் சவாரி செய்பவர். அவருக்கே உரிய ஆதங்கங்கள் போதுமான அளவிற்கு அவரிடம் இருக்கிறது. அவரால், உன் பேச்சை எப்படி கவனிக்க முடியும்? உண்மையிலேயே அவர் உன் பேச்சைக்

கேட்பாரேயானால், அவர் உன்னுடைய ஆதங்கங்களையும் சேர்த்துச் சுமக்க வேண்டியிருக்கும். அதனால் அவர் மூடிய மனதுடன் உன் பேச்சைக் கேட்கிறார். உன்னுடைய பேச்சை ஒரு காதில் வாங்கி, இன்னொரு காது வழியாக விட்டுவிடுகிறார். இது வழக்கமாக நடைபெறக்கூடியது தான். இல்லையென்றால், உன்னுடைய ஆதங்கங்கள் அவருடைய மனதில் தங்கிவிடும். அவர் பேசத் தொடங்க வேண்டும் என்பதற்காக, நீ எப்போது பேச்சை நிறுத்துவாய் என்று அவர் காத்துக் கொண்டிருப்பார்.

ஒரு பைத்தியக்கார விடுதியில் நடந்த ஒரு நிகழ்ச்சியை நான் கேள்விப்பட்டேன். இரண்டு பைத்தியங்கள் பேசிக் கொண்டிருப்பதை, சாவித் துவாரத்தின் வழியாக, ஒரு மனோதத்துவ நிபுணர் பார்த்துக் கொண்டிருந்தனர். மிகவும் ஆழமான உரையாடலில் ஈடுபட்டிருந்த அவர் களைத் தொந்தரவு செய்ய அவர் விரும்பவில்லை. அந்த இருவரும் ஒரு பல்கலைக் கழகத்தில் பேராசிரியர்களாக இருந்தவர்கள். பேராசிரியர்களுக்குத்தான் பைத்தியங் களாக ஆவதற்கு நிறைய வாய்ப்புகள் இருக்கின்றன. அவர்கள் பார்க்கும் வேலையே ஒரு பைத்தியக்காரத் தனமான வேலை. அவர்கள் நிறைய சிந்திப்பவர்கள், நிறைய யோசிப்பவர்கள், சிந்தனைகளும் யோசனைகளும் மிக அதிகமாக ஏற்படும்போது, பைத்தியம் பிடித்து விடுகிறது.

அந்த இரண்டு பேராசிரியர்களும் பேசிக்கொண்டிருப் பதை, மனோதத்துவ நிபுணர் சாவித் துவாரத்தின் வழியாகப் பார்த்துக் கொண்டிருந்தார். ஒரு விஷயம் அவருக்கு ஆச்சரியத்தை ஏற்படுத்தியது. அவர்கள் முட்டாள்தனமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் பேசும் விஷயங்கள், ஒன்றுக்கொன்று முரண்பட்டு

விளங்கியது. ஒரு வாக்கியத்திற்கும் அடுத்த வாக்கியத் திற்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. ஒருவர் ஏதோ ஒன்றைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர். அடுத்தவர் ஏதோ ஒன்றைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார். ஒருவருக்கொருவர் தொடர்பு இல்லாமல் ஏதேதோ பேசிக் கொண்டிருந்தார்கள். பைத்தியக்காரர்கள் நடந்துகொள்ளும் விதம் இப்படித்தான் இருக்குமென்பதால், இதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை. ஆனால், ஆச்சரியம் தரக்கூடிய உண்மை என்னவென்றால், ஒருவர் பேசிக் கொண்டிருக்கும்போது, அடுத்தவர் வெறுமனே கவனித்துக் கொண்டிருந்தார். அவர் நிறுத்தும்போது, அடுத்தவர் பேச்சை ஆரம்பிப்பார். ஆனால், முதலாமவர் பேசுவதற்கும் இவர் பேசுவதற்கும் எந்தச் சம்பந்தமும் இருக்காது. அவர் தான் பாட்டுக்கு ஏதோ ஒன்றைப் பற்றிப் பேசத் தொடங்குவார்.

இது இப்படியே தொடர்ந்து கொண்டிருந்தது. பிறகு, அந்த மருத்துவர் கதவைத் தட்டினார். அவர்கள் கதவைத் திறந்தார்கள். மருத்துவர் கூறினார், "ஒரு விஷயம் எனக்கு மிகுந்த ஆச்சரியம் அளிக்கிறது. அதைப் பற்றித் தெரிந்து கொள்ள ஆவலாக இருக்கிறேன். ஒருவர் பேசும்போது, அடுத்தவர் ஏன் பேச்சை நிறுத்திவிடுகிறீர்கள்? ஆனால், நீங்கள் இருவரும் ஒருவருக்கொருவர் சம்பந்தம் இல்லா மல் பேசிக்கொண்டு இருக்கிறீர்கள். ஒருவர் பூமியைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கும் போது, அடுத்தவர் வானத்தைப் பற்றிப் பேசுகிறீர்கள். இரண்டுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை - பிறகு, ஒருவர் பேசும்போது மற்றவர் ஏன் பேச்சை நிறுத்திவிடுகிறீர்கள்?

அவர்கள் சிரித்துவிட்டுக் கூறினார்கள், "உரை யாடலின் விதிமுறைகள் எங்களுக்குத் தெரியாது என்று நினைத்துவிட்டீர்களா?" உரையாடலின் விதிமுறை

இதுதான்: நீ பேசும்போது அடுத்தவர் நிறுத்த வேண்டும். அடுத்தவர் ஆரம்பிக்கும்போது நீ நிறுத்தவேண்டும். அதுதான் மரியாதை. ஆனால், உன்னுடைய உட்புறப் பேச்சோடு உனக்குத் தொடர்பு இருக்கிறது. அடுத்தவரும், அவருடைய உட்புறப் பேச்சோடு தொடர்பு கொண்டிருக் கிறார். நீ அருகில் நெருங்கினாலும் இணைந்துவிடுவ தில்லை. உரையாடல் எப்போது சாத்தியம் என்றால், நீ அடுத்தவர் பேசுவதைக் கவனிக்கும்போது, மற்றவர் பேசும்போது நீ முற்றிலும் மௌனமாக இருக்கும்போது: அப்போதுதான் உரையாடல் நிகழும். மற்றவர் பேசும் போது, நீ உனக்குள்ளாகப் பேசிக் கொண்டிருக்கிறாய். உன்னுடைய உட்புறப் பேச்சில் நீ ஈடுபட்டிருக்கும் போது, உரையாடல் எவ்வாறு சாத்தியப்படும்? அது ரெயில் தண்டவாளத்தைப் போன்றது. ஆயிரக்கணக்கான வருடம் ஆனாலும், தண்டவாளங்களால் ஒன்றாக இணைய முடியாது.

மனதிலிருந்து சில விஷயங்களைத் தூக்கியெறிய, மக்களுக்கு கேதார்ஸிஸ் தேவைப்படுகிறது. இந்தப் பரபரப்பான உலகில், முக்கியமாக மேற்கு நாடுகளில், நீ பேசுவதைக் கேட்பதற்கு ஒருவருமில்லை. மனோதத்துவச் சிகிச்சைக்கு இதுதான் காரணம். தொழில் ரீதியாகக் கேட்கும் ஒருவர் - நீ பேசுவதைக் கேட்பதற்காகவே நீ அவருக்குப் பணம் தருகிறாய். அது உனக்குத் திருப்தியை ஏற்படுத்துகிறது. மனோதத்துவ சிகிச்சை என்பது வேறொன்றுமில்லை, அது தொழில் ரீதியாகப் பேச்சைக் கேட்பதே.

நீ கவனம் செலுத்துகிறாய், ஏனென்றால் உனக்குப் பணம் தரப்படுகிறது. அந்தப் பேச்சு எவ்வளவுதான் அறுவையாக இருந்தாலும், புன்னகை தவழும் முகத்துடன் நீ அதைக் கேட்கிறாய். ஆர்வம் காட்டுகிறாய்,

கவனம் செலுத்துகிறாய். நோயாளியின் அகந்தை அமைதி யடைகிறது. நீ பேசுவதை யாரோ ஒருவர் கேட்கிறார். அந்த யாரோ ஒருவர் சாதாரணமானவர் அல்லர் - அவர் தனித்துவம் மிக்கவர். அசாதாரணமான மனிதர் - பிரபலமானவர், மிகச் சிறந்தவர் - இந்த உலகம் முழு வதும் அறிப்பட்டவர். மாபெரும் மனோதத்துவ நிபுணர். நான் மாபெரும் என்று குறிப்பிடுவது, அவர் அதிகமாக அறிந்தவர் என்ற அர்த்தத்தில் - அவர் நோயாளிகளுக்குச் செய்யக்கூடிய உதவிகளைப் பொறுத்து, அந்த நோயாளி அவரிடம் நன்றி செலுத்துகிறார். அதிக முக்கியத்துவம் உள்ளவர்களுக்கு அதிக கவனம் செலுத்தமுடியும்.

மனோதத்துவம் பயின்றுவரும் இளைஞர் ஒருவர், வயதுமுதிர்ந்த தன் ஆசிரியரிடம் இவ்வாறு கேட்டார்: ''எனக்கு மிகவும் ஆச்சரியமாக இருக்கிறது. இரண்டு அல்லது மூன்று நோயாளிகளைப் பார்த்துப் பேசிய உடனேயே, எனக்கு அலுப்பும் சோர்வும் ஏற்பட்டுவிடு கிறது. காரணம், அவர்களுடைய பேச்சு அந்த அளவுக்கு முட்டாள்தனமாக இருக்கிறது. வேறு வழியின்றி, நான் அதைக் கேட்டாக வேண்டும். என்னால் எதுவும் செய்ய முடியவில்லை. அவர்களிடமிருந்து தப்பிக்க முடியாது. நான் கவனித்துத்தான் ஆகவேண்டும். நான் இதில் ஆர்வம் காட்டித்தான் ஆகவேண்டும். மூன்றாவது நோயாளியை நான் கவனித்து முடித்தவுடன், என்னுடைய மொத்த சக்தியையும் நான் இழந்துவிடுகிறேன். ஆனால், உங்க ளுடைய செயல்பாடு எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. நீங்கள் நாள் முழுவதும், காலையிலிருந்து மாலைவரை, சோர்வடையாமல் நோயாளிகளைக் கவனிக்கிறீர்களே!''

அந்த வயது முதிர்ந்த நிபுணர் சிரித்துவிட்டுக் கூறினார், ''அவர்கள் சொல்வதை யார் கவனிக்கிறார்கள்? கவனிப்பதைப் போல முகத்தை வைத்துக் கொள்வேன்,

அவ்வளவுதான். கவனிப்பது போலப் பாவனை செய்வதில், நான் வல்லவனாகி விட்டேன். சிரிக்காமலே சிரிப்பேன். காதை மட்டுமே கொடுப்பேன். ஆனால், எதையும் கேட்டுக்கொள்ள மாட்டேன். யார் கேட்பார்கள்?''

ஆனால், ஒருவர் கவனிப்பதோ, கவனிக்காமல் இருப்பதோ முக்கியமல்ல. ஆர்வமாகக் கேட்பது போலப் பாவனை செய்தாலே போதும். அது நோயாளிக்குத் திருப்தியை உண்டாக்கிவிடும். அவன் தொடர்ந்து பைத்தியக்காரத்தனமாக எதையாவது உளறிக்கொண்டே இருப்பான். ஆனால், அந்தப் பைத்தியக்கார மனம் கூட, தான் பேசுவதை யாரோ கூர்ந்து கவனிக்கிறார்களே என்ற எண்ணத்தில் சந்தோஷப்பட்டுக் கொள்ளும். அவனுடைய அகந்தை திருப்திப்பட்டுக் கொள்ளும்.

இது தினமும் நடைபெறுவதை நான் பார்க்கிறேன். சிலர் என்னிடம் வருகிறார்கள். என்னிடமிருந்து எதையாவது தெரிந்துகொள்ள வேண்டும் என்பதற்காக அல்ல. அவர்கள் என்னிடம் வருவது, அவர்களுக்குத் தெரிந்த ஏதாவது சில விஷயங்களை என்னிடம் சொல்வதற்காக. அவர்கள் என்னிடம் பேசுவதால் திருப்திப்பட்டுக் கொள்வார்கள். இதனால், தாங்கள் என்ன கூறினோம் என்பதையும், எதற்காகப் பேசினோம் என்பதையும் அவர்கள் மறந்து விடுவார்கள். அவர்கள் தொடர்ந்து பேசிக் கொண்டே இருப்பார்கள். அவர்களுடைய பேச்சை நிறுத்துவதென்பது மிகவும் கடினம். பேசுவதுதான், அவர்களுக்கு ஆத்மதிருப்தியை உண்டாக்கும்.

ஒருநாள், என்னிடம் ஒருவர் வந்தார். அவருக்குச் சில பிரச்சினைகள் இருப்பதாகவும், அவற்றை என்னால்தான் தீர்க்க முடியும் என்று தான் கருதுவதாகவும் அவர்

அடிக்கடி கூறினார். என்னைத் தவிர வேறு எவராலும் அவருடைய பிரச்சினையைத் தீர்க்க முடியாது என்பதால், என்னிடம் வந்திருப்பதாகவும், தனக்காக நேரம் ஒதுக்கித் தரும்படியும் அவர் கேட்டுக்கொண்டார்.

நான் அவருக்காக நேரம் ஒதுக்கினேன். அந்த மனிதரும் வந்தார். ஒரு மணி நேரம் வரை, தன் பிரச்சினை பற்றி அவர் எதுவும் சொல்லவில்லை. அவருக்காக, நான் ஒரு மணி நேரம் முழுமையாக ஒதுக்கியிருந்தேன். அவர் ஏதேதோ பேசிக்கொண்டிருந்தார். அவர் பேசியது அனைத்தும், ஒன்றுக்கும் உதவாத வெற்று விஷயங்கள். அவர், தன் மனைவியைப் பற்றி, குழந்தைகள் பற்றி, தன்னுடைய வியாபாரத்தைப் பற்றி, இதைப் பற்றி, அதைப்பற்றி, சம்பந்தா சம்பந்தமில்லாமல் பேசிக் கொண்டிருந்தார். இப்படியே ஒரு மணிநேரம் கழிந்தது - நான் பேசுவதற்கு, எனக்கு வாய்ப்பே இல்லை. நான் ஆமாம் என்றோ, இல்லை என்றோ சொல்வதற்குக் கூட அவர் ஒரு சிறு இடைவெளி கூடத் தரவில்லை. நான் வெறுமனே தலை அசைத்துக் கொண்டிருந்தேன். ஒரு மணி நேரத்துக்குப் பிறகு, அந்த மனிதர் எனக்கு நன்றி தெரிவித்துவிட்டு, என்னுடைய பாதங்களை வணங்கிக் கூறினார், ''தாங்கள் ஒரு மகத்தான மனிதர். பல அற்புத மான விஷயங்களை என்னிடம் கூறினீர்கள் - ஆனால், நான் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை - ''என்னுடைய பிரச்சினைகள் அனைத்தையும் தாங்கள் தீர்த்துவிட்டீர்கள்'' அவர் எந்தப் பிரச்சினையையும் கூறவில்லை, நான் எதையும் தீர்த்துவைக்கவுமில்லை.

ஆனால் அது முக்கியமல்ல. நான் அவர் கூறுவதைக் கேட்டுக் கொண்டிருந்தேன், தலை அசைத்துக் கொண் டிருந்தேன், ஆர்வம் காட்டினேன், அவர் முழுத் திருப்தி அடைந்துவிட்டார். பிரச்சினையே அதுதான். அவருக்குச்

சிலபேர் தேவைப்படுகிறார்கள். தன்மீது கவனம் செலுத்துபவர்களை, மகத்தானவராக அவர் மதிக்கிறார்.

பகாதீன் கூறினார்: அவன் நோய்வாய்ப்பட்டிருந்தான். அவனைக் கவனிக்க எவருமில்லை. அப்போது அவன் அருகில் நான் அமர்ந்தேன். அவனுடைய முகத்தில் ஒரு சாந்தம் ஏற்பட்டது. அதைத்தான், தன் ஆன்மிக வாழ்க்கை யின் கதவு திறக்கப்பட்டதாக அவன் கூறுகிறான்.

இது வேறொன்றுமில்லை. அவனுடைய அகந்தையை திருப்திப்படுத்துவது, அவ்வளவுதான். அந்த மனிதன் இவ்வாறு கூறுகிறான்: தங்களைப் பார்க்க நான் அனுமதிக் கப்பட்டதால், என்னுடைய ஆன்மிக வாழ்க்கையின் கதவு திறக்கப்பட்டு விட்டது.

மூன்றாமவன் கூறினான்: தாங்கள் என்னைப் புரிந்து கொண்டு, என்னுடைய ஆத்மதிருப்திக்காக, தங்களுடைய உபதேசத்தைக் கேட்கும் பாக்கியத்தை எனக்கு அளிக்க வேண்டும்.

அவனுடைய செய்கைகளை விமர்சித்தாலும்கூட, தன்மீது பிறரின் கவனத்தைத் திருப்ப அவன் விரும்பு கிறான். இதைத் தான் ஆத்மதிருப்தி என்று அவன் குறிப்பிடுகிறான் என்கிறார் EI-ஷா.

அகந்தை என்பது அதீத பசி கொண்டது. கவனிப்பு என்பதுதான், அகந்தைக்கான உணவு. யாரேனும் சிலர் உன்னைப் பாராட்டினால், அது பேரானந்தம். உன் மீது யாரும் கவனம் செலுத்தவில்லையானால், எவரும் உன்னைக் கண்டுகொள்ளவில்லை என்றால் அது நரகம். அவர்கள் உன்னை விமர்சனம் செய்தாலும் பரவாயில்லை. ஆனால், உன்மீது கவனம் செலுத்த வேண்டும்.

மூன்றுவித மனப்பான்மைகள் உள்ளன: முதலாவது, யாராவது உன்மீது கவனம் செலுத்தினால், உனக்கு மனநிறைவு உண்டாகும். விமர்சனத்தை மக்கள் விரும்ப மாட்டார்கள் என்று நீ கருதினால், அது உன் தவறு. அது இரண்டாவது மாற்றுவழி. உனக்குப் பாராட்டுக் கிடைக் காதபோது, நீ விமர்சிக்கப்படுவதுதான் இரண்டாவது மாற்றுவழி. உன்னை வலுக்கட்டாயமாக மக்கள் விமர்சனம் செய்யும் வகையில் நீ நடந்துகொள்வாய். ஏனென்றால், மறுபடியும் ஏதோ ஒரு வகையில் நீ கவனிக்கப்படுகிறாய்.

மூன்றாவது கண்டுகொள்ளாமை: எவருமே இதை விரும்ப மாட்டார்கள். ஆனால், கண்டுகொள்ளாமையை நீ விரும்பினால்தான், உன்னுடைய அகந்தை அழியும். கண்டு கொள்ளாமையில் அகந்தை அழிந்துவிடுகிறது. உன்மீது பிறர் கவனம் செலுத்துவதை விரும்பாமல் நீ வாழும் போது, உன் அகந்தை மறைந்துவிடுகிறது. கண்டு கொள் ளாமை என்பது அகங்காரத்தை அழிக்கக்கூடிய விஷம்.

அதனால் ஒன்று, நீ பாராட்டுக்காக ஆசைப்படுவாய். அல்லது குறைந்தபட்சம் விமர்சனத்திற்காவது முயற்சிப் பாய். அதனால், கண்டுகொள்ளாமை என்கிற வார்த்தை கூட உனக்குப் பயத்தை உண்டாக்குகிறது. உன்னை எவருமே கண்டுகொள்ளவில்லை என்றால், நீ எங்கே இருப்பாய்? எவ்வாறு இருப்பாய்? உன்னுடைய அடையாளம் சிதைந்துவிடும்.

இந்த உலகத்தில் இரண்டு வகையான மனிதர்கள் இருக்கிறார்கள். தன் மீது கவனம் செலுத்தப்படுவதில் வெற்றி அடைபவர்கள். அரசியல்வாதிகள், ஓவியர்கள், இசைக் கலைஞர்கள் இப்படி ஏதோ ஒரு வகையில், அது திறமைசாலிகள் கவனத்தைக் கவர்கிறார்கள்.

சாத்தியமில்லாதபோது - ஏனென்றால் திறமை இருந்தால் தான் வெற்றி பெறமுடியும். கவனத்தைக் கவர வேண்டும் என்பதற்காகவே நீ இசைக்கலைஞனாக வேண்டும் என்று விரும்பினால், உனக்கு எந்தப் பலனும் ஏற்படாது. உனக்குத் திறமை இருக்க வேண்டும். அதற்காக நீ கஷ்டப்பட வேண்டும். அதற்கு நீண்ட பயிற்சி தேவை. உன்னுடைய மொத்த வாழ்க்கையும் இசைக்காகத் தியாகம் செய்யப்பட வேண்டும். வெற்றி என்பது ஒரு நீண்ட கால உழைப்பு. அது அவ்வளவு எளிதானதல்ல. மேலும், அனைவராலும் இசைக் கலைஞனாக முடியாது. மிகவும் அரிதான சிலரே, உச்சத்திற்குச் சென்று கவனத்தைக் கவர்கிறார்கள்.

சரி, அது முடியாத பட்சத்தில் - மில்லியன் கணக்கான மக்கள் அனைவருக்கும் இது சாத்தியமாகாத பட்சத்தில் - அவர்கள் என்ன செய்வார்கள்? அவர்கள் வேறு வழியைக் கையாளத் தொடங்குகிறார்கள். அவர்கள் கிரிமினல்களாக, குற்றவாளிகளாக, குடிகாரர்களாக மாறுகிறார்கள். அதற்கு எந்தத் திறமையும் அவசியமில்லை. மது அருந்துவதற்கு எந்தப் பயிற்சியும் தேவையில்லை. உண்மையில் சொல்லப் போனால், பழக்கமில்லாமல் சிறிதளவு நீ மது அருந்தினாலும், நீ ஊரையே இரண்டாக்கி விடுவாய். அனைவரும் உன்னைக் கவனிக்கும் வகையில் நீ நடந்து கொள்வாய். நீ தெருவில் நடக்கையில், ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் கத்திக்கொண்டும் செல்வாய். அதாவது, நீ புத்தி சுவாதீனத்தில் இருக்கும்போது, உன்னால் செய்ய முடியாத செய்கைகளை, அப்போது நீ செய்வாய். ஒட்டுமொத்த ஊரும் உன்னை அப்போது கவனிக்கும். நீ சாக்கடையில் விழுந்து புரண்டு கொண்டிருப்பாய். அந்த வழியாகச் செல்லும் அனைவரும் உன்னைக் கவனிப்பார்கள். நீ கிரிமினலாக மாறலாம். ஒட்டுமொத்த உலகமும் உன்னைக் கவனிக்கத் தொடங்கும்.

ஒரே நாளில், எந்தக் காரணமும் இல்லாமல், ஏழு பேரைக் கொலை செய்த மனிதனைப் பற்றி நான் பத்திரிகையில் படித்தேன். கொலை செய்யப்பட்டவர்களை அவனுக்குத் தெரியாது. அதற்குமுன் அவர்களை அவன் பார்த்ததில்லை. அவர்களுக்கும் அவனுக்கும் எந்த சம்பந்தமும் இருந்ததில்லை. அவன், தான் கொலை செய்தவர்களின் முகங்களைக் கூட, அதற்குமுன் பார்த்ததில்லை. நீதிமன்றத்தில், அவன் இவ்வாறு கூறினான்: ''செய்தித் தாள்களில் என் புகைப்படம் வர வேண்டும் என்பதற்காகவே, நான் இந்தக் கொலைகளைச் செய்தேன்.'' அவன் ஆசைப்பட்டதைப் போலவே, அவன் முகம் செய்தித்தாளில் வந்துவிட்டது. தலைப்புச் செய்திகளிலும், அட்டைப்படச் செய்திகளிலும் அவன் இடம் பெற்றான். மற்றவர்கள் தன்மீது கவனம் செலுத்த வேண்டும் என்று அவன் விரும்பினான். சிலர் கிரிமினல்கள் ஆவது, சிலர் சமூக விரோதிகள் ஆவது, சிலர் கிளர்ச்சியாளர்கள் ஆவது, இவை அனைத்துக்கும் காரணம், கவனத்தைக் கவர விரும்புவதுதான்.

நான் கவனித்த வகையில், 99 சதவிகிதம் ஹிப்பிகளுக்குக் கலகம் செய்வதில் விருப்பமில்லை. இப்போது, பிறரின் கவனத்தைக் கவர்வதற்கு இது ஒரு புதிய வழி: நீ தலைமுடியை வளர்க்கும் விதம், அழுக்கடைந்த உன் உடல், வெகுதூரத்தில் இருந்தே உணரக்கூடிய நாற்றம், நீ எங்குச் சென்றாலும் மக்கள் ஜாக்கிரதை ஆகிவிடுகிறார்கள். ஹிப்பிகள் செய்வதென்ன? அவர்கள் அணிந்திருக்கும் மணிகளை ஆட்டியபடியே வருவதுதான்.

பிறரது கவனத்தைக் கவர எளிதான வழி: எந்தத் திறமையும் இல்லாமல், எந்தப் பயிற்சியும் இல்லாமல், எந்த நல்லொழுக்கமும் இல்லாமல், இந்தக் கணமே உன்னால் ஒரு ஹிப்பியாகிவிட முடியும். உன்னுடைய தலைமுடியைக் கொஞ்சம் அழுக்காக்கிக் கொள்.

கந்தலான ஆடையை அணிந்துகொள். கழுத்தில் மணி, கையில் சிகரெட், அவ்வளவுதான். நீ ஹிப்பியாகி விடலாம். நீ எங்குச் சென்றாலும் ஈரானின் ஷாவைப் போல மக்கள் உன்னைப் பார்ப்பார்கள். இன்னும் சொல்லப் போனால், ஈரான் ஷாவும் ஒரு ஹிப்பியும் தெருவில் ஒன்றாக நின்று கொண்டிருந்தால், ஹிப்பியின் மீதுதான், மக்களின் கவனம் அதிகமாக இருக்கும்.

90 சதிவிகிதம் இளைய தலைமுறையினர் எளிதான வழிகளை மேற்கொள்ள முயற்சிக்கிறார்கள். ஏனென்றால், மேற்கு நாடுகளில் வெற்றி என்பது மிகமிகக் கடினமான ஒன்றாகிவிட்டது. அங்கு ஏகப்பட்ட போட்டி நிலவுகிறது. நீ பி.எச்டி., பெறுவதற்கு நீண்டகால முயற்சி தேவைப்படு கிறது. அதற்கும் பலத்த போட்டி நிலவுகிறது. அப்படியே பி.எச்டி., பட்டம் பெற்றாலும், மேற்கில் ஆயிரக் கணக்கான பி.எச்டி.க்கள் இருக்கிறார்கள். அதனால், உன்னால் பெரிய சாதனைகளைச் செய்ய முடியாது.

ஆனால், இந்தியாவைப் பொறுத்தவரை, பி.எச்டி.க்கு முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது. நீ பெற்றிருக்கும் பட்டத்தைப் பற்றி, உன்னிடம் இந்தியர்கள் எப்போதும் கேட்பார்கள். ஆனால், மேற்கில் பட்டங்களால் எந்தப் பயனும் இல்லை. இந்தியாவைப் பொறுத்தவரை, பட்டங்களுக்கு முக்கியத்துவம் இருக்கிறது. காரணம், சிலர் மட்டுமே படித்தவர்களாக இருக்கிறார்கள். மில்லியன் கணக்கானவர்கள் படிக்காதவர்களாக இருக்கிறார்கள். இங்கு பி.எச்டி., என்பது இன்னமும் போற்றுதலுக்குரிய பட்டமாக விளங்குகிறது. இங்கு பி.எச்டி., என்பது, வாழ்க்கையின் இறுதிக்கட்ட, உயர்ந்த பட்சக் கல்வித் தகுதியாகக் கருதப்படுகிறது. ஆனால், மேற்கில் ஆயிரக்கணக்கான பி.எச்டி.க்கள் சுற்றிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு எந்த முக்கியத்துவ மும் இருப்பதில்லை.

அலகாபாத்தில் மெட்ரிகுலேஷனை முடித்த முதல் இந்தியரைப் பற்றி நான் படித்தேன். இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் இது நடந்திருக்கிறது. அவருக்காக, ஓர் மாபெரும் ஊர்வலம் ஏற்பாடு செய்யப்பட்டது. ஓர் அரசனைப் போல, யானையின் மீது அவர் அமர வைக்கப் பட்டு, பதினொரு யானைகள் பின்தொடர, ஒரு மாபெரும் ஊர்வலம் நடைபெற்றது. அலகாபாத்தைச் சேர்ந்த அனைவரும் அதில் கலந்துகொண்டனர். ஒரு அற்புதமான நிகழ்ச்சியாக, ஏதோ அதிசயமான ஒன்றாக அது விளங்கியது.

ஆனால், இப்போது அது சற்றும் பயனில்லாத பட்டம். அதன்மூலம், நீ எந்தக் கவனத்தையும் ஈர்க்க முடியாது. யானை என்ன, ஒரு கழுதையைக் கூட இப்போது அழைத்துவர மாட்டார்கள். நீ ஒரு கழுதையின் மீது உட்கார முயற்சித்தால், நீ ஒரு பி.எச்டி.,யா என்று கிண்டல் செய்வார்கள். போயும் போயும் மெட்ரிகுலேஷன் முடித்தவன் கழுதையின் மீது அமரலாமா? முதலில் அதைவிட்டு இறங்கு. வேண்டுமானால், ஒரு டாக்டரோ, டாக்டரேட் பட்டம் பெற்றவர்களோ கழுதையின் மீது அமர அனுமதிக்கப்படலாம்.

எந்தக் கவனமும் அளிக்கப்படுவதில்லை. மேற்கில் இப்போது கல்வி என்பது சர்வசாதாரணமாகிவிட்டது. இப்போது மக்கள் பெரும் பணக்காரர்களாக இருக் கிறார்கள் - ராக்ஃபெல்லர்கள், ரோக்ஸ் சைல்டுகள் மற்றும் போர்டுகள் போன்றவர்களிடம் போட்டி இடுவது என்பது கற்பனைக்கு எட்டாத ஒன்றாகிவிட்டது. கனவில்கூட, உன்னால் அவர்களைக் கடந்து செல்ல முடியாது. அநேகமாக, அது முடியாத விஷயம்.

சரி, பிறகு என்ன செய்வது? ஒரு மணியை வாங்கிக் கொள். தலைமுடியை நீளமாக வளர்த்துக்கொள். ஆச்சா ரத்தை ஒதுக்கித் தள்ளிவிடு. மரபுகளை உடைத்தெறிந்து

விடு. அனைவரின் கவனத்தையும் எளிதாக ஈர்த்து விடலாம். ஆனால், இவை அனைத்தும் கவனத்தை ஈர்ப் பதற்காகவே. அது பி.எச்டி., மூலமாகவும் இருக்கலாம். அல்லது ஒரு ஹிப்பி வாழ்க்கை முறை மூலமாகவும் இருக் கலாம். அரசியல்வாதியாகவோ, அல்லது கிரிமினலா கவோ, ஒரு கொலைகாரனாகவோ, எப்படி வேண்டு மானாலும் இருக்கலாம். அனைத்தும் ஒன்றுதான். அகந்தைக்கான வழிகள் எல்லாவற்றிற்கும் ஒன்றுதான்.

ஆனால் ஒன்று சொல்கிறேன். அகந்தையைத் தூக்கி எறியாதவரை, நீ எப்படிப்பட்டவனாக இருந்தாலும் நீ ஒரு கிரிமினல்தான். உன்னுடைய அரசியல் என்பது குற்ற முள்ள அரசியலாக இருக்கும். உன்னுடைய திறமை, குற்ற முள்ள திறமையாக இருக்கும். எல்லாக் குற்றங்களுக்கும் ஈகோவே காரணமாகும். ஈகோவுடன் கூடிய உன்னுடைய வெற்றி தவறானதாகத் தான் இருக்கும். ஏனென்றால், பல தோல்விகளுக்குப் பிறகுதான், உன்னால் வெற்றி அடைய முடியும். பலரை அழித்துத்தான் நீ வெற்றிகளை அடைவாய். போட்டியில் கழுத்தறுப்பு இருக்கும். அது ஒரு கொலைபாதகப் போட்டியாக அமைந்துவிடும்.

அகந்தை இருந்தால், நீ எங்குச் சென்றாலும், நீ எதைச் செய்தாலும் அது குற்றமாகவே இருக்கும். என்னைப் பொறுத்தவரை, அகந்தை என்பது ஒரு குற்றவாளி.

கவனத்தைக் கவர விரும்பாதே. உன்னைப் பற்றி யாருமே தெரிந்துகொள்ளாத வகையில் உன் வாழ்க்கையை அமைத்துக்கொள். நீ இந்த உலகத்தில் இல்லாதது போலவே உன் வாழ்க்கை இருக்கட்டும். உன்னுடைய நடவடிக்கைகள் ஒருவருக்கும் தெரியாமல் இருக்கட்டும். நீ இங்கு இருப்பதே ஒருவருக்கும் தெரியவேண்டாம். ஆன்மிகத்தின் வெடிப்பை அப்போதுதான் உன்னால் அடைய முடியும். இல்லையென்றால், அகந்தை எப்போதும்,

ஒரு கடினமான பாறையாகச் செயல்பட்டு, அந்த வெடிப்பைத் தடுத்து நிறுத்திவிடும்.

நீ எதற்காகக் கவனிக்கப்பட வேண்டும் என்று விரும்பு கிறாய்? ஏனென்றால், நீ யார் என்பதைப் பற்றி உனக்கு நீயே ஒரு முடிவுக்கு வர முடியவில்லை. அப்படியானால், நீ கவனிக்கப்படுவதன் மூலம், நீ யார் என்பது எப்படிப் புலனாகும்? நீ உன்னைப் பற்றிக் கண்ணாடியில் பார்ப்ப தால் தெரிந்துகொள்ள முடியாது. அவர்கள் உன்னைப் பாராட்டுகிறார்களோ, விமர்சிக்கிறார்களோ, அந்தக் கண் கள் கண்ணாடியை விட மேம்பட்டதாக இருக்க முடியாது. நண்பர்கள், எதிரிகள் அனைவருமே கண்ணாடிகள்தான்.

நீ உன்னைப் பற்றி, நேரடியாக, உடனடியாகத் தெரிந்து கொள்ள வேண்டும். நீ உள்ளுக்குள் செல்ல வேண்டும்.

கவன ஈர்ப்பில் தான் அகந்தை வாழ்கிறது. அது ஒரு தவறான விஷயம். அதைப் புரிந்துகொண்டு, அதிலிருந்து வெளியே வாருங்கள்.

நீ அதிலிருந்து மீண்டுவிட்டால், வித்யாசமான ஓர் அமைதியும், நிம்மதியும், சாந்தமும் உனக்கு ஏற்படும். இயற்கையான, தங்குதடையற்ற ஒரு பரமசுகம் உனக்குள் பொங்கத் தொடங்கும். ஓர் உட்புற நடனம் சம்பவிக்கும். உட்புற நடனம் மட்டுமே. தன்னை மறந்த ஒரு நிலை அங்கே இருக்கும். அதை நீ அடையாத வரையில், நீ வாழ்வது போலியான வாழ்க்கை. நீ யாரையும் ஏமாற்றவில்லை. ஆனால், உன்னை நீயே ஏமாற்றிக் கொள்கிறாய்.

மூன்றாமவன் கூறினான்: தாங்கள் என்னைப் புரிந்து கொண்டு, என்னுடைய ஆத்மதிருப்திக்காக, தங்களுடைய உபதேசத்தைக் கேட்கும் பாக்கியத்தை எனக்கு அளிக்க வேண்டும்.

*''அவனுடைய செய்கைகளை விமர்சித்தாலும்கூட, தன் மீது பிறரின் கவனத்தைக் கவர அவன் விரும்புகிறான். இதைத்தான் ஆத்மதிருப்தி என்று அவன் குறிப்பிடுகிறார்'' என்றார் EI-ஷா.*

தயவு செய்து, இதனை ஆத்மதிருப்தி என்று கூறாதே.

*நான்காமவன் கூறினான்: நான் பலருடைய போதனைகளை மாற்றி மாற்றிக் கேட்டு, அதன்படி செயல்பட்டு வந்தேன். தங்களைச் சந்தித்தபிறகு, தங்களுடைய வாசிபா பயிற்சியைப் பெற்றபிறகுதான், நான் உண்மையான தெளிவை அடைந்திருக்கிறேன்.*

*''நான் இந்த மனிதனுக்குக் கொடுத்த பயிற்சி இயல்பான ஒன்று. அதற்கும் ஆன்மிக வாழ்க்கைக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. நான் அவனுடைய உண்மையான ஆன்மிகத் தன்மையைத் தொடுவதற்காக, ஒரு மாயத்தோற்றத்தை முதலில் அவனிடம் உண்டாக்கினேன். அதன் மூலமாக அவனுடைய உண்மையான ஆன்மிக மையத்தைத் தொட்டேன்'' என்றார் EI-ஷா.*

நான்காமவன் கூறினான், ''தாங்கள் எனக்கு சூஃபி பயிற்சியான வாசிபாவைச் சொல்லிக் கொடுத்தீர்கள். அதன்பிறகு எனக்குப் பல விஷயங்கள் நடந்துள்ளன. நான் வளர்ச்சி அடைந்து வருகிறேன்.

EI-ஷா தன்னுடைய சீடர்களிடம் கூறினார்: ''நான் அவனுக்குக் கொடுத்தது தவறான பயிற்சி. அதன் மூலம் எவரும் வளர முடியாது. அது ஒரு டெக்னிக்கே அல்ல. ஆனால், தான் வளருவதாக அவன் கூறுகிறான். அவன் என்னிடம் கூட உண்மையாக இல்லை. அவன் தன்னை ஏமாற்றிக் கொள்வது மட்டுமல்லாமல், தான் வளர்ந்து வருவதாக என்னையும் ஏமாற்ற முயற்சிக்கிறான். அந்தப் பயிற்சி அவனுக்கு எந்த உதவியும் செய்யாது. அது,

அதிகபட்சமாகப் பாசப்பிணைப்பை வளர்க்குமே தவிர, ஆன்மிகத்தை வளர்க்காது.

ஆனால், பாசப்பிணைப்புதான் ஆன்மிகம் என்றும் பலரும் நினைக்கிறார்கள். மனக்கிளர்ச்சி என்பது உங்கள் மனதில் ஏற்படக்கூடிய உணர்வுகளைப் பொறுத்துத்தான் அமைகிறது. நீ மிக எளிதாகக் கிளர்ச்சி அடையலாம். நீ அழலாம், கதறலாம், உன் கண்களிலிருந்து முத்துக்களைப் போன்று பெரிய கண்ணீர்த் துளிகள் விழலாம். ஆனால், இதற்கும் ஆன்மிகத்துக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. கண்ணீர்த் துளிகள் என்பது உடல்ரீதியானது என்பது தவிர வேறொன்றுமில்லை.

கண்கள் என்பது உடலின் பாகம். மனக்கிளர்ச்சி என்பது உடல்ரீதியான சக்தியால் ஏற்படக்கூடிய ஓர் இடர்ப்பாடு, நீ அழுது முடித்தபிறகு, ஒரு நிம்மதி உணர்வு உனக்கு ஏற்படுவது உண்மைதான். நீ நன்றாக அழுதபிறகு, உனக்குத் தளர்வான உணர்வு ஏற்படும். விடுவிக்கப்பட்ட உணர்வு உனக்கு ஏற்படும். உலகம் முழுவதும் பெண்கள் இதை அறிந்து வைத்திருக்கிறார்கள். இதனை, அவர்கள் நன்கு தெரிந்து வைத்திருப்பதுதான், பல நேரங்களில் அவர்களுக்கு உதவுகிறது. அவர்கள் அழுது முடித்தபிறகு, விடுவிக்கப்பட்டதாக உணர்கிறார்கள். அது ஒரு கேதார்ஸிஸ். ஆனால், அதில் எந்த ஆன்மிகமும் இல்லை. ஆனால், மக்கள் ஆன்மிகமில்லாத விஷயங்களை ஆன்மிகம் நிறைந்ததாகத் தொடர்ந்து கருதிக் கொண் டிருக்கிறார்கள்.

மக்கள் என்னிடம் வருகிறார்கள். அவர்கள் இங்கு வருவதால், அவர்களுடைய குண்டலினி எழும்புவதாக அவர்கள் கூறுகிறார்கள். அவர்கள் தங்கள் உடல்களில் ஏற்படும் அசைவுகளைப் பார்த்து, தங்களுக்குத் தெய்விக சக்தி வந்துவிட்டதாக நினைத்துக் கொள்கிறார்கள்.

குண்டலினியில் எந்தத் தெய்விக சக்தியும் கிடையாது. அது முழுக்க முழுக்க உடல்ரீதியான சக்தி. அதைப் பார்த்து, முட்டாள்தனமாக ஏமாறாதீர்கள்.

சிலர் வருகிறார்கள். தங்களுக்கு வெளிச்சம் தெரிவ தாகக் கூறுகிறார்கள். அவர்கள், தங்கள் கண்களை மூடிக் கொள்ளும்போது, வெளிச்சம் தெரிவதாகக் கூறுகிறார்கள். இது வேறொன்றுமில்லை, வெறுமனே ஒரு கற்பனை தான். நல்லது, நீங்கள் வெளிச்சத்தைப் பார்ப்பதால், உங்கள் மனம் மேலும் குவிகிறது. அதனால், உங்களுக்கு நல்ல தூக்கம் ஏற்படும். ஆனால், உங்கள் மனம் அப்படியே தான் இருக்கிறது. இது இப்படியே செல்வது நல்லதுதான். ஆனால், இதில் ஆன்மிகம் ஒன்றுமில்லை.

இன்னும் சிலர் வருகிறார்கள். அவர்கள், தங்கள் மனக் கண்ணில் சில காட்சிகள் தெரிவதாகக் கூறுகின்றனர். கிருஷ்ணர் புல்லாங்குழல் வாசிப்பது, இயேசு சிலுவை யில் அறையப்படுவது, புத்தர் போதி மரத்தடியில் அமர்ந் திருப்பது. அவர்கள் இப்படிப் பார்க்கும் காட்சிகளை என்னிடம் கூறி, என் வாழ்த்துகளைப் பெற விரும்பு கிறார்கள். நான் இப்படிக் கூறலாம்: ''ஆமாம், நீங்கள் அடைந்துவிட்டீர்கள், ஆன்மிகம் என்றால் என்ன என்பதை உணர்ந்துவிட்டீர்கள். இதைவிட வேறென்ன வேண்டும்? கிருஷ்ணர் புல்லாங்குழல் வாசிக்கிறார். இதைவிட ஒரு பிரமாதமான அனுபவம் வேறென்ன இருக்கிறது?

ஆனால், இதில் எந்த ஆன்மிகமும் இல்லை. அருமை யான கனவுகள், அழகான கனவுகள், அனுபவி. அதனால், உன்னையே நீ ஏமாற்றிக் கொள்ளாதே. உண்மையில் இது ஓர் அருமையான கனவு. உன் வாழ்க்கையில் எத்த னையோ இரவுகளில் நீ கனவுகள் கண்டிருப்பாய். ஆனால், கிருஷ்ணர் புல்லாங்குழல் வாசிப்பது அனுபவிக்கக் கூடிய கனவுதானே! நீ கூட அவருடன் சேர்ந்து புல்லாங்குழல்

வாசிக்கலாம், அவருடன் நடனமாடலாம். ஆனால், உன்னையே நீ ஏமாற்றிக் கொள்ளாதே. இதில் எந்தவித ஆன்மிகமும் இல்லை.

அப்படியானால் ஆன்மிகம் என்றால் என்ன? ஆன்மிகம் என்பது ஓர் அனுபவம் அல்ல. நீ அதை அனுபவிக்க முடியாது. அதை நீ அனுபவித்தால், அது மனதைப் பொறுத்த ஏதோ ஒன்று. அது உடலைப் பொறுத்த ஏதோ ஒன்று. காரணம், உன் சுயத்தை நீ எப்படி அனுபவிக்க முடியும்? உன்னுடைய இருத்தலை ஒரு பொருளாகக் குறைக்க முடியாது. நீ பிரஜையாக மட்டுமே இருப்பாய். நீ உட்படுத்தப்பட்டிருக்கிறாய். நீ பார்க்கக்கூடிய அனைத்தும் நீயாக இருக்க முடியாது. நீ ஒரு பார்ப்பவன்.

ஆன்மிகம் என்பது ஓர் அனுபவம் அல்ல. அது ஒரு பொருள் அல்ல. உன்னால், அதைக் கவனிக்கவோ, பார்க்கவோ முடியாது. நீ ஒரு கவனிப்பாளர், ஒரு பார்ப்பவன். அதன் பின்பு எல்லா அனுபவங்களும் மறைந்துவிடும். எப்போது பார்ப்பதற்கு எதுவுமில்லையோ, எப்போது கவனிப்பதற்கு எந்தப் பொருளும் இல்லையோ, ஆனால் எப்போது விழிப்புணர்வு, உள்ளதோ, பரந்த தங்கு தடையற்ற விழிப்புணர்வு உள்ளதோ, எந்த அனுபவத்தாலும் குறைபடாத விழிப்புணர்வு இருக்கிறதோ, அப்போது நீ ஆன்மிகம் ஆகிறாய். ஆன்மிகம் என்பது ஓர் அனுபவம் அல்ல.

குண்டலினி, காட்சிகள், வெளிச்சம் அனைத்தும் மறைந்துவிடுகின்றன. அவை நீ வளர்வதற்கான நல்ல அடையாளங்கள். ஆனால், ஆன்மிகத்துக்கும் அவற்றுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. ஆனால், உண்மையான குருமார்கள், இதுபோன்ற அனுபவங்களில் ஆர்வம் காட்ட மாட்டார்கள். அவர்களுடைய ஆர்வம் இலக்கில்

மட்டுமே இருக்கும். பாதையை எப்படிக் கடப்பது? அவர் உன்மீது மட்டுமே ஆர்வம் காட்டுவார். எந்தப் பொருளும் இன்றி. எந்த அனுபவமுமின்றி, உன்னுடைய விழிப் புணர்வு கொழுந்துவிட்டு எரியும் கனலாக இருக்கும். வெற்று வானமாக, தென்றல் காற்றுகூட வீசாத வெற்று வானமாக கடவுள் இல்லை.

ஆன்மிகத்தில் கடவுள் இல்லை. அதனால்தான், புத்தர்களும் ஜைனர்களும், கிறிஸ்துவ மத்திற்கோ, இஸ்லாம் மதத்திற்கோ, யூத மதத்திற்கோ முக்கியத்துவம் அளிப்பதில்லை. ஏனென்றால், அவர்கள் அனுபவத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருப்பவர்கள். கடவுள், தேவதை இப்படியே பேசுபவர்கள். மகிழ்ச்சி, பரமசுகம் - அவர்கள் அனுபவங்கள் பற்றி, இப்படியே பேசிக் கொண்டிருப்பர். ஆனால், ஆன்மிகம் என்பது இவையனைத்தையும் கடந்தது. முற்றிலும் கடந்த நிலையில், நீ மட்டுமே இருப்பாய். விழிப்புடன், பூரண விழிப்புடன். இந்த விழிப்புணர்வில் மற்ற அனைத்தும் மறந்துவிடும். இந்து முழுமையான வெறுமையில், பூரண தனிமையுடன் கூடிய விழிப்புணர்வு ஜுவாலை கொழுந்துவிட்டு எரியும் என்பதை நினைவில் வை.

உங்கள் குண்டலினியால் எனக்குத் திருப்தி ஏற்படாது. உங்கள் வெளிச்சத்தால் திருப்தி ஏற்படாது. உங்கள் கிருஷ்ணர் புல்லாங்குழல் வாசிப்பதால் எனக்குத் திருப்தி ஏற்படாது. நீ பார்க்கும் கடவுள் அனைத்தும் நீ உருவாக்கியவையே. அவை அனைத்தையும் தூக்கி எறியுங்கள். எதுவுமே இல்லாத மையத்திற்கு வாருங்கள். எதுவுமே இருப்பதில்லை. அப்போதுதான் நீ பூரண தனிமையில் விடப்பட்டிருப்பாய். அதில் அதற்கே உரித்தான அழகு இருக்கிறது. அது மறைந்திருக்கும் பிரகாசம். அதுதான் ஆன்மிகம்.

அதன் முன்பு, அனைத்தும் ஒரு விளையாட்டுதான். அங்கே உடல்ரீதியான விளையாட்டுகள் இருக்கின்றன. செக்ஸ் என்பது உடல்ரீதியான விளையாட்டு. அங்கு மன ரீதியான விளையாட்டுகள் இருக்கின்றன. காதல் என்பது மனரீதியான விளையாட்டு. ஆன்மிகம் என்பது விளை யாட்டல்ல. அனைத்தும் முடிந்துவிட்டன. எல்லா விளை யாட்டுகளும் முடிந்துவிட்டன. ஒருவன் வீட்டிற்குத் திரும்புகிறான். தனிமையில் வீட்டில் அமர்கிறான். அனுபவங்கள் இல்லை. எல்லா அனுபவங்களும் இடர்ப்பாடுகளே.

பிரக்ஞை மட்டுமே எஞ்சியிருக்கும்போது, அப்போது தான், பகாதீன் போன்ற மனிதர்கள் சீடர்களிடம் திருப்தி கொள்வார்கள். குருமார்கள் அந்த அளவுக்கு எதிர்பார்ப் பார்கள். சில முட்டாள்தனமான கருத்துகளிலிருந்து அவர்கள் உன்னை விடுவிப்பார்கள். அவர்கள் உன் கற்பனையை அழித்துக் கொண்டே இருப்பார்கள். இறப்பற்ற நிலை மட்டுமே எஞ்சி நிற்கும். பூரணமான விழிப்புணர்வு நிலையில் நீ இருப்பாய்.

எல்லாமே ஒரு கனவுதான். கனவுகளில் அடுக்கடுக் கான கனவுகள் உள்ளன. அழகான கனவுகள், அசிங்கமான கனவுகள், தெய்விகமான கனவுகள், தெய்விகமல்லாத கனவுகள். ஆனால், ஆன்மிகம் என்பது ஒரு கனவல்ல. கனவு காண்பவர் எல்லாக் கனவுகளிலிருந்தும் விழிப்போடு வெளியே வருவது தான் ஆன்மிகம் என்பது. அப்போதுதான் மறைந்திருக்கும் பிரகாசம் வெளிப்படும். அப்போதுதான், எல்லா ரகசியங்களின் ரகசியமும் வெளிப்படும்.

இன்றைக்கு இது போதும்.

# 3

# திறந்த கதவும் மூடிய கதவும்

*காஸ்வினைச் சேர்ந்த சாலிஹ் (Salih of Quazwin) தம் சீடர்களுக்குப் போதித்தார்: யாராக இருந் தாலும், தொடர்ந்து கதவைத் தட்டினால், அது அவருக்காகத் திறக்கப்படும்.*

*இதனைக் கேட்டுக் கொண்டிருந்த ரபியா, ஒரு நாள் கூறினாள்: கதவு திறக்கப்படும் என்று எவ்வளவு காலத்திற்குச் சொல்லிக் கொண்டிருப்பீர்கள்? கதவு மூடியிருக்கவில்லை.*

இயற்கை, அதன் ஒட்டு மொத்தமும், ஒரு தொடர்ச்சி யான விழா - ஒரு கல்யாண வைபோகம், ஒரு விருந்து. விருந்தினர்கள் வருவார்கள், போவார்கள். ஆனால், விருந்து வைபவம் தொடர்ந்து கொண்டிருக்கும். ஒரு கணம்கூட விருந்து நிற்பதில்லை. பாடகர்கள் மாறலாம், ஆனால், பாடல் அப்படியேதான் இருக்கும்.

இயற்கை என்பது எப்போதும் பெருமகிழ்ச்சியான ஒன்று. மனிதனின் நிலை முற்றிலும் வித்தியாசமானது. மனிதனின் தற்போதைய நிலையை நீ வெறுமனே

பார்த்தால், உனக்கு வருத்தம் ஏற்படும். ஏதோ ஒன்று தவறாகப் போய்விட்டதாக நீ கருதுவாய். ஆனால், மனிதனுக்கு உரிய எதிர்கால வாய்ப்பை நீ புரிந்து கொண்டால், அதன்பிறகு உனக்கு மகிழ்ச்சி ஏற்படும். நன்றியோடு இருப்பாய். எதுவும் தவறாகப் போய்விட வில்லை. மனிதனைக் கொண்டு மட்டும்தான் மேன்மை யான நிலையை நெருங்குவதற்கு இயற்கை முயற்சிக்கிறது. மனிதன் ஒரு பயணத்தில் அனுப்பப்பட்டிருக்கிறான். அவன் வீடு இல்லாததைப் போன்று தோன்றுகிறான். ஏனென்றால், அவனுடைய இருத்தலில், அவன் ஒரு வீட்டை அடைந்தாக வேண்டும். அவன் வேரூன்றுவதற் குச் செழிப்புமிக்க மண்ணைக் கண்டுபிடித்தாக வேண்டும். மனிதன் என்பவன் வேறொன்றுமில்லை, இயற்கையை நெருங்குபவன். அதிக மகிழ்ச்சியை, மேன்மையான நிலையை, மகத்தான பரவசத்தை நோக்கிச் செல்பவன்.

ஆனால், இதனைக் கொண்டு, நீ அவனுடைய முழுப் பயணத்தையும் பார்க்கும்போது, அவனுடைய விதியை உன்னால் பார்க்க முடியும். விதியை உன்னால் பார்க்க முடியாத பட்சத்தில், மனிதன் வழிதவறிய ஒரு குழந்தையைப் போலத் தோற்றமளிப்பான். அதன்பிறகு அவன் ஒரு நோயாகக் காட்சியளிப்பான். அதனால்தான், சார்ட்டர் (Sartre) அல்லது கேமஸ் (Camus) அல்லது ஜாஸ் பர்ஸ் (Jaspers) ஆகியோருக்கு, மனிதன் அர்த்தமற்ற வனாக, ஒரு முட்டாளால் கூறப்பட்ட கதையாக, வெறுமனே கோபமும் சத்தமும் நிரம்பியவனாக, எந்த உபயோகமும் இல்லாதவனாகத் தோற்றமளிக்கிறான்.

மனித குலப் பிரக்ஞை மொத்தமும் நோய்வாய்ப்பட்ட தாக, இளைப்பாறுவதாகத் தோற்றமளிக்கிறது. ஆனால், புத்தர்கள் இதனை ஆழமாகப் பார்க்கிறார்கள். அவர்கள் இந்தக் கணத்தை மட்டும் பார்ப்பதில்லை. இந்தக்

கணத்தில் மறைந்திருப்பதுதான் மனிதனின் ஒட்டுமொத்த விதி. இயற்கை இதுவரை செய்துள்ள மிகச்சிறந்த அனு பவம்தான் மனிதன். ஆனால், அந்த அனுபவம் இன்னும் முழுமை அடையவில்லை. பிரச்சினை அதுதான்.

மரங்கள் கொண்டிருக்கும் வீட்டை மனிதன் இழந்து விட்டான். மேலும், பயணத்தின் முடிவை அவன் இன்னும் நெருங்கவில்லை. பறவைகளும், நட்சத்திரங் களும், கடலும் கொண்டுள்ள பிடிப்பை மனிதன் இழந்து விட்டான். அவன் வீடற்றவனாக, ஒரு புதியவனாக, ஒரு வெளியாளாகத் தெரிகிறான். அது உண்மைதான். ஆனால், ஒரு மிகச்சிறந்த வீடு, ஒரு மாபெரும் மகிழ்ச்சி, அதிகபட்ச பரவச இருத்தால் அவனுக்காகக் காத்துக்கொண்டிருக் கிறது. நீ பயணத்தை முடிக்க வேண்டும்.

மதம் என்பது வேறொன்றுமில்லை. பயணத்தை முடிப்பதற்கான ஒரு முயற்சியே. இந்தப் பரந்த உலகத்தில் மில்லியன் கணக்கான வாய்ப்புகளுக்கு மத்தியில் இயற்கை உன்னைத் தூக்கியெறிந்திருக்கிறது. நீ யார் என்பது உனக்குத் தெரியவில்லை. நீ எங்கே செல்கிறாய் என்பது உனக்குப் புரியவில்லை. இயற்கை உன்னைத் தள்ளி விட்டுவிட்டது. மதம் தான் அந்தப் பயணத்தை முடித்து வைக்க வேண்டும். மதம் தான் அந்த இடைவெளியை நிரப்பவேண்டும். இல்லையென்றால் அனைத்தும் அர்த்த மற்றதாக உனக்குத் தோன்றும். சோகமாக உணர்வாய். மிகுந்த வேதனையோடு நீ வாழ்வாய்.

விதைக்குள் உன்னால் பார்க்க முடியாதபோது, உன் விதியையும் உன்னால் தெரிந்துகொள்ள முடியாது. நீ விதைக்குள் பார்க்க முடிந்தால், உன்னால் மரத்தையும் காண முடியும். அதில் பூக்கக்கூடிய பூக்களை, வாய்ப்பு களை, சக்தியை உன்னால் உணர முடியும். ஆனால், ஒரு

விதையை நீ வெளிப்புறமாகப் பார்த்தால் அதில் ஒன்று மில்லை. வண்ணங்கள் இல்லை. அது வெறுமனே ஓர் இறந்த பொருள். உயிர்கூட இல்லாதது. அது ஒரு கூழாங்கல் போன்று உனக்குத் தோன்றும்.

ஒரு கூழாங்கல்லுக்கும் விதைக்கும் இடையே உள்ள வித்தியாசம் என்ன? கூழாங்கல் என்பது வெறுமனே கூழாங்கல்தான். அதற்கு எதிர்காலம் இல்லை. ஒரு விதை யும் கூழாங்கல்லைப் போலத்தான் தோற்றம் அளிக்கிறது, ஆனால், அதற்குள் ஒரு பரந்த எதிர்காலம் இருக்கிறது. ஓர் உயிர், அதிலிருந்து வெளியேறக் காத்துக்கொண்டிருக் கிறது. மலர்கள் மலர்வதற்காகக் காத்துக் கொண்டிருக் கின்றன. காற்றில் பரவுவதற்காக நறுமணம் காத்துக் கொண்டிருக்கிறது. ஒரு சக்தி மிகுந்த பரந்த வாய்ப்பு இருக்கிறது.

இப்போது உள்ள மனிதன்தான் கடைசித் தயாரிப்பு என்று நீ கருதுவாயேயானால், மனிதன் அர்த்தமற்றவன் என்ற எண்ணம் உனக்கு ஏற்படும். அது ஒரு முட்டாளால் சொல்லப்பட்ட கதை என்று உனக்குத் தோன்றும். ஆனால், அவனுக்குள் இருக்கும் ஆற்றலை நீ பார்த்தாயே யானால், மனிதன் நோய்வாய்ப்பட்டவன் அல்லன் என்பது உனக்குப் புரியும். இதற்கு மாறாக, இயற்கை ஓர் உயர மான மையத்தை, ஒரு வளர்ச்சியை நெருங்க முயற்சிக் கிறது. இதுவரை அடையாத உயரத்தை அடைவதற்கான பரிணாம வளர்ச்சியை அது மனிதனில் செயல்படுத்து கிறது.

அதனால் இதனைப் புரிந்துகொள்ள வேண்டும். இயற்கை எதற்காக இணக்கமாகவும், மனிதன் ஏன் இணக்கமில்லாமலும் விளங்குகிறான். பறவைகளைப் பாருங்கள். அவை தொடர்ந்து பாடிக்கொண்டும், ஹம் செய்து கொண்டும், இடைவிடாத கொண்டாட்டத்துடன் காலத்தைக் கழிக்கின்றன. எந்தவித வருத்தமோ,

கவலையோ அவற்றிடம் இருப்பதில்லை. அவற்றுக்குப் பிரச்சினை இல்லை என்பதல்ல, அவற்றுக்கு மரணம் இல்லை என்பதல்ல. அவற்றுக்கும் இவை ஏற்படும். ஆனால், இந்தப் பிரச்சினைகள் அவை பாடுவதற்கு இடையூறாக இருப்பதில்லை. பறவைகள், மரங்கள், கடல்கள், பாறைகள் இவற்றுக்கெல்லாம் பிரக்ஞை இல்லை. அவற்றின் நிலை பிரக்ஞையற்ற நிலை. அதாவது, ஒரு மனிதன் தூக்கத்தில் பாடுவதைப் போல, ஒரு மனிதன் தூக்கத்தில் புன்னகைப்பதுபோல. அவன் புன்னகைப்பதை நீ பார்க்க முடியும். ஆனால், புன்னகைப் பவனுக்கு அதைப்பற்றி ஒன்றும் தெரியாது. ஒரு கனவு காண்பதைப்போல, போதையில் இருப்பதைப்போல, அவனுக்கு என்ன நடக்கிறது என்பது தெரியாது.

இயற்கை பரமானந்தமாக இருக்கிறது. ஆனால், முற்றிலும் அதைப்பற்றி அதற்குத் தெரியாது. ஆனால், எதுவும் தெரியாதபோது, அந்தப் பரம சுகத்திற்கு எந்த அர்த்தமும் இல்லை. அதற்கு எந்த முக்கியத்துவமும் இருப்பதில்லை. ஏனென்றால், ஒரு பறவை பாடும்போது, என்ன நடக்கிறது என்பதை அது அறியாது. பாடல் தானாக வெளிப்படுகிறது. அதைக் கவனிக்க எவருமில்லை. அதை ரசிக்க எவருமில்லை. அதனை உணர எவருமில்லை. பாடல் வெறுமனே நடைபெறுகிறது. பிரக்ஞையற்ற இயற்கையின் ஒரு பகுதியாக. அது எவ்வளவுதான் அழகாக இருந்தாலும், அதற்கு ஏதோ ஒரு குறைபாடு இருக்கிறது. மிகவும் அவசியமான ஏதோ ஒன்று குறைகிறது.

பறவையின் கானத்தை ரசிப்பவன் நீ தான். அதன் அழகை உணர்பவன் நீ தான். ஆனால், பறவைக்கு இதைப் பற்றி ஒன்றுமே தெரியாது. பாடல் அழகாக இருக்கிறதா? அல்லது அசிங்கமாக இருக்கிறதா? என்பதைப் பறவை யால் உணர முடியாது. அது, ஏதோ பாடலே ஒலிக்காத தைப்போல இருக்கும். உனக்குத் தெரியாதபோது, ஒரு

பாடல் எப்படி ஒலிக்கும்? பாடல் ஒலிப்பது உனக்காக அல்ல, அதனை உணரக்கூடிய மற்றவர்களுக்காகத்தான்.

மரங்களில் பூக்கள் இருக்கும். இந்த குல்மொகர் மரத்தைப் பாருங்கள். மரம் முழுக்க மலர்கள் பூத்துக் குலுங்குகின்றன. இலைகளைவிட மலர்கள் அதிகமாக இருக்கின்றன. ஒரு கல்யாணப் பெண்ணைப்போல, அவை முகம் சிவந்து காணப்படுகின்றன. ஆனால், அவற்றிற்கு எந்த விழிப்பும் இல்லை. என்ன நடக்கிறது என்று அவற்றுக்குத் தெரியாது. இயற்கை என்பது தூங்கிக் கொண்டிருப்பது. பிரக்ஞையற்றது. மனிதனுக்குச் சிறிது பிரக்ஞை இருக்கிறது. அதனால்தான், அவனுக்குக் கவலை உண்டாகிறது. உன்னில் ஒரு பகுதிக்கு மட்டுமே பிரக்ஞை இருக்கிறது. உன்னுடைய இருத்தலின் ஒரு மிகச் சிறிய பாகம் மட்டுமே பிரக்ஞை பெற்றுள்ளது. மீதமுள்ள அனைத்திற்கும் பிரக்ஞை இல்லை.ஒரு பிரிவு ஏற்பட்டுள்ளது. ஒரு மோதல் உருவாகியுள்ளது. நீ இனிமேல் ஒன்றல்ல - நீ இரண்டாகிவிட்டாய். ஒரு பிளவு உண்டாகிவிட்டது. உனக்கும் உன் புயத்துக்கும் இடையே ஓர் இடைவெளி ஏற்பட்டுள்ளது. ஓர் இரட்டைத்தன்மை உருவாகியுள்ளது. நீ இனிமேல் ஒன்றல்ல. உன்னில் இருக்கும் ஏதோ ஒன்று, எஞ்சியிருக்கும் மற்ற அனைத்திலிருந்தும் வேறுபட்டு நிற்கிறது. இது உனக்குக் கவலையை உருவாக்குகிறது. ஒரு பறவையைப் போல உன்னால் மகிழ்ச்சியாக இருக்க முடியாது. வானத்தைப் போல, உன்னால் பரமசுகத்தை அனுபவிக்க முடியாது. உன்னால் அப்படி இருக்க முடியாது. ஏனென்றால், உனக்கு விழிப்பு இருக்கிறது. அந்த விழிப்புணர்வுதான் உனக்குக் கவலையை உருவாக்குகிறது.

நீ மகிழ்ச்சியாக இருக்கும்போது, அது நிலையற்றது என்பது உனக்குத் தெரியும். இந்த மகிழ்ச்சி மற்றவற்றைப் போலவே மறைந்துவிடக் கூடியது என்பதையும் நீ

அறிவாய். இது கடந்த பின்னர், உன்னுள் வருத்தம் குடிகொள்ளும். நீ மிகுந்த மகிழ்ச்சியுடன் இருக்கும்போது கூட, அது பூரணமான மகிழ்ச்சியாக இருக்காது. இது நிலையற்றது என்ற உன்னுடைய விழிப்புணர்வு, உனக்குக் கவலையைத் தோற்றுவித்துவிடும். மகிழ்ச்சியின் உச்சத்தில் இருக்கும் கணத்தில் கூடத் துக்கம் நுழைந்துவிடும், வேறு வழியில்லை. ஏனென்றால், இப்போது நீ இரண்டாக விளங்குபவன். நீ எதைச் செய்தாலும், நீ எப்படியிருந்தாலும், நீ எப்போதும் இரட்டையாகவே பிரிக்கப்பட்டிருப்பாய். மகிழ்ச்சியின் உச்சகட்டம் எப்போதும் கவலையின் உச்சத்தைச் சுமந்து கொண்டிருக்கும். அதை நீ நன்றாக அறிந்து வைத்திருப்பாய். வாலிபமும், ஆர்வமும், ஆசைகளும் நிறைந்த வாழ்க்கையில் மரணமும் நிகழத்தான் போகிறது. அது உன் நிழலைப்போலத் தொடர்ந்து கொண்டிருக்கிறது.

ஒரு பறவை பாடிக்கொண்டே இருக்கும். பிறகு இறந்துவிடும். மரணம் வரப்போகிறது என்பது அதற்கு ஒரு கணம் கூட தெரிந்திருக்காது. ஆனால், நீ மரணத்தைப் பற்றி நினைக்காதபோது, வாழ்க்கையைப் பற்றி உன்னால் எப்படி நினைக்க முடியும்? வாழ்க்கையின் விழிப்புணர்வுக்கு விலையுண்டு. அந்த விலையை நீ செலுத்தியாக வேண்டும். மரணபயமே அதன் விலை. உனக்கு வாழ்க்கையைப் பற்றிய விழிப்புணர்வு இருக்கும். அதே நேரத்தில் மரணத்தைப் பற்றிய விழிப்புணர்வும் கூடவே இருக்கும். உன்னால் எப்படி அலட்சியமாக இருக்க முடியும்? விழித்துக்கொள். சில விஷயங்கள் தொடர்ச்சியாக மடிந்து கொண்டே இருக்கின்றன. விழித்துக்கொள். நீ சுடுகாட்டை நோக்கி நகர்ந்து கொண்டிருக்கிறாய். கொண்டாடவும் நடனமாடவும் உன்னால் எப்படி முடியும்? சுடுகாட்டை நோக்கிச் செல்கையில், ஒருவனால் எப்படி நடனமாட முடியும்?

விழிப்புணர்வோடுதான் மனிதகுலம் இந்த உலகத்திற் குள் நுழைகிறது. ஆனால், அந்த விழிப்புணர்வோடு கவலையும் வேதனையும் நுழைந்துவிடுகிறது. நீ ஒற்றை யாக மாறும்வரை, இது இப்படியேதான் இருக்கும். இரட்டைத் தன்மை என்பது வருத்தம். அதனால்தான், சூஃபிக்கள், வேதாந்திகள், ஜென் மக்கள், மற்றும் ஞானிகள் அனைவரும் எல்லாக் காலத்திலும் ஒற்றைத் தன்மையை வலியுறுத்துகின்றனர். அதாவது, அளவுக்கு மீறிய இரட்டைத் தன்மை அத்வைதமாக மாறுகிறது. இரட்டைத் தன்மை மறையும்போது, ஒற்றைத் தன்மை மறுபடியும் ஏற்படுகிறது.

நீ ஒற்றையாக இருந்தவன்தான். காரணம், நீ ஒரு மரமாக இருந்தவன். ஒரு நீரோடையாக இருந்தவன். இமயமலையில் ஒரு பாறையாக இருந்தவன். மில்லியன் வகைப் பறவைகளாகவும், மிருகங்களாகவும் விளங்கிய வன். நீ பலவித வாழ்க்கைகளை வாழ்ந்தவன். காய்கறி வாழ்க்கை, தாது வாழ்க்கை, மிருக வாழ்க்கை இப்படிப் பலவித வாழ்க்கைகளை வாழ்ந்தவன். பலப்பல சமயங் களில், பலப்பல வடிவங்களில், இருத்தலைக் கடந்து வந்தவன். நீ ஒற்றையாக இருந்தவன். ஆனால், அது பிரக்ஞையற்ற ஒற்றைத் தன்மை. இப்போது இரட்டைத் தன்மை எழுந்துள்ளது. நீ மறுபடியும் ஒற்றைத் தன்மையை அடைய வேண்டும். ஆனால், இந்த முறை, அந்த ஒற்றைத்தன்மை பிரக்ஞையோடு இருக்க வேண்டும்.

நீ பலமுறை சிந்தித்திருப்பாய். பிரக்ஞையோடு ஒற்றைத் தன்மையை அடைவது, அநேகமாகச் சாத்திய மில்லாத ஒன்று என்பது உனக்குத் தெரிந்திருக்கும். ஒரு புத்தருக்கு இது அரிதாக ஏற்பட்டிருக்கும். புத்தருக்கு மறுபடியும் பாடல் வருகிறது. அவர் மறுபடியும் ஒரு பறவையைப் போலப் பாடுகிறார், ஒரு மரத்தைப் போலப் பூக்கிறார், வானத்தைப்போல அவர் திறந்திருக்கிறார்,

பூமியைப் போல அவர் வளமாக இருக்கிறார். கடலைப் போல அவர் ஆர்ப்பரிக்கிறார். அவர் மறுபடியும் ஒற்றைத் தன்மையை அடைகிறார். ஆனால், இப்போது அந்த ஐக்கியம், அதிகமான ஐக்கியமாக, உச்சகட்ட ஐக்கியமாக இருக்கிறது. பிரக்ஞையோடு கூடிய ஒற்றைத்தன்மை உண்டாகிறது. பிரக்ஞையின் மூலமாக ஒற்றைத் தன்மை அடையப்பட்டிருக்கிறது. அவர் மறுபடியும் இயற்கையாக மாறுகிறார். ஆனால், முற்றிலும் வித்தியாசமான பாதையில் அவருடைய இருத்தலின் குணாதிசயம் மாறிவிட்டது. அவர் மீண்டும் இயற்கைக்குத் திரும்புகிறார். ஆனால், அவர் முன்புபோல இப்போது இல்லை. பிரக்ஞை உணர்வு அவருக்கு இருக்கிறது.

ஆனால், இது அரிதாக நிகழ்வது. அதனால் உன் மனம் கூறும்: இது சாத்தியம் என்று தோன்றவில்லை. பிரக்ஞையற்ற நிலைக்கு மீண்டும் மாறிவிட அதிகமான வாய்ப்புகள் இருப்பதாகத் தோன்றும். அதனால், போதை மாத்திரைகள், மது ஆகியவை உன்னைக் கவர்ந்திழுக்கும். எப்போதுமே அரசாங்கங்கள் போதைக்கு எதிராகத்தான் செயல்படுகின்றன. எப்போதும் மதங்கள் போதைக்கு எதிரானவைதான். இருந்தாலும், மனிதனுக்கு அதன்மீது ஓர் ஆழமான ஈர்ப்பு ஏற்படுகிறது. எந்தச் சட்டமும் இந்தப் பழக்கத்திலிருந்து மனிதனை விடுவிக்க முடியவில்லை.

கவர்ச்சி எதனால் ஏற்படுகிறது? அந்தக் கவர்ச்சி இதுதான்: இப்போது மார்க்கெட்டில் ஆல்கஹாலும் மற்ற போதை மாத்திரைகளும் நிறைய கிடைக்கின்றன. மாரிஜானா, எல்.எஸ்.டி, சிலோசைபின் இப்படிப் பல போதை வஸ்துக்கள் வந்து கொண்டிருக்கின்றன. போதையின் மீது கவர்ச்சி உண்டாவதற்குக் காரணம் என்னவென்றால், ஒரு புத்தராக மாறக்கூடிய முயற்சி ஏதுமின்றியே, அது உனக்கு ஒற்றையான உணர்வைக் கொடுக்கிறது. நீ மீண்டும் ரசாயனம் மூலமாக இயற்கைக்குள்

திரும்பவும் விழுகிறாய். நீ மீண்டும் இயற்கைக்குள் ஐக்கியமாகிவிட உன்னை நீயே வலுக்கட்டாயமாக முயற்சிக்கிறாய். எங்கு பறவைகள் பாடுகின்றனவோ, எங்கு மரங்கள் வளர்கின்றனவோ, அங்கு உன்னை நீயே வலுக்கட்டாயமாகத் திணித்துக் கொள்கிறாய்.

இது உன்னுடைய ஒட்டு மொத்த இருத்தலின் மீது நீ செய்யும் வன்முறை. இது உன் வழியாக அதிகபட்ச ஒருங்கிசைவை அடையும். இயற்கையின் முயற்சிகளை அழிக்கிறது. இது இயற்கைக்கு எதிரானது. போதையின் மூலமாக, இயற்கையுடன் நீ ஐக்கியமாகும் ஒற்றைத் தன்மையை ஒருசில கணங்கள் மட்டுமே, நீ வலுக் கட்டாயமாகப் பெறுகிறாய். ஆனால், இது நீடித்திருக்கக் கூடியதல்ல. உன்னுடைய உட்புற இருத்தலின் பூரணமான பகுதியாக இது மாற முடியாது. அப்படி மாறாததற்குக் காரணம், மீண்டும் திரும்பிச் செல்வது என்பது சாத்தியமல்ல. வலுக்கட்டாயமாகத்தான் உன்னை நீ பின்னிழுத்துக்கொள்ள முடியும்.

இது எதைப்போல என்றால், நீ மறுபடியும் குழந்தை யாக மாற முடியாது. உன்னால் பின்னோக்கி அடியெடுத்து வைக்க முடியாது. உன் தாயின் கருப்பைக்குள் உன்னால் மீண்டும் நுழைய முடியாது. பின்னோக்கிச் செல்வதற்குப் பாதை இல்லை. நேரம் அந்த வழியில் நகராது. அது முன்னோக்கி நகருமே தவிர, பின்னோக்கி நகராது. அதனால், நீ பின்னோக்கிச் செல்வது சாத்தியமல்ல. ஒரே வழி, ஒரே பயணம், முன்நோக்கிச் செல்வதுதான். வேறு எந்த வழியும் இல்லை.

அதனால், போதை என்பது ஒரு வஞ்சகம். அது பின்னோக்கிச் செல்வதாக ஒரு பொய்த் தோற்றத்தை, ஒரு பிரமையை உனக்கு ஏற்படுத்தும். மக்கள் என்னிடம் வந்து கூறுவார்கள், நான் போதையில் இருந்தபோது மிகவும்

அற்புதமாக உணர்ந்தேன். பல விஷயங்கள் நடந்தன. ஆனால், நிஜம் என்னவென்றால், போதையால் எதுவுமே நடப்பதில்லை. காரணம், போதை மயக்கத்திலிருந்து நீங்கி, நீ சுயநினைவுக்கு வரும்போது, நிலைமை இன்னும் மோசமாக ஆகிவிடும். அது உன்னிடமிருந்து கனவுகளைத் தான் வெளியேற்றுகிறது. உனக்குச் சுயநினைவு முற்றிலும் போய்விடுவதால், அந்தக் கனவுகள் உனக்கு நிஜமாகத் தோன்றும். உன்னால் விழிப்போடு இருக்க முடியாததால், அது கனவா அல்லது உண்மையா என்பதை உன்னால் தெரிந்துகொள்ள முடியாது.

நீ போதை மயக்கத்தில் இருக்கும்போது, மரத்திலிருந்து பாடும் பறவையாக, ஆகாயத்தில் சஞ்சரிப்பவனாக, உன்னை நீயே நினைத்துக் கொள்வாய். ஆனால், எப்போதும் நீ பூமியில்தான் இருக்கிறாய். ஓர் இன்ச் கூட நீ எங்கும் நகரவில்லை. போதை மயக்கத்திலிருந்து நீ விடுபட்டவுடன், உன் கண்களை நீ திறக்கிறாய். நீ எங்கிருக்கிறாயோ, அங்கேயேதான் இருக்கிறாய். இதற்கிடையில் நீ கனவு கண்டிருக்கிறாய். உயிர்ப்புள்ள ஒரு கனவு. நிஜமாகத் தோற்றமளிக்கக்கூடிய ஒரு கனவு. அது மனதில் ஏற்பட்ட பிரமை என்று உனக்கு ஒரு சிறு சந்தேகம் கூட தோன்றவில்லை. உன் மனதில் உள்ள செல்கள் வேலை செய்ததால், சில விளைவுகளை அவை உருவாக்கி இருக்கின்றன. சில நேரங்களில் நல்லதும், சில நேரங்களில் கெட்டதும், சில நேரங்களில் நரகமும், சில நேரங்களில் சொர்க்கமும், உன்னுடைய மனப்பாங்கைப் பொறுத்து, உன்னுடைய உடல்நிலையைப் பொறுத்து, உன் சூழ்நிலையைப் பொறுத்து, உனக்கு ஏற்படுகிறது.

ரசாயனம் வழியாகச் சில நேரங்களில் நீ நரகத்தைப் பார்க்கலாம். சில நேரங்களில் நீ சொர்க்கத்தைப் பார்க்கலாம். ஆனால், நீ எங்கும் செல்வதில்லை. நீ எங்கிருக்கிறாயோ, அங்கேயேதான் இருக்கிறாய். மிகுந்த

வேதனையில் இருக்கும் மனிதன், இரட்டைத் தன்மையில் இருந்து ஒரு சில கணங்கள் தப்பித்தாலும்கூட, சுதந்திரமாக உணர்கிறான். எல்லா மதங்களும் போதைக்கு எதிரானவை தான். அதற்குக் காரணம் இதுதான். நீ அதற்கு அடிமை யாகிவிட்டால், புத்தத் தன்மையை அடையக்கூடிய உயர்வான பரிமாணம், உன்னுடைய உயர்வான ஐக்கியம் ஆகிய மொத்த வாய்ப்புகளும் இழக்கப்படுகின்றன.

உண்மையில் சொல்லப் போனால், அவர்கள் போதைக்கு எதிரானவர்கள் அல்லர். போதைக்கு முக்கியத் துவம் கொடுப்பவர்கள் அல்லர். உன்னுடைய உயர்வான ஐக்கியம் தான் அவர்களுக்கு முக்கியம். உன் மனதில் நீ பின்னோக்கி விழத் தொடங்கினால், இயற்கையின் கீழ்ப்புற நிலையோடு நீ ஒன்று கலந்தால், பின் யார்தான் மேன்மையடைவது? உன் மூலமாக இயற்கை முயற்சி செய்யும் ஒவ்வொன்றையும் நீ கெடுக்கிறாய். அதன்மூலம் நீ கடவுளை அடையலாம். ஆனால் நீ போதையிலேயே திருப்தி அடைந்துவிட்டாய். அது ஒரு மட்டமான மாற்றுவழி. மிகமிக மட்டமானது. ஆனால், இந்தக் கவர்ச்சி சிலவற்றைச் சுட்டிக் காட்டுகிறது. ஒரு மனிதன் வீட்டில் இரண்டு வழிகளில் இருக்கலாம் என்பதை அது சுட்டிக்காட்டுகிறது. ஒன்று, ரசாயனம் வழியாகவோ, செக்ஸ் வழியாகவோ, அல்லது பிற வழிகளிலோ, இயற்கையில் மீண்டும் விழுகிறான். அல்லது அவன் தன்னைத்தானே உயர்த்திக் கொண்டு, ஒரு மையத்தை அடைகிறான். அங்கு அவனுடைய மொத்தப் பிரக்ஞை உணர்வும் பூரணமாகச் செயல்படுகிறது. அவனுள் எதுவுமே பிரக்ஞையற்று இருப்பதில்லை. பிரக்ஞையற்ற தன்மையின் இருண்ட பிரதேசம் அங்கு இருப்பதில்லை. அவனுடைய இருத்தலின் எல்லா முனைகளும் வெளிச்ச மூட்டப்படுகின்றன. இதுதான், புத்தராக மாறுவதன் அர்த்தம். ஒரு புத்தர் என்றால், பிரக்ஞையோடு இருப்பவர்.

ஒரு புத்தர் என்றால், அவருடைய மொத்த இருத்தலும் ஒளியாக மாறுவது, விழிப்புணர்வு. மறு படியும் - கொண்டாட்டம், கல்யாணம் ஆகியவை முற்றிலும் வித்தியாசமான சமதளத்தில் அமையும்.

இயேசு நீதிக்கதைகளைக் கூறுவது வழக்கம். அந்த நீதிக்கதைகள் பலவிதப் பரிமாணங்களில் அமைந்திருக்கும் - இது பாதை மாறிய பையனைப் (PRODIGAL SON) பற்றிய ஒரு நீதிக்கதை: ஒருவருக்கு இரண்டு மகன்கள் இருந்தனர். இரண்டு சகோதரர்களும் பிரிந்து வாழ விரும்பினர். தந்தை சொத்துக்களை இரண்டு பங்குகளாகப் பிரித்தார். மூத்த மகன் தந்தையுடன் இருந்துவிட்டான். இளைய மகன் தான் பெற்ற பங்கோடு வீட்டைவிட்டு வெளியேறினான். அவன் சூதாட்டத்திலும் களியாட்டத்திலும் ஈடுபட்டான். அவனுக்குக் கிடைத்த மொத்த சொத்தையும் அழித்தான். இப்போது, அவன் பிச்சைக் காரனாகச் சுற்றிக் கொண்டிருந்தான்.

ஒரு நாள், பிச்சை எடுத்துக் கொண்டிருக்கும் போது, அவனுக்குத் திடீரென்று ஓர் எண்ணம் தோன்றியது. "நான் தந்தையிடம் சென்றால், அவர் என்னை மன்னிப்பார். அவருக்கு என் மீதுள்ள பாசத்தை நான் நன்கு அறிவேன். அவர் வாழ்க்கை முழுவதும் உழைத்துச் சேர்த்த சொத்தை நான் அழித்துவிட்டாலும், நான் அவருக்கு எந்த நல்லதையும் செய்யாவிட்டாலும், அவருக்காக நான் எந்தச் சேவையையும் செய்திராவிட்டாலும், அவர் என்மீது அன்பு செலுத்துவார். நான் மறுபடியும் சென்றால், என்னை ஏற்றுக் கொள்வார்.

தன் இளைய மகன் வீட்டிற்கு வரப்போகும் செய்தியைத் தந்தை கேள்விப்பட்டார். உடனே அவர் ஒரு பெரிய விருந்துக்கு ஏற்பாடு செய்தார். அவர் தன் நண்பர்களை அந்தக் கொண்டாட்டத்தில் பங்குபெற வீட்டிற்கு அழைத்தார்.

மூத்த மகன் தோட்ட வேலைகளை முடித்துக் கொண்டு வீட்டிற்குத் திரும்பினான். சிலர் வழியில் அவனைச் சந்தித்துக் கூறினர், ''இந்த அநீதியைப் பார்த்தாயா? நீ உன் தந்தைக்கு இத்தனை வருடங்களாகச் சேவை செய்து வந்தாய். உன் தந்தைக்குக் கீழ்ப்படிந்து நடந்து வந்தாய். அவருடைய விருப்பத்துக்கு மாறாக நீ எதையும் செய்ததில்லை. ஆனால், உனக்காக அவர் கொண்டாடவில்லை. உனக்காக அவர் விருந்து வைக்க வில்லை. ஆனால், உன் தந்தையின் பேச்சைக் கேட்காமல், வழிதவறிச் சென்று, சூதாட்டம், களியாட்டங்களில் ஈடுபட்டு, பிச்சை எடுக்கும் நிலைக்கு வந்துவிட்ட உன் தம்பி வீட்டுக்கு வருவதை அறிந்ததும், உன் தந்தை விருந்து வைத்துக் கொண்டாடப் போகிறார். இது அநீதி.

இதைக் கேட்ட மூத்த சகோதரனுக்குக் கடுங்கோபம் ஏற்பட்டது. அவன் வீட்டிற்கு வேகமாக ஓடி வந்து, தந்தையிடம் கேட்டான்.'' என்ன ஆயிற்று உங்களுக்கு? இங்கே என்ன நடந்து கொண்டிருக்கிறது? யாருக்காக இதையெல்லாம் செய்கிறீர்கள்? இது அநீதி. நான் இதுவரை, நீங்கள் இடும் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து, ஒரு வேலைக்காரன் போல இருந்து வருகிறேன். ஆனால், நீங்கள் எப்போதும் எனக்காகக் கொண்டாடியதில்லை. ஆனால், இப்போது உங்கள் இளையமகன் வருகிறான். உங்கள் வாழ்க்கை முழுவதும் நீங்கள் கஷ்டப்பட்டு சம்பாதித்த அனைத்தையும் பாழாக்கியவன் அவன். அவனுக்காக நீங்கள் விருந்து ஏற்பாடு செய்திருக்கிறீர்கள். என் கண்களை என்னால் நம்ப முடியவில்லை. என் மீது உங்களுக்குப் பாசம் இல்லையா? உங்கள் இளைய மகன் மீதுதான் உங்களுக்குப் பாசம் இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது.

தந்தை கூறினார்: ''நீ என்னைத் தவறாகப் புரிந்து கொண்டுவிட்டாய். பாதை மாறிப் போனவன் இப்போது

வீட்டிற்குத் திரும்புகிறான். நீ பாதை மாறிச் செல்ல வில்லை. எப்போதும் என்னுடனேயே இருப்பவன். இதில் கொண்டாடுவதற்கு ஒன்றுமில்லை.''

நான் உன்னிடம் கூறியதைப் பார்க்கும்போது, இந்த நீதிக்கதை இங்கு அர்த்தம் பொதிந்ததாக இருக்கிறது. மரங்கள் எப்போதும் தந்தையுடனே இருக்கின்றன. பறவைகள் எப்போதும் தந்தையுடனே இருக்கின்றன. மலைகளும் வானமும் எப்போதும் தந்தையுடனே இருக்கின்றன. அவை வீட்டை விட்டு வெளியேறுவ தில்லை. அவை வழி தவறிச் செல்வதில்லை.

பாதை தவறிய மனிதன் பலவிதத் தவறுகளைச் செய்தான். அனைத்தையும் அவன் அழித்தான். ஆனால், இப்போது அவன் திரும்பி வரும்போது, விருந்து ஏற்பாடு செய்யப்படுகிறது. ஏனென்றால், சிலர் வழிதவறிச் செல்லும்போது, நிறைய அனுபவங்களைப் பெறு கிறார்கள். எப்போதெல்லாம் ஒருவன் தவறான பாதையில் செல்கிறானோ, அவன் பக்குவம் அடைகிறான். ஒருவன் வழக்கமான பாதையிலிருந்து விலகிச் செல்லும்போது, வீட்டைவிட்டு வெளியே செல்லாத சாமியார்களைவிட அதிகமாக, அவன் வாழ்க்கையைப் புரிந்து கொள்கிறான். அவனுடைய மனம் பக்குவமடைந்துவிடுகிறது. பாதை மாறிச் செல்வது என்பது அறிதலுக்குரிய ஒரு வழியாகத் தெரிகிறது. தவறான வழியில் செல்வதால், அவன் அதிகமான விழிப்புணர்வைப் பெறுகிறான்.

எப்போதெல்லாம் பாதை தவறிய மகன் வீடு திரும்பி வருகிறானோ, அவன் ஒரு புத்தராக, இயேசுவாக, மகாவீரராக மாறுகிறான். அவனுடைய மொத்த இருத் தலையும் தந்தை கொண்டாடுகிறார். அங்கு ஆடலும் பாடலும் நிகழப்போகிறது. மொத்த இருத்தலும் புத்தரைக் கொண்டாடுகிறது. ''மகன் திரும்பி வந்துவிட்டான். அவன் முன்பிருந்ததைப் போலவே திரும்பி வரவில்லை.

ஆனால், பக்குவப்பட்டவனாக - அவன் மிகுந்த பிரக்ஞை உணர்வோடு, மிகுந்த ஐக்கியத்தோடு திரும்பியிருக்கிறான். இயற்கை அவன் மூலமாகத் தேடும் சில விஷயங்களை அவன் அடைந்திருக்கிறான்.''

ஆனால் நீ தொடர்ந்து கலகத்தில் ஈடுபட்டிருந்தால், நீ தொடர்ந்து வழி தவறிச் சென்று கொண்டிருந்தால், வீட்டிற்கு எப்போதும் திரும்பி வரவில்லை என்றால், உனக்காக எந்தக் கொண்டாட்டமும் நிகழப்போவதில்லை.

வழி தவறிச் செல்வது நல்லதுதான். திரும்பி வருவது அதைவிட நல்லது. ஒருவன் வீட்டைவிட்டு வெளியேறினால், திரும்பி வரவேண்டும். உண்மையைச் சொல்லப் போனால், நீ வீட்டைவிட்டு வெளியேறாவிட்டால், அதைப் பற்றித் தெரிந்து கொள்ளச் சாத்தியமில்லை. இந்தப் பரந்த உலகத்தில், நீ பாதை மாறிச் செல்லத்தான் வேண்டும். அப்போதுதான், நீ வீட்டிற்குத் திரும்பும் போது, வீடு என்றால் என்ன என்பதை உணர்ந்து கொள்ள முடியும். ஒரு புத்தர் என்பது வேறொருவருமல்லர், வீட்டிற்குத் திரும்பிய மனிதன்.

நீ இன்னமும் வழிதவறிச் சென்றுகொண்டே இருக்கிறாய். இன்னமும் அங்கும் இங்கும் சுற்றி அலைகிறாய். மீண்டும் தந்தையிடம் சென்று, அவருடைய மன்னிப்பைக் கோரும் தைரியம் உனக்கு இன்னமும் ஏற்படவில்லை. உனக்கு நம்பிக்கை இல்லை. தந்தை உன்னை ஏற்றுக் கொள்வார் என்பதில் உனக்கு நம்பிக்கை இல்லை. நீ உன்னையே ஏற்றுக் கொள்ளாதபோது, தந்தை உன்னை ஏற்றுக் கொள்வார் என்பதை நீ எப்படி எதிர்பார்க்க முடியும்? நீ உன்னையே பழித்துக் கொள்கிறாய். முழுமை அதன் உள்ளே உன்னை ஏற்றுக்கொள்ளும் என்பதை, அதன் இதயத்திற்குள் நுழைய முடியும் என்பதை உன்னால் எப்படி எதிர்பார்க்க முடியும்?

நம்பிக்கை கொள். வீட்டிற்குத் திரும்பு. நீ போதுமான தூரம் சுற்றிவிட்டாய். போதுமான அளவு கஷ்டப்பட்டு விட்டாய். அதுவும் அவசியம்தான். ஆனால், மேலும் அதிகமாக நீட்டிக்காதே. பிரச்சினை இதுதான்: ''ஒருவன் நீண்டகாலமாகத் தொடர்ந்து கஷ்டப்பட்டால், அதற்கு அவன் அடிமையாகி விடுகிறான். அது அவனுக்குப் பழக்கமாகிவிடுகிறது. அதனை அவன் கெட்டியாகப் பற்றிக் கொள்ளத் தொடங்குகிறான், அதை அனுபவிக்கிறான்.

மதம் என்பது வேறொன்றுமில்லை. உன்னை வீட்டிற்குத் திரும்ப வைக்க உதவும் ஒரு முயற்சியே. இயற்கை உன்னை இந்தப் பரந்த உலகத்தில் வீசி எறிந்திருக்கிறது. அது எப்போதும் கிடைக்காத ஒரு மிகச் சிறந்த அனுபவமாக விளங்குகிறது. இயற்கையின் ஒரு பகுதி நிர்மூலமாக்கப்பட்டுவிட்டது. வீடு இல்லாமல் செய்துவிட்டது. இது கற்றுக் கொள்வதற்கு ஒரு மிகச் சிறந்த வாய்ப்பு. விழிப்படைவதற்கு ஒரு மிகச் சிறந்த வாய்ப்பு. நீ வீட்டிற்குத் திரும்பினால் நீ விழிப்படைவாய். நீ பூரணமாக விழிப்படையும்போது, சட்டென நீ வீட்டிற்குள் இருப்பாய்.

இந்தக் கிறிஸ்துவ நீதிக்கதையை நீ அறிந்திருப்பாய். அதாவது, ஆதாம் ஏடன் தோட்டத்தைவிட்டு வெளியே தூக்கி எறியப்பட்ட கதை. ஆனால், நான் நினைப்பது என்னவென்றால், அவன் எங்கே தூக்கி எறியப்பட்டிருப்பான்? காரணம், மொத்தமும் ஏடன் தோட்டம் தான். அதற்கு வெளிப்புறம் இல்லை. இருத்தலுக்கும் வெளிப்புறம் இல்லை. இருத்தல் என்பது உட்புறம் மட்டுமே. ஏனென்றால், மொத்தமும் இதற்குள் அடங்குகிறது. அப்படியானால் வெளிப்புறம் எங்கே இருக்கிறது? இல்லை, ஆதாம் ஏடன் தோட்டத்தைவிட்டு வெளியே தூக்கி எறியப்படவில்லை. அவனுடைய கண்கள்தான் மூடப்பட்டிருக்கின்றன. அவன் எப்போதும் தோட்டத்துக்குள்ளேதான் வாழ்ந்திருக்கிறான். ஆனால், அவனால்

அதைப் பார்க்க முடியவில்லை. காரணம், அவன் விழிப்போடு இல்லை.

நீ பார்க்கத் தொடங்கிவிட்டால், நீ தோட்டத்துக்குள் இருப்பதைத் தெரிந்து கொள்வாய். நீ எப்போதும் தோட்டத்தில்தான் இருக்கிறாய். உண்மையைச் சொல்லப் போனால், நீ வீட்டைவிட்டு வெளியேறவில்லை. அது வெறும் கனவுதான். ஆனால், விழிப்பு அடைவதற்கு அது தேவைப்படுகிறது. அது ஒரு மாயைதான். ஆனால், அது தேவைப்படுகிறது. மிகுந்த வருத்தத்திலும் ஓர் ஆவல் தேவைப்படுகிறது.

இயேசுவின் கூற்றான துன்பத்தில் இருப்பவர்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள் என்பதுடன் நான் இன் னொன்றையும் சேர்க்க விரும்புகிறேன். அது ஏனெனில் அவர்கள் தான் சரியான பிரக்ஞையை அடைவார்கள்.

இயேசு அழகாகக் கூறுவார்: துன்பத்தில் இருப்ப வர்கள் ஆசீர்வதிக்கப் பட்டவர்கள். ஏனென்றால், அவர் களால்தான், சரியான பிரக்ஞையை அடைய முடியும்.

துன்பம்தான் ஒருவனுக்குப் பாதை அமைத்துக் கொடுக்கும். அதில், பல நரகங்கள் இருக்கும். ஏனென்றால், கஷ்டப்படாமல் எவராலும் விழிப்படைய முடியாது. பறவைகளுக்குக் கஷ்டங்கள் இல்லாததால், அவற்றுக்கு விழிப்புணர்வு இருப்பதில்லை. மரங்களுக்கு விழிப்புணர்வு இருப்பதில்லை. காரணம், அவற்றுக்குக் கஷ்டங்கள் இருப்பதில்லை. கஷ்டப்படுவது மனிதன் மட்டுமே. ஏனென்றால், மனிதன் அசாதாரணமானவன். அதற்காக, நீ பெருமைப்பட வேண்டும். மனிதன் என்பவன் ஓர் அசாதாரணமான நிகழ்வு. சாதாரணமான இயற்கை அல்ல அவன். மனிதன் இயற்கையின் புதிய நிகழ்வு. எந்த அளவுக்குப் புதிது என்றால், மனிதன் தனக்கு என்ன நிகழ்கிறது என்பதைக்கூட அறிவதில்லை. திக்குத் தெரியாத வழியில் நீ எறியப்பட்டிருக்கிறாய். அதனால்,

உன் வீடு எது என்பதை நீ தேடிக் கண்டுபிடித்தாக வேண்டும். திரும்பி வருவதற்கு நீ பகீரத பிரயத்தனம் நடத்தியாக வேண்டும்.

இப்போது ஒரு சிறிய உப கதை:

*காஸ்வினைச் சேர்ந்த சாலிஹ், தம் சீடர்களுக்குப் போதித்தார்: யாராக இருந்தாலும், தொடர்ந்து கதவைத் தட்டினால், அது அவருக்காகத் திறக்கப்படும்.*

*இதனைக் கேட்டுக் கொண்டிருந்த ரபியா, ஒரு நாள் கூறினாள்: கதவு திறக்கப்படும் என்று எவ்வளவு காலத்துக்குச் சொல்லிக் கொண்டிருப்பீர்கள்? கதவு மூடியிருக்கவில்லை.*

இதைப்போன்ற உபகதை சுபிக்களின் வரலாற்றில் அரிதாக நிகழக்கூடியது. ஏன் அரிது என்றால், இருவரும் ஞானமடைந்தவர்கள்: குருவான சாலிஹ் அவர் வழியில் அவர் சரி. ரபியா ஓர் அரிதான பெண். மிகவும் அரி தானவர். காரணம், மிகச் சில பெண்கள் மட்டுமே ஞானம் அடைந்தவர்கள். ரபியா அவர்களுள் ஒருவர். இருவருமே ஞானம் பெற்றவர்கள். இருவர் கூறுவதும் தவறாக முடியாது. அவர்கள் ஒருவருக்கொருவர் மாறுபட்டாலும், இருவரும் உண்மையையே கூறுகிறார்கள்.

மறுபடியும் கவனியுங்கள்: *சாலிஹ் தம் சீடர்களுக்குப் போதித்தார். யாராக இருந்தாலும், தொடர்ந்து கதவைத் தட்டினால், அது அவருக்காகத் திறக்கப்படும்.*

கதவு தொடர்ந்து தட்டப்பட்டுக்கொண்டே இருக்க வேண்டும். ''தட்டுங்கள் திறக்கப்படும், கேளுங்கள் கொடுக் கப்படும்'' என்று இயேசு கூறுவதைப் போல, சாலிஹ் தொடர்ந்து இப்படிக் கூறுவது வழக்கம்: தட்டுங்கள், தொடர்ந்து தட்டிக் கொண்டே இருங்கள். ஓய்வெடுக்கா

தீர்கள், விடுமுறை எடுத்துக் கொள்ளாதீர்கள். ஏனென்றால், கதவு எப்போது திறக்கப்படும் என்று எவருக்கும் தெரியாது. நீங்கள் தட்டிக் கொண்டே இருக்க வேண்டியது தான். எந்த அளவுக்குத் தட்டப்பட வேண்டும் என்பது எவருக்கும் தெரியாது. அதனால், தொடர்ந்து தட்டிக் கொண்டே இருங்கள். ஒரு குறிப்பிட்ட மையத்தில், ஒரு குறிப்பிட்ட டிகிரியில் கதவு திறக்கும்.

*சாலிஹ் கூறுவதில் தவறில்லை. ஆனால், இதைக் கேட்டுக் கொண்டிருந்த ரபியா, ஒரு நாள் கூறினாள்: கதவு திறக்கப்படும் என்று எவ்வளவு காலத்துக்குச் சொல்லிக் கொண்டிருப்பீர்கள்? உங்கள் வாழ்க்கை முழுவதும் நீங்கள் இப்படித்தான் சொல்லிக் கொண்டிருக்கிறீர்கள். அது திறக்கப்பட்டுவிடும், அது திறக்கப்பட்டுவிடும், தட்டிக் கொண்டே இருங்கள் என்று. நான் உங்களிடம் சொல்லிக் கொள்வது என்னவென்றால், ரபியா கூறினாள். கதவு மூடியிருக்கவில்லை. தட்டுங்கள் என்று கூறுவது பைத்தியக் காரத்தனம். கதவு ஏற்கெனவே திறந்திருக்கிறது - உள்ளே செல்.*

பிரச்சினை என்னவென்றால், இருவருமே சரியாகத் தான் கூறுகிறார்கள். சாலிஹ் பாண்டித்யம் நிறைந்த மனிதனாக இருந்திருப்பாரேயானால், அதில் எந்தச் சிக்கலும் இல்லை. உபகதை சாதாரணமாக இருந்திருக்கும். அவருக்குத் தெரிந்திருக்கவில்லை. அவர் என்ன கூறுகிறார் என்பதை அறிந்திருக்க வேண்டும். அவர் சாஸ்திரங்கள் படித்திருக்கக் கூடும். 'தட்டுங்கள்; திறக்கப் படும்.' அவர் ஒருவேளை, அறிவாளியாக, பண்டிதராக இருந்திருந்தால் சிக்கல் இருந்திருக்காது. ரபியாவும் சரியாகத்தான் சொல்லியிருக்க வேண்டும். ஆனால், விஷயம் என்னவென்றால், சாலிஹ் தானே ஒரு புத்தராக இருப்பவர். சாலிஹ் என்ற இந்த மனிதர், ரபியாவைப்

போலவே ஞானம் அடைந்தவர் - அவர் தவறாகக் கூறுவதற்குச் சாத்தியமில்லை. ரபியாவும் தவறாகக் கூறுவதற்குச் சாத்தியமில்லை. சாலிஹ்யும் சரியாகத்தான் இருக்க வேண்டும். ரபியாவும் சரியாகத்தான் இருக்க வேண்டும். அதுதான் குழப்பம்.

சுஃபிக்கள் இதைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தனர். இதற்கு எப்படித் தீர்வு காண்பது? ஒரு மனிதன் அடையாமல் இருந்தால், அவன் தவறாகச் சொல்கிறான் என்று எப்போதும் எளிதாக முடிவெடுத்தவிட முடியும். இந்த மாதிரிப் பிரச்சினை மனிதனின் மொத்த வரலாற்றில் அடிக்கடி ஏற்படுவதுண்டு, மகாவீரருக்குப் புத்தரிடம் முரண்பாடு, புத்தருக்கு மகாவீரரிடம் முரண்பாடு. பிரச்சினை என்னவென்றால், இருவருமே சரியாகத்தான் இருந்திருக்க வேண்டும். மக்கள் அந்த அளவுக்கு ஆழமாகச் சென்று, ஒருவர் மட்டுமே சரி என்று முடிவெடுத்து விட முடியாது. மகாவீரர்தான் சரி என்று சிலர் முடிவெடுத்தார்கள் - அவர்கள் ஜைனர்கள் ஆனார்கள். சிலர் புத்தர்தான் சரி என்று முடிவெடுத்தார்கள் - அவர்கள் புத்த சன்யாசி ஆனார்கள். நான் சொல்வது என்னவென்றால், மகாவீரரும், புத்தரும் - இந்த இரண்டு மனிதர்களுமே சரிதான். இல்லையென்றால், நாம் இன்னும் ஆழமாகச் செல்ல வேண்டும். இந்தப் பிரச்சினையை மேலோட்டமாகத் தீர்த்துவிட முடியாது. ''யாராக இருந்தாலும், தொடர்ந்து கதவைத் தட்டினால், அது அவருக்காகத் திறக்கப்படும்.'' என்று சாலிஹ் கூறும்போது, அவர் கதவைப்பற்றி எதுவும் சொல்லவில்லை. அது மூடியிருக்கிறதா, திறந்திருக்கிறதா என்பதைப் பற்றி அல்ல. அவர் கூறியது கதவு சம்பந்தப்பட்டது அல்ல. ஆன்ம சாதகர்களுக்கு அவர் ஏதோ சொல்கிறார்: தொடர்ந்து தட்டுங்கள். கேள்வி, கதவைப் பற்றியது அல்ல. கதவை அவர் குறிப்பிடவே இல்லை. இங்குக் கதவு என்பது

பொருளல்ல. இங்கு வலியுறுத்தக்கூடிய விஷயம் முற்றிலும் வேறானது. வலியுறுத்தல் என்பது ஆன்ம சாதகர்களின் மீதுதான்.

சாலிஹ் சீடனின் மீதுதான் அக்கறை கொண்டிருக்கிறார். அவர் கூறுகிறார்: தொடர்ந்து தட்டுங்கள். உங்கள் மொத்த சக்தியையும் ஒன்று திரட்டித் தொடர்ந்து தட்டுங்கள். இவ்வாறு அவர் சீடனிடம் கூறும்போது, அவனுக்காகக் கதவு திறக்கப்படுமா என்பது இங்குக் கேள்வி அல்ல. தொடர்ந்து தட்டும்போது, சீடன் திறப்பான். அவர் குறிப்பிடுவது கதவை அல்ல. சாலிஹ் அதைப் பற்றிச் சிந்திக்கவில்லை. அவர் கூறுகிறார்: நீ தொடர்ந்து தட்டிக் கொண்டே இரு - ஏனென்றால், தொடர்ந்து நீ தட்டும் போது நீ திறக்கப்படுகிறாய். இல்லையென்றால், நீ மூடப்பட்டிருப்பாய். கதவு மூடி இருக்கவில்லை என்பதை சாலிஹ்ஹீம் அறிவார். அது திறந்திருக்கிறது. ஆனால் நீ மூடப்பட்டிருக்கிறாய்.

ஒருவேளை கதவு மூடப்பட்டிருந்தாலும்கூட, சாலிஹ் உனக்காக அதைத் திறந்திருப்பார். அது மிகவும் எளிதானது. சாலிஹ் கதவைத் திறந்துவிட்டு, வாசலில் நின்றபடி, உள்ளே செல்ல விரும்பும் அனைவரையும் அனுமதித்திருப்பார். இங்கு, விஷயம் கதவு அல்ல. உன்னுடைய இருத்தல்தான் விஷயம். உன்னுடைய கண்கள் மூடி இருக்கின்றன. உன்னுடைய பிரக்ஞை மூடி இருக்கிறது. உன்னுடைய இருத்தல் மூடி இருக்கிறது. நீ தொடர்ந்து தட்டாதவரை, நீ கதவைத் திறக்கப்போவதில்லை. கதவு வெளியே இல்லை. நீ தான் கதவு. நீ தான் அதில் நுழைய வேண்டும்.

சாலிஹ் கூறியது சரிதான். அவருடைய கூற்று கதவைப் பற்றியதல்ல. அவருடைய கூற்று சீடனைப்

பற்றியது. பாதையில் உள்ள ஆன்ம சாதகர்களைப் பற்றியது.

இதைத்தான் பதஞ்சலியும் கூறுகிறார். பதஞ்சலி சாலிஹ்ஹைப் போன்றவர். சீடனையும் ஆத்மசாதகனைப் பற்றித் தொடர்ந்து பேசுபவர். மூடியவர்களையும் சீடர் களையும் பற்றித் தொடர்ந்து சிந்திப்பவர். இறுதி அடைதல் என்பதன் அர்த்தத்தை அவர்கள் புரிந்துகொள்ள வில்லை. சாலிஹ் மிகுந்த பச்சாதாபம் கொண்டவர். கதவு மூடப்படவில்லை, அது திறந்துதான் இருக்கிறது என்பதை அவர் அறிவார்.

நீ எப்போதும் ஏடன் தோட்டத்தில் இருந்திருக்கிறாய். ஆதாம் எப்போதும் வெளியேற்றப்பட்டதில்லை. அவன் ஹிப்னாடிச மயக்கத்தில் இருந்திருக்கக் கூடும். அவன் வெளியேற்றப்பட்டதாக அவனுக்குச் சொல்லப்பட்டிருக் கலாம். அதனால்தான் வெளியேற்றப்பட்டதாக அவன் நினைத்திருக்கலாம். ஆனால், அவன் எப்போதும் வெளி யேற்றப்படவில்லை. அவனை எங்கே வெளியேற்ற முடியும்? அவன் எங்கே இருந்தாலும் தோட்டத்திற் குள்ளேதான் இருந்திருக்க வேண்டும்.

நீ எங்கே இருந்தாலும் சரி, உன்னால் கடவுளை விட்டு வெளியேற முடியாது. நீ ஒரு திருடனாகவோ, கொலை காரனாகவோ, கொள்ளைக்காரனாகவோ இருக்கலாம். அது பிரச்சினையல்ல. நீ கடவுளின் உள்ளேதான் இருக்கிறாய். நீ திருடும்போது, கடவுள் உன் வழியாகத் திருடுகிறார். நீ திருடும்போது, உன் மூலமாகக் கடவுள் திருடப்படுகிறார். நீ கொலை செய்யும்போது கடவுள் கொலை செய்கிறார். உன்னால் வெளியே இருக்க முடியாது. நீ அப்படி நினைக்கலாம். உன்னுடைய எண்ணம் அதுவாக இருக்கலாம். ஆனால், அந்த எண்ணம், உன் கண்களை மூடுமே தவிர, கதவுகளை அல்ல.

ஒவ்வொரு தனி மனிதனும் தன்னுடைய இதயத்தைத் திறக்க வேண்டும். அதனால்தான் சாலிஹ் கூறுகிறார்: தொடர்ந்து தட்டிக் கொண்டே இருங்கள். எந்த விடு முறைக்கும் அனுமதி இல்லை. ஓய்வு கூடாது, சோம் பேறித்தனம் கூடாது. காரணம், சில நாள்கள் வேலை செய்துவிட்டு, பிறகு நிறுத்திவிட்டால், நீ செய்த மொத்த வேலையும் செய்யப்படாத வேலையாகிவிடும். மறுபடியும் நீ அரிச்சுவடியிலிருந்து ஆரம்பிக்க வேண்டும். நீ மறுபடியும் நிறுத்தினால் மறுப்படியும் அரிச்சுவடிதான். அது தண்ணீரைக் கொதிக்க வைப்பது போன்றது. நீ தண்ணீரை 50 டிகிரியோ அல்லது 80 டிகிரியோ கொதிக்க வைத்தபின், நெருப்பை அணைத்துவிட்டால், அந்தத் தண்ணீர் மறுபடியும் குளிர்ந்து அறையின் வெப்பநிலைக்கு வந்துவிடும். மறுநாள், நீ மறுபடியும் கொதிக்க வை. மீண்டும் தீயை அணைத்துவிடு. அது 100 டிகிரி வெப்பநிலை வரை கொதிக்க வைக்கப்பட்டாலொழிய, அது ஆவியாவதற்குச் சாத்தியமில்லை.

அதனால், தட்டிக்கொண்டே இருங்கள். 100 டிகிரி தட்டுதல் தேவைப்படுகிறது. அதற்குப் பிறகுதான், கதவு திடீரெனத் திறக்கப்படும். கதவு திறக்கப்படுகிறது என்பதல்ல. திடீரென நீ திறக்கப்படுகிறாய். உன் கண்கள் திறக்கப்படுகின்றன. அதற்கு மேல் மூடி இருப்பதற்கு ஒன்றுமில்லை என்ற நிலை திடீரென உண்டாகும். உன்னுடைய பிரக்ஞை பூரணத்துவம் அடையும். பிரக்ஞை இன்மை அதில் கரைந்துவிடும். உன்னுடைய இருத்தலின் எந்த மூலையும் இருட்டாக இருக்காது. அனைத்திலும் ஒளி உண்டாகும்.

சாலிஹ் சரியாகச் சொல்லியதோடு, மிகவும் உதவியா கவும் இருக்கிறார். இதுவரை அடையாதவர்களைப் பற்றி அவர் சிந்திக்கிறார். அவருக்கு மிகுந்த இரக்க உணர்வு

இருக்கிறது. உண்மையைப் பற்றிய சரியான வாக்கு மூலத்தைப் பற்றி அவர் கவலைப்படுவதில்லை. பொய் களால், பயணிகளுக்குப் பலன் கிடைத்தால், அவர் பொய்களைக் கூறுவார்.

உண்மை என்பது என்னவென்றால், பலன் தரக்கூடியது என்று புத்தர் உண்மையை வரையறுக்கிறார். ஒரு பொய் பலன் தரும்போது, அந்தப் பொய்யே உண்மையாகி விடுகிறது. பயன் இல்லாத உண்மையினால் எந்தப் பயன் இருக்கிறது? பயன் இல்லாத அந்த உண்மையைக் குப்பைத் தொட்டியில் போட வேண்டியதுதான். புத்தரின் இந்த வரையறை உண்மையிலேயே பிரமாதமானது. இந்த உலகின் முதல் பகுத்தறிவாளர் அவர்தான். இப்போது விஞ்ஞானிகள் புத்தரை ஒப்புக் கொள்கிறார்கள்.

ஆனால், இந்த ரகசியத்தைத் தெரிந்து கொள்வதற்கு, விஞ்ஞானத்திற்கு இருபத்தைந்து நூற்றாண்டு ஆகிவிட்டன. இப்போது விஞ்ஞானம் உண்மையைப் பற்றிப் பேசுவதில்லை. அனைத்தும் வெறுமனே ஓர் அனுமானம் என்று அது கூறுகிறது. சரி, அனுமானம் என்பது என்ன? அது ஏதோ ஒரு வகையில் வேலை செய்கிறது. அது உண்மையா, இல்லையா என்பது நமக்குத் தெரியாது. ஆனால், அது வேலை செய்கிறது, அடுத்த நாள், இதைதவிடச் சிறப்பான ஒரு கோட்பாடு நன்றாக வேலை செய்தால், அது உண்மையாகிவிடுகிறது. விஞ்ஞானம் நாளுக்கு நாள் மாறிக் கொண்டே இருக்கிறது.

உண்மை மாறாதது. ஆனால், எப்போதும் நீ மேலும் சிறப்பாக வேலை செய்யும் அனுமானத்தைக் கண்டு பிடிக்க முடியும். அது மேலும் அதிகமாக வேலை செய்வதாக இருந்தால், அது மேலும் உண்மையாகி விடுகிறது.

உண்மை என்பது என்ன என்பது ஒருவருக்கும் தெரியாது. ஏதாவது பலன் அளித்தால், அது உண்மை என்று நாம் தீர்மானிக்க வேண்டியிருக்கும். பலன் அளிக்காத எதுவும் உண்மை இல்லை. பலன் என்பது மட்டுமே இதற்கு அடிப்படை.

சாலிஹ் புத்தரிடம் ஒத்துப் போயிருக்க வேண்டும். அவர் கதவைப் பற்றி அக்கறை கொள்ளவில்லை. அது இருக்கிறதா, இல்லையா என்பதைப் பொருட்படுத்தவில்லை. அவர் அக்கறை கொண்டதெல்லாம் தேடுபவர்களைப் பற்றித்தான். பாதையில் உள்ள இருட்டைத் தடவுபவர்களைப் பற்றித்தான். அவர் அவர்களிடம் தான் கூறுகிறார். தட்டு, தொடர்ந்து தட்டு.

*யாராக இருந்தாலும், தொடர்ந்து கதவைத் தட்டினால், அது அவருக்காகத் திறக்கப்படும்.*

நினைவு வைத்துக்கொள். தட்டுபவருக்கு மட்டுமே திறக்கப்படும். மற்றவர்களுக்கு அல்ல. கதவு திறக்கப்படுவதோ அல்லது மூடியிருப்பதோ கேள்வியாக இருப்பின், ஒரு மனிதன் அதைத் திறந்துவிட முடியும். பிறகு, அது அனைவருக்கும் திறந்திருக்கும். ஒரு முறை திறக்கப்பட்டது திறக்கப்பட்டதுதான். அதற்குள்ளே அனைவராலும் நுழைந்துவிட முடியும். ஆனால், இது கதவைப் பற்றிய கேள்வியே அல்ல. ஒவ்வொருவரும் தனக்காகத் திறந்து கொள்ள வேண்டும். ஆனால், ஒருவருக்காக இன்னொருவர் திறக்க முடியாது.

புத்தர்கள் பாதையை மட்டுமே காட்டுவார்கள். நீ தான் பயணிக்க வேண்டும். அதற்கு நீ தான் பாடுபட வேண்டும். அவர்கள் சுட்டிக்காட்ட மட்டுமே செய்வார்கள். வரைபடத்தை மட்டுமே அவர்கள் காட்டுவார்கள். உயர்வான அனுபிரக்ஞைத் தன்மையை, பலன் அளிக்கக்கூடிய அனு

மானத்தை மட்டும் காட்டுவார்கள். நீ தான் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். ஏனெனில் ஆழமாக பார்த்தால் செய்வது எதுவும் முக்கியமல்ல. நீ இப்போது இருப்பதி லிருந்து மாறுபட்டு இருக்க வேண்டும் என்பதுதான் முக்கியம். இருத்தலின் வித்தியாசமான குணாதிசயம் தேவைப்படுகிறது. அதுதான் க்தவு. சாலிஹ் முழுக்க முழுக்கச் சரிதான்.

இதுதான் பதஞ்சலிக்கும் திலோப்பாவுக்கும் உள்ள வித்தியாசம். சாலிஹ் பதஞ்சலியைப் போன்றவர். ரபியா திலோப்பாவைப் போன்றவர்.

*சாலிஹ் கூறியதைக் கேட்டுக் கொண்டிருந்த ரபியா, ஒரு நாள் கூறினாள்: கதவு திறக்கப்படும் என்று எவ்வளவு காலத்துக்குச் சொல்லிக் கொண்டிருப்பீர்கள்? கதவு மூடியிருக்கவில்லை.*

இது அடைந்த ஒருவரின் வாக்குமூலம். அடைந்த வர்களுக்கு மட்டுமே இது பொருள் பொதிந்ததாக இருக்கும். இது சாலிஹ்ஹை விட நிஜமானது. அதனால் தான், சாலிஹ் இதனை மறுக்கவில்லை. அவர் வெறுமனே கவனித்துக் கொண்டிருந்தார். எந்தவித எதிர்க் கருத்தும் அவர் சொல்லவில்லை. அவர் எதிர்க்கருத்து சொல்லாத தற்குக் காரணம், ரபியா கூறுவது சரி என்பதை அவர் அறிந்திருந்தார். ஆனால் அந்த 'சரி' என்பது பயனற்றது. முற்றிலும் சரியானது, ஆனால் பயன்ற்றது.

நீ முழுமையான உண்மையைச் சாப்பிட முடியாது. நீ முழுமையான உண்மையைக் குடிக்க முடியாது. முழுமை யான உண்மை என்பது, கடல்நீரைப் போன்றது - அது அழகானதுதான். ஆனால், நீ தாகமாக இருக்கும்போது, அதனால் எந்தப் பயனும் இல்லை. தாகம் கொண்ட ஒரு மனிதனுக்கு, கரையோரத்தில் அமர்ந்திருப்பதோ, ஆர்ப்

பரிக்கும் அலைகளோ, எல்லையற்ற கடலோ பயன் படாது. முழுமையான உண்மை என்பது கடல்நீரைப் போன்றது. நீ தாகத்தில் தவிக்கும்போது, ஒரு சிறிய நீரூற்று உனக்குத் தேவைப்படுகிறது. நீ தாகத்தைத் தணித்துக் கொள்வதற்கு ஒரு கிணறு தேவைப்படுகிறது. கடல் உனக்கு உதவாது. அதிலிருக்கும் அதிக உப்பு உன்னைக் கொன்றுவிடும்.

ரபியா சொல்வது முற்றிலும் உண்மை: கதவு மூடியிருக்கவில்லை. அதை யார் மூடுவார்கள்? இயற்கை உனக்கு எதிரானதல்ல. கடவுள் உனக்கு எதிரானவரல்லர். பிறகு, கதவை யார் மூடுவார்கள்? கதவு எப்போதும் திறந்துதான் இருக்கிறது.

இப்போது, 'பிராடிகல் சன்' கதைக்குச் செல்வோம். தந்தையின் இதயம் மூடப்பட்டிருக்கவில்லை. அதைத் திறப்பதற்கு எதுவும் தேவைப்படவில்லை. ஒரு தட்டு கூட, அதைத் திறப்பதற்குத் தேவைப்படவில்லை. வெறு மனே ஒரு செய்தி - அது ஒரு செய்திகூட அல்ல. வெறு மனே ஒரு புரளி - மகன் திரும்பி வருகிறான் என்பது. உடனே, தந்தை அவனுக்காக விருந்து ஏற்பாடு செய்யத் தொடங்குகிறார். நான் வருகிறேன் என்று மகனிடமிருந்து ஒரு செய்திகூட வரவில்லை. மகன் திரும்பி வருகிறான் என்று வெறுமனே ஒரு புரளிதான் வந்திருக்கிறது. உடனே தந்தை, அவனுக்காக விருந்து ஏற்பாடு செய்கிறார். அவனை வரவேற்கக் காத்திருக்கிறார்.

தந்தையின் உருவத்தில் கடவுள் காட்சியளிக்கிறார். இதயத்தின் இருத்தல், எப்போதும் உனக்காகவே திறந் திருக்கிறது. அது பதைபதைப்புடன் காத்துக் கொண்டிருக் கிறது. நீ திரும்ப வருகிறாய் என்ற புரளிக்காகவே காத்துக் கொண்டிருக்கிறது. நீ எங்கோ நீண்டதூரம் தள்ளி யிருக்கிறாய்.

கதவை யார் மூடுவார்கள்? ரபியா முற்றிலும் சரியே. சித்தர்கள் நிற்கும் இடம் இதுதான். திலோப்பா இந்த முறையில்தான் பேசுவார். கிருஷ்ணமூர்த்தி இந்த முறையில்தான் பேசிக்கொண்டே இருப்பார். ஆனால், அவர் கூறுவது எதுவாக இருந்தாலும், அது வெறுமனே கடல்நீரைப் போன்றதுதான். உப்புநீரை எப்படிக் குடிக்க முடியும்? அது யாருடைய தாகத்தையும் தீர்க்க உதவாது. உண்மையைப் பற்றி இறுதியாகச் சொல்வதென்றால், அது முற்றிலும் சரி, ஆனால் ம்முற்றிலும் பயனற்றது.

ரபியா கூறும் சில விஷயங்களைப் புத்தர்கள் மட்டுமே புரிந்துகொள்ள முடியும். ஆனால், அது அவர்களுக்கு அவசியமில்லை. ஆனால் சாலிஹ் அதைப் புரிந்து கொண்டார். அதனால்தான், அவர் மௌனமாக இருந்தார். அவர் எதுவும் கூறவில்லை. ரபியாவின் கூற்று சரியாக இருந்தாலும், அவர் அதுபற்றி எதுவும் சொல்லவில்லை. ஆனால், சாலிஹ் தொடர்ந்து போதித்தார் - ரபியாவுடன் ஏற்பட்ட மோதலுக்குப் பிறகும், அவர் இதையேதான் ஒவ்வொரு நாளும் சொல்லிக் கொண்டிருந்தார்: *யாராக இருந்தாலும், தொடர்ந்து கதவைத் தட்டினால், அது அவருக்காகத் திறக்கப்படும்.*

அவர் ரபியாவிடம் ஒரு வார்த்தை கூடச் சொல்ல வில்லை. ஏனென்றால், சொல்வதற்கு எதுவுமில்லை. அவர் சொல்வது சரிதான். ஆனால், அது அவருடைய மனதை மாற்றவில்லை. அவர் தொடர்ந்தபடியே இருந்தார்.

ஒரு நாள் ஒருவர் என்னிடம் வந்து, கிருஷ்ணமூர்த்தி என்னைச் சந்திக்க விரும்புவதாகக் கூறினார். ''ஆஹா... எப்போது வாய்ப்புக் கிடைத்தாலும் நான் வந்து அவரைச் சந்திக்கிறேன்'' என்று நான் கூறினேன்.

ஆனால், இது பயனற்ற வேலை. ஏனென்றால் நான் சாலிஹ், அவர் ரபியா. நான் சீடர்களிடம் பேசுபவன், அவர் ஆகாயத்துடன் பேசுபவர். நான் பேசுவது தாகம் கொண்ட நிஜ மனிதர்களிடம், அவர் பேசுவது வெற்றிடத்தில். அவர் கூறும் அனைத்தும் உண்மையாக இருந்தாலும் பயனற்றது. நான் கூறுவது உண்மையாக இல்லாவிட்டாலும் கூடப் பயன்மிகுந்தது.

சாலிஹ் தொடர்ந்தார். அவர் ரபியாவிடம் ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லை. ஏனென்றால், சொல்வதற்கு என்ன இருக்கிறது? அவள் சரிதான். கதவு மூடியிருக்கவில்லை. ஆனால், நீ அடைந்தால் மட்டுமே இந்த உண்மைக்குப் பொருள் இருக்கும். நீ கதவுக்குள் நுழைந்த பிறகுதான், கதவு மூடியிருக்கவில்லை என்பது உனக்குத் தெரிகிறது. ஆனால், அடையாதவர்களிடம் கதவு மூடியிருக்கவில்லை என்று நீ கூறினால், அது அவர்களைத் தவறாக வழிநடத்துவதாகிவிடும். நீ அவர்களுக்கு உதவி செய்யவில்லை. மாறாக, அவர்களுக்குத் தொல்லை கொடுக்கிறாய். ஏனென்றால், கதவு மூடியிருக்கவில்லை என்பதை அவர்களுக்குக் கூறினால், அவர்கள் அதை எந்த அர்த்தத்தில் எடுத்துக் கொள்வார்கள் என்பது உனக்குத் தெரியாது. அவர்கள் இப்படித்தான் அர்த்தம் கற்பித்துக் கொள்வார்கள்: அப்படியானால், இனிமேல் தொடர்ந்து தட்ட வேண்டிய தேவையில்லை. கதவு மூடியில்லாத போது, தட்டுவதற்கு அவசியமில்லை. அவர்கள் தட்டா விட்டால், அவர்களுக்குக் கதவு தொடர்ந்து மூடித்தான் இருக்கும். ஏனென்றால், அவர்கள் திறக்கப்போவதில்லை. அதனால் தொடர்ச்சியான தட்டுதல் அவசியம்.

இது சங்கரர் அடிக்கடி சொல்வதைப் போன்றது. அவர் அடிக்கடி ஓர் உருவகத்தைச் சொல்லுவார். ஒருநாள், நள்ளிரவு நேரத்தில் ஒரு பயணி சென்று கொண்டிருந்தான்.

வழியில் ஒரு பாம்பு நகர்வதை அவன் திடீரெனப் பார்த்தான். அவனுக்குப் பயம் ஏற்படுகிறது. அவன் பின்னோக்கி ஓட்டமெடுக்கிறான். ஆனால், அது பாம்பு இல்லை - அது வெறும் ஒரு கயிறுதான். காற்று வீசியதால், இப்படியும் அப்படியும் அந்தக் கயிறு அசைந்தது.

அந்தக் கயிறு அசைவதை அவன் பார்த்தபோது, அதில் ஏற்பட்ட சிறிய அசைவுகளைப் பார்த்து, அதை அவன் பாம்பு என்று நினைத்துவிட்டான். உடனே, அவனுக்குப் பயம் ஏற்படுகிறது. அங்கிருந்து அவன் தப்பித்து ஓடு கிறான். ஆனால், அந்தப் பாம்பைக் கடந்து சென்றால் தான், அவன் செல்ல வேண்டிய இடத்தை அடைய முடியும்.

அதனால், அவன் அங்கு வந்த வழிப்போக்கர் ஒருவரிடம் கேட்டான். ''இந்தப் பகுதியில் பாம்புகள் இல்லை. அது வெறுமனே ஒரு கயிறாக இருக்கலாம். அதனால், நீ பயப்படத் தேவையில்லை'' என்று அவர் கூறினார்.

ஆனால், அந்தப் பயணி அதை ஒப்புக் கொள்ளத் தயாராக இல்லை. ''இல்லை, நான் கண்களால் பார்த்தேன். அது நீண்டு இருந்தது. அது அசைந்தது. பார்ப்பதற்கு அந்தப் பாம்பு பயங்கரமாக இருக்கிறது.''

அப்போது அங்கு வந்த இன்னொரு மனிதர், இவர்களின் சம்பாஷணை மொத்தத்தையும் கேட்டுவிட்டு, கையில் ஒரு விளக்கோடு வந்து கூறுகிறார். ''சரி, என்னுடன் வா.'' அந்தப் பகுதியில் பாம்புகள் இல்லை என்பது அவருக்கும் தெரியும். அது ஒரு கயிறாகத்தான் இருக்க முடியும் என்று அவருக்கும் தெரியும். சில சமயங்களில், இதைப் போன்ற கயிறுகளைப் பார்த்து,

அவற்றைப் பாம்புகள் என்று அவரும் நினைத்திருக்கிறார். அதற்குப் பிறகுதான், அது பாம்பல்ல என்பது அவருக்கும் தெரிந்தது - அந்தப் பகுதியில் பாம்புகள் இல்லை என்பது அவருக்கும் தெரியும். ''அது பாம்பல்ல, பயப்படாதே, கவலைப்படாமல் செல்'' என்று கூறினால், அந்தப் பயணி ஏற்றுக் கொள்ளப்போவதில்லை. அப்படிக் கூறுவது இப்போது உதவாது. அவர் ஒரு விளக்கைக் கொண்டு வருகிறார். அது பாம்பு இல்லை என்று நன்றாகத் தெரிந் திருந்தும், அவர் விளக்கைக் கொண்டு வந்திருக்கிறார். விளக்கு வெளிச்சத்தில், அந்தப் பயணி அவரைப் பின் தொடர்ந்து செல்கிறான். குறிப்பிட்ட அந்த இடத்தை அவர்கள் அடைகிறார்கள். எதுவும் இப்போது சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. விளக்கு வெளிச்சத்தில் அது ஒரு சாதாரணக் கயிறுதான் என்பதைப் பயணி தெரிந்து கொள்கிறான். அவன் சிரித்துவிட்டு, விளக்கைக் கொண்டு வந்த மனிதர்க்கு நன்றி சொல்லிவிட்டு, பயணத்தைத் தொடர்கிறான்.

சாலிஹ் என்ற மனிதர் விளக்கைக் கொண்டு வருபவர். அது பாம்பு இல்லை, வெறுமனே ஒரு கயிறுதான் என்பதை நன்றாகத் தெரிந்திருந்தும், விளக்கை கொண்டு வருபவர். ''இந்தப் பகுதியில் பாம்புகள் கிடையாது. முட்டாள்தனமாகப் பயப்படாமல், தொடர்ந்து செல்'' என்று மொட்டையாகக் கூறுபவர் ரபியா, அவள் கூறுவது முற்றிலும் உண்மைதான். ஆனால், பலன் இல்லாதது, இந்தக் கூற்று, எந்த விதத்திலும் அந்த மனிதனுக்கு உதவப் போவதில்லை. அந்தப் பகுதியைப் பற்றி நன்கு அறிந்த வர்கள் மட்டுமே, இந்தக் கூற்றைப் புரிந்து கொள்ள முடியும். ஆனால், அங்கு வசிப்பவர்களுக்கு இது தேவைப்படாது.

நான் ரபியா கூறுவதைக் கேட்பவனாக இருந்தால், கதவு மூடியிருக்கவில்லை என்று என்னிடம் கூறுவது உபயோகம் இல்லாதது.ஏனென்றால், அது எனக்கும் தெரிந்ததுதான். இங்குக் கேள்வி எனக்காக அல்ல. தெரியாதவர்களுக்காகத்தான் இந்தக் கேள்வி. இதை அவர்களிடம் கூறினால், அது அவர்களுக்கு முட்டுக் கட்டையாகத்தான் இருக்கும்.

நான் அறிந்து கொண்டது இதுதான்: கிருஷ்ணமூர்த்தி மக்களுக்கு எந்த உதவியும் செய்யவில்லை. மாறாக, பல முட்டுக்கட்டைகளை அவர் உருவாக்கி இருக்கிறார். அவர் உண்மையைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறாரே தவிர, வேறெதுவும் இல்லை. அவர் பலருக்குத் தடையாக இருக்கிறார். எப்படியென்றால், ''நீ தான் உண்மையை அடைய வேண்டும். இது முற்றிலும் உண்மைதான். பிறர் உனக்கு உதவ முடியாது - அதுவும் கூட உண்மைதான். ஆனால், இந்த வாக்குமூலம் எவருக்கும் உபயோகப் படாது. அது ஒரு முட்டுக்கட்டை. அவருடைய உபதேசத் தைக் கேட்கும் பலரும், ஆணவக்காரர்களாகத்தான் மாறுகிறார்கள். அவர்கள் நினைக்கிறார்கள்: ''எவராலும் நமக்கு உதவ முடியாது, எந்தக் குருவும் தேவையில்லை. யாரையும் நம்ப வேண்டியதில்லை. நமக்கு நாமே போதும்.'' ஆனால், இதன்மூலம் அவர்கள் எங்கேயும் போய் சேருவதில்லை. இதனால், அவர்கள் எளிமையாக இல் லாமல், அகம்பாவம் கொண்டவர்களாகி விடுகிறார்கள்.

எந்தத் தியானமும் தேவையில்லை என்று கிருஷ்ண மூர்த்தி கூறுகிறார். இது முற்றிலும் உண்மை. நூறு சத விகிதம் உண்மை. ஆனால், அவர் பேச்சைக் கேட்ப வர்கள், அவர் குறிப்பிடும் தியானமின்மையால் எதையும் சாதிப்பதில்லை. அவர்கள் மற்ற அனைவரையும் விட

அதிகமான துன்பத்தில் இருக்கிறார்கள். அவர்கள் என்னிடம் வந்து கூறுகிறார்கள், ''தியானம் தேவையில்லை என்பதை நாங்கள் புரிந்து கொண்டோம். ஆனால், இன்னமும் எங்களுக்கு எதுவும் ஏற்படவில்லையே.'' நான் அவர்களிடம் கூறுவதுண்டு. ''அப்படியானால் தியானம் செய்யுங்கள். தியானமின்மையை நீங்கள் முயற்சித்தீர்கள். இப்போது தியானம் செய்ய முயற்சியுங்கள்.''

ஆனால், அவர்கள் கூறுவார்கள், ''இது சரியல்ல, காரணம், கிருஷ்ணமூர்த்தி தியானம் தேவையில்லை என்று கூறுகிறார்.'' இப்போது அவர் தியானத்திற்குத் தடையை உருவாக்கி விட்டார். தியானம் தேவையில்லை என்ற அவருடைய வாக்குமூலத்தினால், தியானமின்மை என்ற எண்ணத்திற்கு இவர்கள் அடிமைகளாகி விட்டார்கள்.

தியானம் தேவையில்லை என்பது எனக்கும்கூடத் தெரிந்ததுதான். ஆனால், மிக நீண்ட காலம் நீ தியானம் செய்த பிறகுதான், உனக்கு அந்த நிலை ஏற்படும். நீ தொடர்ந்து தட்டிக் கொண்டே இருந்தால், ஒரு நாள் திடீரெனக் கதவு திறந்து கொண்டதை நீ தெரிந்து கொள்வாய். ''அது மூடியிருக்கவில்லை. பிறகு நான் எதற்காகத் தட்ட வேண்டும்?'' ஆனால், இந்தப் புரிதல், ஆண்டுக்கணக்கில், வாழ்க்கை முழுவதும் தட்டியதற்குப் பின்னரே உனக்கு ஏற்படும். தட்டுவதால் கதவு திறக்கப்படாது. தட்டுவது உன் தூக்கத்தைக் கெடுக்கும். தட்டுவதால் ஏற்படும் சூழ்நிலையில் நீ ஜாக்கிரதையாக இருப்பாய். தூக்கத்திலிருந்து திடுக்கென விழிப்பாய். தூக்கத்திலிருந்து வெளியே வருவாய்.

நான் தியானம் செய் என்று கூறும்போது, தியானம் மூலமாக எவரும் அடைவதில்லை என்பது எனக்குத் தெரியும். ஆனால், தியானத்தின் மூலமாக, தியானமின்மை

சாத்தியமாகக் கூடிய மையத்தை நீ அடைவாய். நீ தியானமே செய்யாதபோது, தியானமின்மை எப்படிச் சாத்தியமாகும்? ஒருவன் தியானத்தை, அதிகபட்சம் எவ்வளவு முடியுமோ, அந்த அளவிற்குக் கடுமையாகச் செய்ய வேண்டும். எதுவும் விடுபட்டுவிடக் கூடாது. உங்கள் மொத்த சக்தியையும் அதற்குள் கொண்டுவர வேண்டும். தலையால் சுவரை மோதவேண்டும். இதனால், சுவர் உடைந்து கதவு திறக்கப்படும். கதவு எப்போதும் திறந்திருக்கிறது. தலையை நீ அதன்மீது முட்டுவதால், திடீரென்று உன் தூக்கம் கலைகிறது. கனவுகள் கலைகின்றன, கதவல்ல. கதவு எப்போதும் திறந்துதான் இருக்கிறது.

ஒரு உபகதை சொல்கிறேன். இது நிகழ்ந்த நிகழ்ச்சி. நாகார்ஜுனா என்னும் மாபெரும் புத்த ஞானியிடம் ஒரு மனிதன் வந்தான். அவன் கூறினான், ''நான் தியானம் செய்வதற்கு விரும்புகிறேன். ஆனால், என்னால் முடிய வில்லை. கடவுளின் எண்ணத்தை ஒருமுகப்படுத்த நான் முயற்சிக்கிறேன். ஆனால், என் மனம் இங்குமங்கும் அலைபாய்ந்து கொண்டே இருக்கிறது. கடவுளின் பெயரை நான் முற்றிலும் மறந்து விடுகிறேன். பிற விஷயங்கள் என் மனதுக்குள் வருகின்றன. என் மனதில் பலவிதமான எண்ணச் சிதறல்கள் ஏற்படுகின்றன. இதை என்னால் கட்டப்படுத்த முடியவில்லை. எனக்குத் தயவுசெய்து உதவுங்கள்.

நாகார்ஜுனா அந்த மனிதனைப் பார்த்துக் கூறினார். ''கடவுளை மறந்துவிடுங்கள். இப்போது நான் கேட்பதற்குப் பதில் சொல்லுங்கள்: நீங்கள் யாரையாவது காதலிக்கிறீர்களா?''

அந்த மனிதன் சற்றுக் கூச்சத்துடன் நெளிந்தான், அவன் கூறினான், ''நீங்கள் கேட்டுவிட்டீர்கள். என்னால் உண்மையை மறைக்க முடியாது. என்னைப் பார்த்துச்

சிரிக்காதீர்கள். நான் ஒரு பைத்தியக்காரன். நான் யாரையும் காதலிக்கவில்லை. நான் காதலிப்பது என்னுடைய எருமை மாட்டை மட்டும்தான். நான் உண்மையிலேயே அவளைக் காதலிக்கிறேன். அவள் ஒரு அழகான பிறவி.

நாகர்ஜுனா கூறினார்: ''நல்லது, நீ கடவுளைக் காதலிக்கிறாயா? அல்லது எருமை மாட்டைக் காதலிக்கிறாயா? என்பது இங்கே முக்கியமல்ல. எருமையும் ஒரு கடவுள்தான் - பெண் கடவுள். அது போதும். நீ குகைக்குள் செல். உள்ளே அமர்ந்து கொள். நீ தொடர்ந்து ஒன்றை மட்டும் நினைத்துக் கொண்டே இரு - நீ உன்னுடைய எருமை மாடாக மாறி விடுவாய்.''

அவன் கூறினான்: ''இது என்னால் முடியும். உண்மையில் சொல்லப் போனால், இதை எப்படி நீங்கள் தெரிந்து கொண்டீர்கள் என்பது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. ஏனென்றால், சில நேரங்களில் நான் நினைப்பதுண்டு. நான் என்னுடைய எருமையை அளவுக்கு அதிகமாக நேசிக்கிறேன். சில நேரங்களில் நான் நினைப்பதுண்டு, அடுத்த ஜென்மத்தில் நான் ஒரு எருமையாகப் பிறக்கக் கூடாதா என்று.''

நாகார்ஜுனா கூறினார்: ''சரி, நீ செல், நான் வந்து உன்னை வெளியே வரும்படி கூறும் வரை, குகைக்குள்ளிருந்து வெளியே வராதே.''

ஒரு நாள் கடந்தது, இரண்டாம் நாள் கடந்தது, மூன்றாவது நாள் கடந்தது. நான்காவது நாள் காலையில் நாகார்ஜுனா குகைக்குச் சென்று அவனிடம் கூறினார். ''இப்போது நீ வெளியே வரலாம்.'' அந்த மனிதன் முயற்சி மேல் முயற்சி செய்தும் அவனால், குகையை விட்டு வெளியே வர முடியவில்லை. நாகார்ஜுனா, ''என்ன விஷயம்?'' என்று கேட்டார்.

அவன் கூறினான்: ''இதோ பாருங்கள். கதவு மிகவும் சிறியதாக இருக்கிறது. என் தலையில் முளைத்துள்ள கொம்புகள் உனக்குத் தெரிகிறதா? என்னால் இங்கிருந்து வெளியே வர முடியவில்லை.'' தான் ஓர் எருமை என்று அவன் மூன்று நாள்களாகத் தொடர்ந்து நினைத்துக் கொண்டிருந்திருக்கிறான். அவனுடைய சுய ஹிப்னாடிச மயக்கத்தில் ஆழ்ந்துவிட்டான். இப்போது, அவன் ஓர் எருமை மாடு. நீ எதைப் பற்றி நினைக்கிறாயோ, அப்படியே மாறுகிறாய். உன்னுடைய சிந்தனைதான் உன்னுடைய அடையாளத்தை உருவாக்குகிறது.

அவன் அழத் தொடங்கிவிட்டான். அவன் கூறினான், ''என்னுடைய வாழ்க்கை முழுவதும் இந்தக் குகையை விட்டு வெளியேற முடியும் என்று எனக்குத் தோன்ற வில்லை. கடந்த மூன்று நாள்களாக நான் பசியில் வாடு கிறேன். தாகத்தால் தவிக்கிறேன். இப்போது என்னால் வெளியே வர முடியவில்லை. தயவு செய்து எனக்கு உதவுங்கள்.'' அவனுடைய கண்களிலிருந்து கண்ணீர் பெருக்கெடுத்தது.

நாகார்ஜுனா கூறினார்: ''அது மிகவும் கடினம். நீ இப்போது மீண்டும் உள்ளே சென்று, ஒரு மனிதனாக மாற வேண்டும். நான் ஒரு மனிதன், எருமையல்ல என்று நினைத்துக் கொண்டே இரு.''

அவன் குறைந்தது மூன்று மணி நேரம், 'தான் ஒரு மனிதன், எருமையல்ல' என்று நினைத்துக் கொண்டே இருந்தான் - மூன்று மணி நேரத்தில் எருமை மறைந்தது. அந்த மாயத் தோற்றம் மறைந்தது. அவன் கண்களைத் திறந்தான். சிரித்தபடியே வெளியே வந்தவன், நாகார்ஜுனாவிடம் கூறினான், ''எனக்குத் தேவையானது அனைத்தையும் நான் அடைந்து விட்டேன்.''

நாகார்ஜுனா கூறினார்: ''இப்போது தெரிந்து கொண்டிருப்பாய். உன்னால் தியானிக்க முடியும். ஆனால், தியானத்தின் மூலமாக, ஒருவன் புதிய தன்மைகளைப் பெறத் தொடங்குகிறான். சாதாரண மனிதனாக இருக்கும் நீ, தியானத்தின் மூலம், ஓர் ஆன்மிக மனிதனாக மாறுகிறாய். ஒரு புதிய அடையாளம். ஆனால், ஆன்மிகமாக இருப்பது, சாதாரணமாக இருப்பதைப் போன்றே தவறுதான். உண்மையான விஷயம் அடையாளம் இல்லாத போதுதான் ஏற்படுகின்றது. இப்போதிருப்பது ஒரு புதிய மாயை. ஆனால், இது உதவக்கூடியது. உலகத்திலிருந்து விலகி, ஆன்மிகத்திற்கு நீ அடியெடுத்து வைத்திருக்கிறாய். சம்சாரத்திலிருந்து சந்நியாசத்திற்கு மாறியிருக்கிறாய். நிஜத்திலிருந்து ஆன்மிகத்திற்கு மாறியிருக்கிறாய். ஒரு புதிய மாயையை நீ உருவாக்கி இருக்கிறாய். பழையதைத் தூக்கி எறிவதற்குப் புதியது தேவைப்படுகிறது.

ஆனால், பழைமையிலிருந்து புதுமைக்கு நீ மாறும் போது, இந்த இரண்டிற்கும் இடையில் ஓர் இடைவெளி இருக்கிறது. அதில் நீ ஒன்று மற்றவனாக இருப்பாய். எப்போது, அந்த ஒன்றுமற்ற தன்மையை நீ உணர்கிறாயோ, அதனை நீ பின்பற்றலாம். அதற்குப் பிறகு தியானம் தேவையில்லை, எந்த முறைகளும் தேவையில்லை, எந்த யுக்திகளும் தேவையில்லை.

கிருஷ்ணமூர்த்தியைவிட அதிகமான அளவில், யுக்திகளுக்கு எதிரானவன்தான் நான். ஆனால், இங்கு எனக்கு நானே பேசிக் கொள்வதில்லை. கிருஷ்ணமூர்த்தி தனக்குத் தானே பேசிக் கொள்பவர். அவர் பேசுவது உரையாடல் அல்ல. அவர் தனக்குத் தானே பேசிக் கொள்கிறார். அவர் உன்னிடம் பேசுவதில்லை. நீ வெறுமனே ஒரு சமாதானம் தான். அவர் தனக்குத்தானே பேசிக் கொள்பவர்.

நான் உன்னிடம் பேசிக் கொண்டிருக்கிறேன். அப்படி இல்லையென்றால் பேசுவதில் என்ன இருக்கிறது? நான் உன்னிடம் பேசும்போது, உனக்குத் தேவையானதைப் பார்க்கிறேன். எது உண்மை என்பது கேள்வியல்ல. கேள்வி என்பது, நான் உன்னிடம் ஏதாவது சொல்லும் போது, அது தொடர்பாக நீ என்ன செய்யப் போகிறாய்? கதவு மூடியிருக்கவில்லை என்று நான் கூறினால், நீ தட்டுவதை நிறுத்தி விடுவாய். அதுதான் நியாயமான தீர்மானம். எந்த வழிமுறைக்கும் தேவையில்லை என்று நான் கூறினால், நீ எல்லா வழிமுறைகளையும் கீழே போட்டுவிடுவாய். அதற்குப் பிறகு, இப்போது நீ எப்படி இருக்கிறாயோ, அப்படியேதான் இருப்பாய். தன்னுடைய வார்த்தைகளுக்குப் பிறர் எப்படி நடந்து கொள்கிறார்கள் என்பதை, அக்கறை கொண்ட ஒரு மனிதன் சிந்தித்துப் பார்க்க வேண்டும். சொல்லும் வார்த்தைகள் முக்கிய மல்ல. அந்த வார்த்தைகளுக்கு ஏற்ப, நீ எப்படி நடந்து கொள்கிறாய் என்பதுதான் முக்கியம். எத்தகைய சக்தி உனக்கு ஏற்படுகிறது? அது உன்னை எப்படி வழி நடத்துகிறது? என்பதுதான் முக்கியம். அது உன்னை, உண்மையை நோக்கி வழி நடத்தினால், திறந்திருக்கும் கதவை நோக்கி, உன்னை அழைத்துச் சென்றால், அதன்பின்னர் நான்கூடக் கூறுவேன்: தட்டுங்கள், தொடர்ந்து தட்டிக் கொண்டே இருங்கள்.

ரபியா கூறியது சரிதான், சாலிஹ் சரியல்ல என்பதை ஒரு நாள் நீ உணர்ந்து கொள்வாய். ஆனால், அப்போதும் நீ சாலிஹ்ஹிடம் நன்றி செலுத்துவாய், ரபியாவிடம் அல்ல. ஏனென்றால், சாலிஹ் இல்லாமல் ரபியா கூறியது சரி என்பதை உன்னால் உணர்ந்து கொள்ள முடியாது. இதுதான் மனப்பாங்கு. ரபியா குருவாக முடியாது, சாலிஹ்ஹால் குருவாக இருக்க முடியும். கிருஷ்ணமூர்த்தி

குருவாக முடியாது, பதஞ்சலியால் குருவாக இருக்க முடியும். ஏனென்றால், குருவாக இருப்பதன் அர்த்தம், ஞானிகள், அஞ்ஞானிகளிடம் தம்மைத் தாமே தொடர்பு படுத்திக் கொள்வதாகும். அறியாமையும் ஞானமும் சேரும்போது, நிகழ்வுகள் உண்டாகும். அந்த நிகழ்வுகளில் அறியாத மனிதன் சிலவற்றைச் செய்ய முடியும். அந்தச் சில விஷயங்கள் ஞானிகளால்தான் வழங்கப் படுகின்றன. சில விஷயங்கள் சரியாக இருக்கலாம். குருவின் மொத்த ஆற்றலும், உன்னை வெளியே இழுத்து, கொஞ்சம் கொஞ்சமாக, அடிமேல் அடியாக, அடுக்குகள் மேல் அடுக்குகளாகத் தன்னை நோக்கி இழுப்பதிலேயே அமைந்திருக்கிறது.

அவர் உன்னிடம் ஒத்துப் போக வேண்டும். உன்னைத் தன்னிடம் இழுப்பதற்கு உதவுவதற்காக, அவர் உன்னை நோக்கி வர வேண்டும். அப்படி வரும்போது, முற்றிலும் உண்மை இல்லாத விஷயங்களை அவர் கூறுவார். தன்னிச்சையான முறையில் அவர் சில திட்டங்களைத் தீட்ட வேண்டியிருக்கும். அவர்கள் படகுகளைப் போன்ற வர்கள். படகுகளைக் கொண்டு நீ ஆற்றைக் கடந்துவிட்ட பிறகு, அவற்றை ஆற்றிலேயே விட்டுவிட்டு நீ போய்க் கொண்டே இருப்பாய். அவர்கள் ஏணிகளைப் போன்ற வர்கள். நீ அதில் ஏறிச் சென்றுவிட்ட பிறகு, அவை பயனற்றதாகி விடும். அவர்கள் கருவிகள்தான், முடிவுகள் அல்ல.

சாலிஹ் ஒரு கருவியைப் போன்றுதான், சில விஷயங் களைச் சொல்கிறார். ரபியா பேசுவது முடிவைப் பற்றி. இரண்டுமே உண்மைகள்தான். முடிவில்தான் ரபியா கூறுவது உண்மை என்பது தெரியவரும். ஆனால், ஆரம்பத்தில் சாலிஹ் கூறுவது தான் உண்மை. தொடக்கம் தான் முடிவாக இருக்கும். ஏனென்றால், தொடக்கம்

இல்லையென்றால், முடிவு இருக்காது. நினைவு வைத்துக் கொள்: நீ தொடக்கத்தில்தான் அக்கறை கொள்ள வேண்டும். முடிவு என்பது தானாகவே வந்துவிடும். ரபியா, கிருஷ்ணமூர்த்தி, திலோப்பா போன்றவர்களை நீ மறந்தால் நீ எதையும் இழக்க மாட்டாய். அவர்கள் முடிவானவர்கள். ஆனால், பதஞ்சலி, புத்தர், போதிதர்மர், சாலிஹ் போன்றவர்களை நீ மறந்தால், அனைத்தையும் இழப்பாய். ஏனென்றால், அவர்கள்தான் தொடக்கம்.

நீ தொடக்கத்தில் கவனம் செலுத்து. முடிவு தானாகவே ஏற்படும். முடிவுதான் தொடக்கத்தை பின் தொடர்கிறது. நீ கதவைத் தட்டிக் கொண்டே இரு. இடைவிடாமல் தட்டிக் கொண்டே இரு. கதவு மூடியிருக்கவில்லை. திறந்துதான் இருக்கிறது - என்பது எனக்குத் தெரியும். இருந்தாலும் நீ தொடர்ந்து தட்டிக் கொண்டே இருக்க வேண்டும். அப்போதுதான், உனக்காக அது திறக்கப்படும். ஏனென்றால், தட்டுவதன் மூலம் நீ திறக்கப்படுகிறாய்.

இன்றைக்கு இது போதும்.



# 4

# வல்லுநர்களைக் கேட்பது

இறந்துவிட்டதாக நம்பப்பட்ட ஒரு மனிதனின் ஈமச் சடங்குகள் நடைபெற்றுக் கொண்டிருந்தன. அந்த மனிதனுக்கு திடீர் என உயிர் வந்துவிட்டது. அவன் கண்விழித்துச் சுற்றுமுற்றும் பார்த்தான். தன்னைச் சுற்றி நடைபெற்றுக் கொண்டிருந்த காட்சியைப் பார்த்ததும், அவனுக்கு மயக்கம் வந்துவிட்டது. அவனைச் சவப்பெட்டிக்குள் அடைத்து, அடக்கம் செய்வதற்காகக் கல்லறைக்கு எடுத்துச் சென்றார்கள்.

அவர்கள் கல்லறையை அடைந்ததும், அவனுக்குச் சுயநினைவு வந்துவிட்டது. அவன் சவப் பெட்டியின் மூடியைத் திறந்து கொண்டு, உதவிக்காகக் கத்தினான்.

துக்கம் அனுஷ்டிக்க வந்தவர்கள், அவன் மீண்டும் உயிர் பெற்றதை நம்ப மறுத்தனர். ஏனென்றால், அவன் இறந்துவிட்டதாக, தகுதியான வல்லுநர்கள் சான்றிதழ் வழங்கியிருந்தார்கள். ''ஐயோ, நான் உயிரோடுதான் இருக்கிறேன்'' என்று அந்த மனிதன் கத்தினான். பிரபலமானவராக விளங்கிய, பாரபட்சமின்றித் தீர்ப்பு அளிக்கக் கூடிய விஞ்ஞானியான ஒரு நீதிபதி அங்கு நின்று கொண்டிருப்பதைப் பார்த்த

*தும், தனக்கு உதவி செய்யும்படி அவரிடம் அவன் கெஞ்சினான்.*

*''சற்றுப் பொறுங்கள்'' என்று அந்த வல்லுநர் கூறினார். பிறகு, அங்கு நின்று கொண்டிருந்தவர் களை அவர் எண்ணினார். ''இறந்து விட்டதாகச் சொல்லப்படும் இந்த மனிதன், தான் உயிரோடு இருப்பதாகக் கூறுகிறான். உங்களில் ஐம்பது பேர் சொல்லக்கூடிய சாட்சியத்தை வைத்துத் தான், நான் தீர்ப்பளிக்க வேண்டும்.'' அவன் இறந்து விட்டான் என்று அவர்கள் சாட்சியம் கூறினார்கள். ''புதைத்து விடுங்கள்'' என்றார் வல்லுநர்.*

*அந்த மனிதன் புதைக்கப்பட்டான்.*

பிரபஞ்ச இருப்பு ஒரு பிரச்சினையா? அது, ஒரு வேளை பிரச்சினையாக இருந்தால், தத்துவவாதிகள் உதவலாம், வல்லுநர்கள் பயன்படுவார்கள். ஆனால், தத்துவவாதிகள் முழுமையாக, ஒட்டு மொத்தமாகத் தோல்வி அடைந்து விட்டார்கள். பல நூற்றாண்டு காலமாகச் சிந்தித்துக் கொண்டே இருக்கிறார்கள். அரைத்த மாவையே அரைத்துக் கொண்டிருப்பதால் எந்தப் பிரயோஜனமும் இல்லை. எந்தத் தீர்மானத்திற்கும் வர முடியவில்லை. எந்த உண்மையும் வெளிப்படவில்லை. அவர்களுடைய மனப்பாங்கில் அடிப்படையில் ஏதோ ஒரு தவறு இருக்கிறது.

அவர்களுடைய திறமைக் குறைவாக இருக்கிறது என்பதல்ல. அவர்களுடைய திறமை மிகச் சரியாகத்தான் இருக்கிறது. அவர்கள் முழுக்க முழுக்கத் தகுதியானவர்கள்தான். ஆனால், எப்படியோ பிரபஞ்ச இருப்பு என்பதை ஒரு பிரச்சினையாக பார்ப்பதில், அவர்கள் தவறு செய்கிறார்கள். அது தீர்க்கக்கூடிய விஷயமல்ல. அதில் வாழ

வேண்டும். அது ஒரு வேளை பிரச்சினையாக இருந்திருந் தால், அதனை நீண்ட காலத்திற்கு முன்னரே தீர்த்திருக்க முடியும். அது ஒரு பிரச்சினையே அல்ல. அதில் வாழ்ந் தாக வேண்டும். வாழ்க்கை என்பது ஒரு பிரச்சினையாகக் கருதக்கூடிய அளவுக்கு அது உன்னிலிருந்து வேறுபட்ட தல்ல. அது நீயேதான். யாரைத் தீர்வு காண்பது?

பிரபஞ்ச இருப்பு என்பது உன்னைவிட்டு வெளியே இருப்பதில்லை. அது உனக்குள்தான் இருக்கிறது. அது தள்ளியிருப்பதில்லை. உன்னுடைய அங்கமாக, உன் னுடைய உறுப்புகளுள் ஒன்றாக இருப்பது. ஓர் அலை கடலின் பிரச்சினையை எப்படித் தீர்க்க முடியும்? அலைக் குக் கடல் ஒரு பிரச்சினையாக இருக்க முடியாது. அது வாழக்கூடிய ஒன்று. கடல் என்பது பிரிந்திருப்பதில்லை. உண்மையைச் சொல்லப் போனால், கடல் என்பது அலை பாய்ந்து கொண்டிருப்பது. அலையும் கடலும் இரண்டு வெவ்வேறு விஷயங்கள் அல்ல. அலை ஒன்றுக்கொன்று ஐக்கியமானவை.

நீதான் பிரபஞ்ச இருப்பு. பிரபஞ்ச இருப்பு என்பது நீ தான். பிரச்சினையை யார் தீர்க்கப் போகிறார்கள்? எப்படித் தீர்க்கப் போகிறார்கள்? தத்துவம் என்பது ஒரு தவறான தொடக்கத்தில் ஆரம்பிக்கிறது. அங்கு பிரச்சினை உள்ளது என்பதை அது உறுதியாக நம்புகிறது. அந்த உறுதியை, அந்த எண்ணத்தை, அந்த அடிப்படையை அது சந்தேகப் படுவதில்லை. ஒருக்கால் அங்கு ஏதும் பிரச்சினை இல்லாமல் இருக்கலாம். ஒரு முறை நீ தவறாக ஆரம்பித்துவிட்டால், அது போய்க் கொண்டே இருக்கும். முதல் அடி தவறாக அமைந்து விடும்போது, கடைசியும் ஏற்கெனவே தவறி விடுகிறது. தவறான தொடக்கத்தி லிருந்து எவரும் சரியான முடிவிற்கு வரமுடியாது. அதனால்தான் தத்துவம் என்பது வெறும் கொள்கையிலும் கோட்பாடுகளிலும் போய்க் கொண்டிருக்கிறது. அதன்

முக்கியக் குறிக்கோள் என்பதே, எல்லாவற்றையும் பிரச்சினையாக்கி விடுவதுதான்.

ஒரு மாபெரும் தத்துவஞானி, ஒரு தத்துவப் பேராசிரியர் மனோவியாதியால் பாதிக்கப்பட்டார். அவருக்கு மனோதத்துவ சிகிச்சை அளிக்கப்பட்டது. அவர் சிறிது முன்னேற்றம் இருப்பதாக கருதினார். அதன்பின், மனோதத்துவ நிபுணர் கூறினார், ''இப்போது நீங்கள் மலைகளுக்குச் செல்வது உங்களுக்கு நன்மை யளிக்கும். இங்கு வெப்பமான சீதோஷ்ணம் இருக்கிறது. சீதோஷ்ண மாற்றம் உங்களுக்கு உதவும். அதனால் இமயமலைக்குச் செல்லுங்கள்.''

அந்தத் தத்துவவாதி அங்கு சென்றார். அந்த இடம் அவருக்கு மிகவும் நன்றாக இருந்தது. அந்த மலைகள் பனியால் சூழப்பட்டிருந்தன. அங்கு மிகுந்த நிசப்தம் நிலவியது. ஏதோ ஓர் அசாதாரண நிம்மதி அவருக்கு ஏற்பட்டது. ''நான் மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறேன், காரணம் என்ன?'' என்று கேட்டு, அவர் மனோதத்துவ நிபுணருக்குத் தந்தியடித்தார்.

தத்துவத்தின் பிரதான நோக்கமே, எந்த ஒரு விஷயத்திலும் பிரச்சினையை உருவாக்குவதுதான். நீ மகிழ்ச்சியாக இருந்தால், ''ஏன்?'' என்ற கேள்வி எழும். நீ கவலையாக இருந்தாலும், 'ஏன்?' என்ற கேள்வி எழும். அதுவும் கூட ஒரு பிரச்சினையாகிவிடும். எப்படித் தீர்ப்பது? நீ கவலையோடு இருந்தாலும் - ஏன்? நீ மறு படியும் மகிழ்ச்சியோடு இருந்தாலும் - ஏன்? மகிழ்ச் சியோ, கவலையோ, எதுவாக இருந்தாலும் தத்துவ வாதிக்கு முக்கியமல்ல. அதிலிருந்து ஒரு பிரச்சினையை அவன் உருவாக்கி விடுவான். பிரச்சினையை உருவாக்குப வரே தத்துவவாதி. முதலில் அவர் பிரச்சினையை உருவாக்குவார். அதன்பிறகு, அதைத் தீர்ப்பதற்கு முயற்சி மேற்கொள்வார்.

முதலில், பிரச்சினை என்பது பொய். அது அங்கு இருப்பதே இல்லை. அங்கு மகிழ்ச்சி இருக்கிறது. அதனைச் சுற்றி எந்தக் கேள்விக் குறியும் இல்லை. தத்துவவாதிதான் கேள்விக் குறியைச் சேர்க்கிறார். மகிழ்ச்சி என்பது தானாக ஏற்படுகிறது. அங்கு ஏன் என்ற கேள்விக்கு இடமில்லை. பிரபஞ்ச இருப்பு தானாக ஏற்படுவது. அங்கு ஏன் என்ற கேள்விக்கு இடமில்லை. மரங்கள் இருக்கின்றன, பூக்கள் இருக்கின்றன, பறவைகள் பாடுகின்றன, வானத்தில் மேகக் கூட்டங்கள் மிதக்கின்றன. இதற்கெல்லாம் எந்தக் காரணமும் இல்லை. ஏன் என்ற கேள்வி தத்துவவாதியால் சேர்க்கப்படுகிறது. ஏன் என்ற கேள்வி சேர்க்கப்பட்ட பிறகு, கேள்விக் குறியும் அங்கு வருகிறது. அவர்தான் அதைத் தீர்க்க வேண்டும். இல்லாத ஒரு பிரச்சினையை உன்னால் எப்படித் தீர்க்க முடியும்? நீ என்ன செய்தாலும் மேலும் மேலும் பிரச்சினைகளைத் தான் நீ உருவாக்குவாய். நீ ஒரு விடையைக் கண்டு பிடிப்பாய். அது, பிரச்சினையைத் தீர்த்துவிடும் என்று நீ கருதுவாய். அந்த விடை உடனடியாக மேலும் பல கேள்விகளை உருவாக்குகிறது.

எனவே, தத்துவம் என்பது வெறுமனே கேள்விகளின் தேடலாகவும், காரணங்களின் தேடலாகவும் தான் இருக்கிறது. ஒரே ஒரு விடையைக் கூட, அது இதுவரை தந்ததில்லை. தத்துவவாதிகள் இத்தனை காலமாக, அரைத்த மாவையே அரைத்துக் கொண்டிருக்கிறார்கள். அதிலிருந்து எதுவும் வருவதில்லை. அதற்கு முதல் காரணம், உள்ளே எதுவும் இல்லை. ஏன் என்பது வெறுமையாக இருக்கிறது. தத்துவம் என்பது மனித குலத்தின் உச்சகட்ட அபத்தம்.

பிரபஞ்ச இருப்பு என்பது, தீர்ப்பதற்கு ஒரு பிரச்சினையே அல்ல. அது ஒரு மர்மம். மர்மத்துக்கும் பிரச்சினைக்கும் உள்ள வித்தியாசத்தை நீ தெளிவாகப் புரிந்து

கொள்ள வேண்டும். ஒரு பிரச்சினை என்பது, மனதினால் உருவாக்கப்படுவது. மர்மம் என்பது ஏற்கெனவே இருப்பது. அது மனதினால் உருவாக்கப்பட்டதல்ல. ஒரு பிரச்சினை என்பது, வியாதியைப் போல ஓர் அசிங்கத்தை உள்ளடக்கியது. மர்மம் என்பது அழகானது. பிரச்சினையினால் உடனடியாக சண்டை ஏற்படுகிறது. அதை நீ தீர்க்க வேண்டும். தவறாக இருக்கும் ஒரு விஷயத்தை நீ சரிப்படுத்த வேண்டியதிருக்கும். ஏதோ ஒன்று குறைகிறது. அதை நீ நிரப்ப வேண்டும். ஆனால், மர்மத்தைப் பொறுத்தவரை இதுபோன்ற எந்தக் கேள்வியும் இல்லை.

இரவில் நிலவு வருகிறது. அது பிரச்சினையல்ல, அது ஒரு மர்மம். நீ அதனோடு வாழ வேண்டியவனாக இருக்கிறாய். நீ அதனோடு ஆட வேண்டும், நீ அதனோடு பாட வேண்டும், அல்லது அதனோடு நீ வெறுமனே மௌனமாக இருக்க வேண்டும். மர்மமான சில விஷயங்கள் உன்னைச் சூழ்ந்துள்ளன.

ஒரு தத்துவவாதி மர்மத்தின் மொழியை முற்றிலுமாக மறந்துவிட்டார். மர்மம் என்பது இயற்கை. பிரச்சினை என்பது மனிதனாய் உருவாக்கப்பட்டது. இந்தப் பூமியில் மனிதன் இல்லையென்றாலும், மர்மம் என்பது இருக்கும். ஆனால், பிரச்சினைகள் எதுவும் இருக்காது. காக்கைகள் கரையும். ஆனால், ஏன் என்று அவை கேட்காது. குயில்கள் கூவிக் கொண்டே இருக்கும். ஆனால், எவரும் ஏனென்று கேட்க மாட்டார்கள். எப்போதும் போல மரங்கள் பூத்துக் குலுங்கும். ஆனால், அதன் அடியில் அமர்ந்து, எவரும் வேதாந்தம் பேச மாட்டார்கள். வேதாந்தத்தைப் பற்றி வாழ்க்கைக்கு எந்த அக்கறையும் கிடையாது. அது ஒரு முட்டாள்தனமான முயற்சி - ஆனால், மிகவும் அகம்பாவம் கொண்டது. ஏனென்றால், நீ பிரச்சினையை உருவாக்குகிறாய். பிறகு, அதற்கான தீர்வைக் கண்டுபிடிக்க முயற்சிக்கிறாய். அதன்பிறகு

மேலும் பல பிரச்சினைகளை உருவாக்குகிறாய். உனக்கு ஏதோ மகத்தான சாதனை புரிவதாகத் தோன்றுகிறது.

நீ எதுவுமே செய்வதில்லை. வெறும் வெப்பக் காற்றைத் தவிர, அங்கு வேறு எதுவும் இல்லை. உன் மனதில், வெப்பக் காற்று, வெப்பக் காற்றின் குமிழ்கள், சிந்தனைகள் என்று நீ அழைப்பது மட்டுமே இருக்கிறது. வேறு எதுவும் அங்கு இல்லை. அலை பாயும் எண் ணங்கள், குழப்பங்கள் மட்டுமே உள்ளன. ஒரு தத்துவவாதி வாழ்க்கையை முற்றிலும் இழக்கிறான். முற்றிலும் சுய உணர்வின்றி வாழ்க்கையைக் கடக்கிறான். வாழ்வதற்கும் அன்பு செலுத்துவதற்கும் சில விஷயங்கள் இருக்கின்றன, இணைத்துக் கொள்வதற்குச் சில விஷயங்கள் இருக்கின்றன, மிதப்பதற்குச் சில விஷயங்கள் இருக்கின்றன, நடனமாடுவதற்குச் சில விஷயங்கள் இருக்கின்றன என்பது அவனுக்குத் தெரிவதில்லை. தத்துவவாதியின் மனம் மூடப்பட்டிருக்கிறது. வாழ்க்கை என்பது அவனுக்குள் ஊடுருவுவதில்லை.

இந்தத் தத்துவவாதிகள், வாழ்க்கையைப் பற்றிய விஷயத்தில், மகத்தான வல்லமை பெற்றிருக்கிறார்கள். ஏனென்றால், அவர்களுக்குப் பேச்சுத்திறன் இருக்கிறது. அவர்கள் ஸ்பஷ்டமாகப் பேசுவார்கள். இல்லாத பிரச் சினைகளை அவர்கள் உருவாக்கி, அதற்கான விடைகளை அவர்கள் சொல்லிக் கொண்டே இருப்பார்கள். அவர்களுடைய தேவைகளை சுயமாகப் பூர்த்தி செய்து கொள்வார்கள். அவர்களுக்கு யாரும் தேவையில்லை. அவர்கள், பிரச்சினைகளை உருவாக்கி, அதன்பின் தீர்வையும் உருவாக்குவார்கள். அவர்கள் கேள்வி மேல் கேள்விகளை உருவாக்கிக் கொண்டே போவார்கள். தங்களுக்கு எல்லாம் தெரியும் என்ற ஒரு மாயையை, அவர்கள் தங்களைச் சுற்றி உருவாக்கிக் கொள்வார்கள்.

தத்துவம் போன்ற ஒரு வார்த்தையை இந்திய மொழி எதிலும் காண முடியாது. கிரேக்கத்தில் தத்துவம் என்ற வார்த்தைக்கு அர்த்தம், அறிவின் மீது காதல் என்பது. இதைப் போன்ற வார்த்தை நம்மிடம் இல்லை. நம்மிடம் உள்ள வார்த்தை முற்றிலும் வித்தியாசமானது. 'தர்ஷன்' என்பதே அது. பார்ப்பதற்கான திறமை என்பதே அதன் அர்த்தம். அறிவின் மீது காதல் என்பதல்ல. உணர்தலின் மீது காதல் என்பது. மேலும் மேலும் அறிவின் மீது கொள்ளும் காதல் என்பதல்ல. ஒரு மாபெரும் தெளிவான காட்சியை நோக்கியது அது.

அதனால்தான், அறிந்தவர்களைத் தீர்க்கதரிசி என்று அழைக்கிறோம் - இவர்கள் தரிசித்தவர்கள். வாழ்க்கை என்பது வாழ்வதற்காகவும், தரிசிப்பதற்காகவும் தான். சிந்திப்பதற்காக அல்ல. தத்துவம் என்பது வல்லுநர்களை உருவாக்குகிறது. அந்த வல்லுநர்கள் உனக்குத் தவறான விடைகளையே சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். தத்துவத்தின் மொத்த முயற்சியும் தவறான முயற்சியே. இது, தெரிந்து கொள்ள வேண்டிய மனித முயற்சியில், மாபெரும் அமைப்புகளுள் ஒன்று.

விஞ்ஞானம் என்பது இரண்டாவது அமைப்பு. விஞ் ஞானம், வாழ்க்கை என்பது சவால் என்பதை மறுபடியும் உறுதியாகக் கூறுகிறது. தத்துவவாதியின் கண்ணோட்டத் தில், விஞ்ஞானம் இதைப் பிரச்சினையாகக் கருதுவ தில்லை. ஆனால், சவாலாகக் கருதுகிறது. ஒருவன் போரிட்டே ஆக வேண்டும். அதனால்தான், விஞ்ஞானிகள் இயற்கையை வெற்றி கொள்ளும் முறையிலேயே செயல்படுகின்றனர். அது ஓர் எதிரி என்பது போல். ஆனால், உனக்கு சவால் விடும் எதிரியை நீ வெற்றி கொண்டாக வேண்டும். விஞ்ஞானிகள் போர் வீரர்களாக மாறுகிறார்கள். இயற்கையை எதிர்த்துப் போரிடுகிறார்கள். ஆனால், ஆரம்பத்திலேயே வெறுப்பு

இருக்கும் போது, உன்னால் எப்படி வாழ முடியும்? விஞ்ஞானம் என்பது வெறுப்பு, விரோதம், பயம் ஆகியவற்றின் அடிப்படையில் அமைந்திருக்கிறது. வாழ்க்கை என்பது உன்னைச் சூழ்ந்திருக்கும் எதிரி என்று நீ நினைக்கிறாய். ஒரு தாயாக இல்லாமல், பிரியமாக இல்லாமல், உன்னைப் பற்றி சட்டை செய்யாமல், ஆனால், உன்னைக் கொல்வதற்கும் அழிப்பதற்கும் தயாராக வாழ்க்கை இருப்பதாக, விஞ்ஞானம் கருதுகிறது. விஞ்ஞானத்திற்கு விரோத மனப்பாங்கு உள்ளதால், அது தொடர்ந்து எதிர்த்துக் கொண்டே இருக்கிறது. நீ சண்டை போட்டால், நீ மறுபடியும் இழந்து விடுவாய்.

தத்துவம் தத்துவார்த்தத்தில் தவறி விடுகிறது. விஞ்ஞானம் போரிடுவதால் தவறி விடுகிறது. தொடக்கத்திலேயே உன் மொத்த மனப்பாங்கும் விரோதத்தின் அடிப்படையில் அமைந்திருந்தால் உன்னால் எப்படி வாழ முடியும்?

விஞ்ஞானி என்பவன் பாலைவன வாழ்க்கை வாழ்பவன். அவனுக்கு நோபல் பரிசு கிடைக்கக்கூடும். ஆனால், வாழ்க்கை அவனுக்குப் பரிசளிக்காது. வாழ்க்கை அவன் அருகில் நெருங்காது. வாழ்க்கையோடு உள்ள நெருக்கத்தை அவன் அனுமதிக்க மாட்டான். அவன் எப்போதும் வெற்றி கொள்வதற்குரிய வழிகளைத் தேடுவதிலேயே இருப்பான். விஞ்ஞானத்தின் அமைப்பு ஆக்கிரமிக்கக் கூடியது, மூர்க்கத்தனமானது. அது இயற்கைக்கு எதிரான ஒரு பலாத்காரம்.

ஆனால், விஞ்ஞானிகளுக்கு, இங்கேயும் அங்கேயும் சில உண்மைகள் கிடைக்கக்கூடும். ஒரு திருடனைப் போல அவர்கள் சிலவற்றை வெடுக்கெனப் பிடுங்கக் கூடும். அது சாத்தியம். நீ திருடலாம். வாழ்க்கையின் சில உண்மைகளைக் கொள்ளையடிக்கலாம். வாழ்க்கை,

அந்தச் சில உண்மைகளை, சற்றும் விருப்பம் இல்லாமல் உனக்குத் தரும். அது எப்படியென்றால், ஒரு பேரரசரின் கிரீடத்தை நீ எடுத்துக் கொள்வதால், உன்னால் ஒரு பேரரசராக முடியாது. ஒரு பிச்சைக்காரனாகவோ, அல்லது ஒரு கொள்ளைக்காரனாகவோதான், உன்னால் இருக்க முடியும். ஆனால் வாழ்க்கை, பேரரசர் என்று உன்னை முடிசூட்ட எப்போதும் தயாராக இருக்கும்.

சண்டைக்கு அவசியமே இல்லை. ஏனென்றால், வாழ்க்கை என்பது தாயைப் போன்றது. நீ அவளிடத்தி லிருந்துதான் வந்திருக்கிறாய். பிரபஞ்ச இருப்பின் மூலமாகத்தான் நீ பிறந்தாய். பிரபஞ்ச இருப்பு உன்னைக் கருப்பையில் சுமந்தது. அப்படி இருக்கும் போது, பிரபஞ்ச இருப்பு உனக்கு எப்படிப் பகைவனாக இருக்கும்? அது உனக்குப் பிறப்பைக் கொடுத்திருக்கிறது. அது உன்னைப் பாதுகாத்துக் கொண்டிருந்தது. அது இப்போதும் உன்னைப் பாதுகாத்துக் கொண்டிருக்கிறது. அதிலிருந்து வெளியே வந்த நீ, மீண்டும் அதனுள்ளேயே கலந்து விடுகிறாய். நீ அதன் அங்கம். இயற்கையே உன் கையை உயர்த்துகிறது. கண்கள், காதுகள், உன்னுடைய எல்லா இருத்தலின் மூலமும், இயற்கை பிரக்ஞையின் ஒரு குறிப்பிட்ட உயரத்தை அடைய முயற்சிக்கிறது. நீ எதிரி அல்ல, நீ அதன் அன்புக்குரிய மகன்.

இயேசு தம்மைப் பற்றிச் சொல்வது இந்த அர்த்தத்தில் தான். ''நான் மகன், கடவுள் எனக்குத் தந்தை.'' அவ ருடைய கூற்றை யூதர்கள் புரிந்து கொள்ளவில்லை. அவர் கூறியது இதுதான். வர்ழ்க்கை என்பது குடும்பம். பிரபஞ்ச இருப்பு என்பது விரோதி அல்ல. அது தாயாகவும், தந்தையாகவும் விளங்குவது. நீ மகனாக இருப்பவன். அன்பு செலுத்தப்படுபவன், போஷிக்கப்படுபவன். உன்னிலிருந்து சில மகத்தான முக்கியத்துவம் வெளிவர வேண்டும். நீ சண்டை போடாதே. காரணம், உன் நண்ப

னுடன் நீ சண்டை போடத் தொடங்கினால், தேவையற்ற சில முட்டுக்கட்டைகளை உனக்கு நீயே உருவாக்கிக் கொள்கிறாய்.

சண்டையிடும் மனப்பாங்கை உருவாக்கியது விஞ்ஞானம். அதனால்தான், விஞ்ஞானம் மாபெரும் அழிவுச் சக்தியாக விளங்குகிறது. தத்துவவாதிகள் தோல்வி அடைந்தாலும், அவர்கள் யாருக்கும் எந்தத் தீங்கும் செய்ததில்லை. தீங்கு செய்ய முடியாத அளவுக்கு அவர்கள் படுதோல்வி அடைந்தவர்கள். விஞ்ஞானம் வெற்றி அடைந்திருக்கிறது. மேலும், விஞ்ஞானம் வாழ்க்கையை முற்றிலும் முடமாக்கி விட்டது.

இப்போது, விஞ்ஞானம் நன்கு வளர்ந்திருக்கிற எல்லா நாடுகளிலும் ஒருவிதப் பயமும் வளர்ந்திருக்கிறது. ஆறுகளும் குளங்களும் அழிந்து கொண்டிருக்கின்றன. மரங்கள் அழிந்து கொண்டிருக்கின்றன. பூமி கூட மரணப் படுக்கையில் கிடக்கிறது. ஒட்டு மொத்தச் சூழ்நிலையும் விஷமாகி விட்டது. இதைத் தடுப்பதற்கு எந்தச் சாத்தியக் கூறுகளும் இல்லை என்பதை உணர்ந்தவர்களிடம் ஒரு பீதி ஏற்பட்டிருக்கிறது. காரணம், இதை யாரால் தடுக்க முடியும்? இதற்குக் காரணமான விஞ்ஞானிகளேகூட, இதற்குத் தீர்வு காண முடியாமல் கையைப் பிசைந்து கொண்டிருக்கிறார்கள். அவர்கள் பூதத்தை விடுவித்து விட்டார்கள். ஆனால், மறுபடியும் அதை பாட்டிலில் அடைக்க வழி தெரியாமல் விழித்துக் கொண்டிருக்கிறார்கள். மேலும் அரசியல்வாதிகள் பூதத்தைப் பாட்டிலுக்குள் மீண்டும் அடைக்க விஞ்ஞானிகளை அனுமதிக்க மாட்டார்கள்.

இரண்டு விதமான பைத்தியக்காரர்கள் ஒன்றாகச் சேர்ந்தார்கள்: அரசியல்வாதிகளும் விஞ்ஞானிகளும். விஞ்ஞானிகள் ரகசியங்களைக் கொடுத்துக் கொண்டே இருந்தார்கள். அரசியல்வாதிகள் அந்த ரகசியங்களை

ஹிரோஷிமாவிலும், நாகசாகியிலும் அன்றாட வாழ்க்கையில் பயன்படுத்திக் கொண்டே இருந்தார்கள். மொத்த இயற்கையையும், தொழில் நுட்பம் முற்றிலுமாகச் சிதைந்து கொண்டு வருகிறது. பல பொருள்கள் மறைந்து கொண்டிருக்கின்றன. பிரபஞ்ச இருப்பு என்பது முரண்பாடற்ற பூரணம் என்பதால், அதன் ஒரு பாகத்தை நீ அழித்தால், மொத்தமும் பாதிக்கப்படுகிறது. இறுதியாக ஒரு நாள், மொத்த அமைப்பும் அழிந்து விடுகிறது. இப்படித்தான் இது நிகழ்கிறது.

விஞ்ஞானம் என்பது, இயற்கையின் முதுகில் குத்தப்படும் பிச்சுவா கத்தியைப் போன்றது. தத்துவவாதிகள் அதற்குப் பெரிதாக எதுவும் கெடுதல் செய்வதில்லை - அவர்களால் முடியாது. ஏனென்றால், அவர்கள் முற்றிலும் தோல்வியாளர்கள். ஆனால், விஞ்ஞானம் மிகுந்த கெடுதலைச் செய்துள்ளது. இப்போது, மாபெரும் எதிரி என்பது விஞ்ஞானம்தான். சரி, அது எதற்காக இவ்வளவு கெடுதலைச் செய்கிறது? ஏனென்றால், ஆரம்பம் முதலே அடிப்படையில் அது ஒரு விரோதத்தை வளர்த்துக் கொண்டுள்ளது, அன்பு இல்லை. வாழ்க்கையோடு விரோதம் கொண்டுள்ளது. நட்புறவு இல்லை. இங்கே, நீ ஓர் ஏற்றுக் கொள்ளப்படாத விருந்தாளி என்னும் எண்ணத்தை மனிதர்களிடம் விஞ்ஞானம் உருவாக்கிவிட்டது. மேலும், நீ வீட்டில் இருக்கவில்லை. நீ போரிட்டாக வேண்டும். டார்வின் முதல் ஐன்ஸ்டீன் வரை, 'வலிமையானவர்கள் மட்டுமே உயிர் வாழ முடியும்' என்ற எண்ணத்தையே போதித்து வந்திருக்கிறார்கள். வாழ்க்கை என்பது வெறுமனே ஒரு போராட்டம் என்ற எண்ணத்தை உருவாக்கி விட்டார்கள். உண்மை இதற்கு முற்றிலும் மாறானது. வாழ்க்கை என்பது பரந்த ஒரு நட்புறவு.

இளவரசர் ரோபோக்கின் (KROPOTKIN) சார்லஸ் டார்வின்னைவிட (CHARLES DARWIN) உண்மையின்

அருகில் இருக்கிறார். இளவரசர் ரோபோக்கின் கூறுகிறார் - அவர் ஒரு மதவாதி, நிஜமான மதவாதி - அவர் கூறுகிறார்: ''நட்புறவுதான் வாழ்க்கையின் அடித்தளம், போராட்டம் அல்ல. வலிமையானவர்கள்தான் உயிர் வாழ முடியுமா? என்பது கேள்வியல்ல. வலிமையானவர்தான் வாழ முடியும் என்பது கேள்வியாக இருந்தால், அது சரியாகவும் இருக்கக்கூடும். வலிமையானவர்தான் வாழ முடியும் என்பது கேள்வியே இல்லை. மிகவும் எளிமையான பொருள்கள்கூட வாழ்கின்றன. பூக்களைப் பாருங்கள். அவை அடால்ஃப் ஹிட்லர்கள் இல்லையே. இருந்தாலும் அவை வாழ்வதில்லையா? பாடிக்கொண்டு இருக்கும் இந்த சிறிய பறவைகளைப் பாருங்கள். அவை செங்கிஸ்கான்களோ அலெக்சாண்டர்களோ இல்லையே, அவை வாழவில்லையா? வாழ்க்கை என்பது ஓர் ஆழமான நட்புறவாக இருக்க வேண்டும் - அது அப் படித்தான் இருக்கிறது. அனைத்தும் ஒத்துழைக்கின்றன. இந்தப் பேரண்டம் முழுவதும் பரோபகாரம் இருக்கிறது.

பாருங்கள்: .பூமி மரத்தைப் போஷித்துக் கொண்டே இருக்கிறது. சூரியன் மரத்தைப் போஷித்துக் கொண்டே இருக்கிறது. காற்று மரத்தைப் போஷித்துக் கொண்டே இருக்கிறது. அதன் பிறகு பழம் பிறக்கிறது. அந்தப் பழம் உன்னைப் போஷிக்கிறது. அது உன் உடலாக மாறுகிறது. அது உன் இரத்தத்தில் கலக்கிறது. அது உனக்கு எலும்புகளாக மாறுகிறது. அது உன் இதயமாக மாறுகிறது. அது உன் மூளையாக மாறுகிறது. அது உன் மூளையின் சாரமாக இருக்கிறது. பிறகு ஒரு நாள் நீ இறக்கிறாய். பூச்சிகள் உன்னை உண்ணத் தொடங்குகின்றன. பிறகு பூச்சிகள் இறக்கின்றன. அவ்வ பூமியால் மறுபடியும் இழுத்துக் கொள்ளப்படுகின்றன. மரங்கள் பூமியை உண்ணத் தொடங்குகின்றன. மறுபடியும் பழங்கள் வருகின்றன. உன்னுடைய பேரக் குழந்தைகள் அந்தப் பழங்கள் மூலமாக உன்னை உண்ணத் தொடங்குகின்றன.

அனைத்தும் ஒன்றுக்கொன்று தொடர்பு கொண்டதாக இருக்கின்றன. உன்னுடைய தாத்தாவையும் பாட்டியையும் நீ சாப்பிட்டுக் கொண்டிருந்தாய். அவர்கள் மறுபடியும் எடுத்துக் கொள்ளப்படுகிறார்கள். நீயும் எடுத்துக் கொள்ளப்படுவாய்.

அலை வரும், போகும். ஆனால், கடல் அப்படியே தான் இருக்கும். ஒவ்வொரு அலையும் மற்றோர் அலையோடு தொடர்பு கொண்டிருக்கிறது. கடந்த காலமும் எதிர்காலமும் - நீ மொத்தக் கடந்த காலத்துடனும் தொடர்பு கொண்டுள்ளாய். நீ ஓர் இணைப்பு, வரப் போகும் மொத்த எதிர்காலத்துடனும் உனக்குத் தொடர்பு இருக்கும். நீ சங்கிலியில் ஓர் இணைப்பாக இருக்கிறாய். சங்கிலியின் ஓர் இணைப்பு உடைந்தாலும், மொத்த சங்கிலியும் பாழாகிவிடும். இது ஒரு ஒத்துழைப்பு. எவரும் சுதந்திரமானவர்கள் இல்லை. அதே சமயத்தில் எவரும் சார்ந்திருப்பதும் இல்லை. ஏனென்றால், சார்ந்திருப்பதற்குக் கூட நீ தனிமைப் பட்டிருக்க வேண்டும். சுதந்திரமாக இருப்பதோ, அல்லது சார்ந்திருப்பதோ இங்குக் கேள்வி அல்ல. வாழ்க்கை என்பது ஒன்றுக் கொன்று சார்புடையது. சுதந்திரமானவராக எவரும் இல்லை. சார்ந்திருப்பவராகவும் எவரும் இல்லை. அனைவரும் ஒருவருக்கொருவர் சார்புடையவர்.

அதனால்தான், நான் கடவுள் தூதர்களைப் போலிகள் என்று அழைக்கிறேன். அவர்கள் சுதந்திரத்தைப் பற்றி மக்களிடம் போதிப்பவர்கள். அது ஒரு தவறான போக்கு. வாழ்க்கைக்கு உண்மையாக இருக்க முடியாது. எவரும் சுதந்திரமாக இருக்க முடியாது. நீ அதற்கு முயற்சித்தால், நீ ஒரு முட்டாள். நீ இமயமலைக்குச் சென்று, சுதந்திரமாக இருப்பதற்கு முயற்சிக்கலாம். உன்னால் அப்படி இருக்க முடியாது. ஏனென்றால், அங்கும்கூட சார்புடைய வாழ்க்கையில்தான் நீ அங்கம் வகிக்க முடியும்.

சந்நியாசிகள் பூரணமான சுதந்திரத்துடன் இருப்பதற்காகக் கடந்த பல நூற்றாண்டுகளாக முயற்சித்துக் கொண்டிருக்கிறார்கள். ஏனென்றால், சார்ந்திருப்பதால், ஒரு கட்டுக்குள் அடங்கிவிடக் கூடும் என்று அவர்கள் கருதுகிறார்கள். அதனால்தான் அவர்கள் மனைவியிடமிருந்து தப்பிக்கிறார்கள். குழந்தைகளிடமிருந்து தப்பிக்கிறார்கள். சமுதாயத்திலிருந்து தப்பிக்கிறார்கள். சரி, ஆக்ஸிஜனிலிருந்து தப்பித்து, உன்னால் எங்குச் செல்ல முடியும்? தண்ணீரிலிருந்து தப்பித்து நீ எங்குச் செல்வாய்? உணவிலிருந்து தப்பித்து நீ எங்குச் செல்வாய்? சூரியனிடமிருந்தும் நிலவிடமிருந்தும் தப்பித்து, நீ எங்குச் செல்வாய்? நீ எங்கே சென்றாலும் ஒன்றுக்கொன்று தொடர்புள்ள வாழ்க்கை முறையில்தான் நீ இருக்க முடியும்.

நீ சுதந்திரமானவனாக எப்போதும் இருக்க முடியாது. பூர்ணமான சுதந்திரம் சாத்தியமில்லை. அப்படி இருந்தால், நீ தனிமைப் பட்டுத்தான் இருக்க வேண்டும். நீ ஒரு தீவாகி விடுவாய் - ஆனால், தீவுகள் எங்கும் இல்லை. நீ கடலின் நடுவே பார்க்கும் தீவுகள் கூடத் தனியாக இருப்பதில்லை. அவைகூடக் கடலில் மறைந்த கண்டங்களின் பகுதிதான். தீவு என்பது எங்கும் இல்லை. எவரும் சுதந்திரமானவராக இருக்க முடியாது. அது ஒன்றுக்கொன்று சார்புடையது. அது ஓர் ஆழ்ந்த நட்புறவு.

விரோத மனப்பான்மையில் வளராதீர். அப்படி வளர்ந்தால், நீ உன் வாழ்க்கையை அழித்துக் கொள்கிறாய். உன்னுடைய மொத்த ஆற்றலும் அழிப்பதிலேயே செலவாகி விடும் - பிரபஞ்ச இருப்பு என்பது ஆக்கப்பூர்வமானது. அதை நீ கொண்டாடலாம். நீ ஆக்கப்பூர்வமாக இருந்தால் மட்டுமே, அதனுள் ஒன்றாக நீ ஆகலாம். விஞ்ஞானம் என்பது அழிவு சக்தியாக இருப்பது. அது தேவையில்லை. நமக்குத் தேவை முற்றிலும் வித்தியாசமான ஒரு விஞ்ஞானம். ரோபோக்கினை விட அதிகமா

கவும், டார்வினைவிடக் குறைவாகவும் அதன் அடிப்படை இருக்க வேண்டும். முற்றிலும் வித்தியாசமான ஒரு விஞ்ஞானம் தேவை. அது அன்பின் அடிப்படையில் இருக்க வேண்டும். வெறுப்பின் அடிப்படையில் இருக்கக் கூடாது. லாவோட்சூவை அடிப்படையாகக் கொண் டிருக்க வேண்டும், அரிஸ்டாட்டிலை அல்ல.

விஞ்ஞானம் என்பது முற்றிலும் சட்டபூர்வமாக இருக்க வேண்டிய அவசியமில்லை. அது, ஒரு சிறிதளவா வது நேசத்துடன் இருக்க வேண்டும். அது இயற்கையை எதிர்ப்பதாக இருக்கக்கூடாது. அதில் பலாத்காரம் இருக்கக் கூடாது. இயற்கையை அரவணைக்க வேண்டும். இயற்கையை மணமகளாகவும், நீ மணமகனாகவும் இருக்க வேண்டும். இயற்கையிடம் அன்போடு கேட்டால், அவள் தன் இரகசியங்களை வெளியிடுவாள். ஒரு காதலன், காதலியிடம் அன்போடு கேட்டால், தன்னிட முள்ள அத்தனை இரகசியங்களையும் காதலி சொல்லி விடுவாள். அவள் இதயத்தில் உள்ள அத்தனை விஷயங் களும் வெளியே வந்துவிடும்.

ஓர் ஆண் பெண்ணைக் கற்பழிக்கலாம். கற்பழிப்பும் உடலுறவும் மேலோட்டமாகப் பார்க்கும் போது, ஒன்று போலத் தோன்றலாம். ஆனால், அவை அப்படியல்ல. ஏனென்றால், நீ ஒரு பெண்ணைப் பலாத்காரம் செய்யும் போது, அவள் பின்வாங்குவாள். அவள் மூடிக் கொள் கிறாள். நீ உடலைத்தான் பலாத்காரம் செய்ய முடியுமே தவிர, ஆன்மாவை அல்ல. ஆன்மா கன்னியாகத்தான் இருக்கும். அது வெறுமனே பின்வாங்கும். ஆண் பெண்ணைக் கற்பழிக்கும்போது, அவனால் ஆன்மாவைத் தொட முடியாது. விஞ்ஞானத்திலும் இதுதான் ஏற்பட் டுள்ளது. அது இயற்கையைக் கற்பழித்து வருகிறது. அது காதலாக இருந்திருக்கலாம்.

விஞ்ஞானம் எல்லா விஷயங்களிலும் நிபுணத்துவம் பெற்றிருக்கிறது. நீ எதையாவது நிரூபிக்க விரும்பினால்

விஞ்ஞானத்தை மேற்கோள் காட்டி விடலாம், அது போதும். எவரும் கேள்வி கேட்க மாட்டார்கள். விஞ்ஞானம் சொல்லியிருக்கிறது என்றால், அது ஏற்றுக் கொள்ளப்பட்டு விடும். விஞ்ஞானம் என்பது மூட நம்பிக்கையின் மாதிரி. அந்தக் காலத்தில் வேதங்களில் கூறப்பட்டிருக்கிறது, அல்லது பைபிளில் சொல்லப்பட்டிருக்கிறது, அல்லது குரானில் எழுதப்பட்டிருக்கிறது என்று கூறினால் போதும். குரானில் இப்படித்தான் கூறப்பட்டிருக்கிறது என்று நீ கூறினால் முடிந்து விடும். அது சரியா, தவறா என்று ஒருவரும் கேள்வி எழுப்ப மாட்டார்கள். அது குரானிலோ, வேதங்களிலோ எழுதப் பட்டிருந்தால் அவை சரியாகத்தான் இருக்க வேண்டும். வேதங்களில் இருக்கிறது என்று நீ நிரூபித்து விட்டால், அது போதும். இப்போது விஞ்ஞானிகள் கூறுகிறார்கள் என்று நீ நிரூபித்து விட்டால், அது போதும்.

யார் அந்த விஞ்ஞானிகள்? அவர்கள் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள்? அவர்கள் வல்லுநர்கள். சில உண்மைகளை அவர்கள் சேகரித்திருக்கிறார்கள். ஆனால், வாழ்க்கை என்பது என்ன? என்று அவர்களுக்குத் தெரியாது. ஏனென்றால், ஆராய்ச்சியினாலோ, அல்லது சோதனைக்காக உடலை வெட்டுவதாலோ, வாழ்க்கையைத் தெரிந்து கொள்ள முடியாது.

நீ ஒரு பெண்ணைக் காதலித்தால், அவளுடைய உடம்பு அழகானதா, இல்லையா என்பதைத் தெரிந்து கொள்வதற்காக, நீ டாக்டரிடம் செல்வதில்லை. ஆனால், ஒரு டாக்டர் என்பவர், மற்றவர்களைவிட ஆழமாக, உடல்களைப் பற்றித் தெரிந்து வைத்திருப்பவர். அவர் உடல் பாகங்களைக் கூறு போடுபவர். ஆயிரக்கணக்கான உடல்களை அறுத்தவர். ஆனாலும், நீ டாக்டரிடம் செல்ல மாட்டாய். ஏனென்றால், அறுக்கப்பட்ட ஓர் உடலுக்கு உயிர் இருப்பதில்லை. ஆனால், உயிர் இருந்தால்தான் அழகு. ஒரு பொருளை ஆராய்ச்சி செய்து விட்டால், அது

இறந்து விடுகிறது. வாழ்க்கை என்பது பூரணமாக இருப்பது. அதை நீ அறுக்க முடியாது. அதன் அழகும் கவர்ச்சியும் உயிருடன் இருக்கும் போதுதான் தெரியும். உயிர் இருக்கும்போது, அது எப்படி இருக்கிறதோ, அந்த நிலையிலேயே நீ நேசிக்க வேண்டும். ஆனால், அதை வெட்டி, அடியாழத்தில் இருக்கும் பாகங்களை எல்லாம் பார்த்தால், அவை எப்படிச் செயலாற்றுகிறது என்றும், உள்ளே என்ன நிகழ்கிறது என்றும் நீ பார்த்தால், உடலின் மெக்கானிஸத்தை மட்டும் தான் உன்னால் தெரிந்து கொள்ள முடியும். ஆனால், அதன் ஆன்மாவை நீ தவறவிட்டு விடுவாய்.

ஆன்மா என்பது ஐக்கியத்தில் வாழ்வது - ஐக்கியம் தான் ஆன்மா. ஒன்று சேர்க்கப்பட்டிருக்கும் அனைத்துப் பாகங்களையும்விட ஆன்மா சிறந்தது. உடலின் அனைத் துப் பாகங்களையும் ஆன்மா சூழ்ந்திருக்கிறது. உண்மை என்னவென்றால், ஆன்மாதான் உடலின் எல்லாப் பாகங்களையும் ஒன்றிணைக்கிறது. ஆன்மா உடலை விட்டு நீங்கிவிட்டால் அழியத் தொடங்குகிறது. சில மணி நேரங்களில் அது முற்றிலுமாக இறந்துவிடுகிறது. சில நாள்கள் அந்த உடலை நீ அங்கேயே விட்டுவிட்டு பிறகு வந்து பார்த்தால் அது பூமியோடு ஒன்றாகி இருக்கும். யார் முழுமையை முழுமையாக பிடித்து வைத்திருப்பது? யார் எல்லாவற்றையும் சேர்த்து வைத்திருப்பது? முழுமையான ஒருங்கிணைப்பின் ஆதாரம் எது?

ஓர் ஆசை என்னுள் எழுகிறது - நான் தாகமாக உணர்கிறேன், உடனே என் கரம் தண்ணீரை நோக்கி செல்கிறது. எங்கிருந்து வந்தது இந்த ஐக்கியத் தன்மை? ஓர் ஆசை எழுகிறது ஆசை கைகளில் இல்லை, கைகள் ஒருபோதும் தாகமாக உணர்வதில்லை. என் தொண்டை வறள்கிறது. நான் தாகமாக உணர்கிறேன். இந்த தாகம் தொண்டையில் வந்தது, மூளையில் பதிவு செய்யப்படு

கிறது, ஆன்மா கவனிக்கிறது. கரம் ஒருபோதும் தாகத்தை உணர்வதில்லை, ஆனால் உடனடியாக, எந்த கட்டளையுமின்றி, எந்தத் தகவலுமின்றி தொண்டை தாகமாக உணர்ந்த உடன் மூளை உடனடியாக செயல்பட்டு - ஒரு விநாடிகூட தாமதமின்றி - கரத்தை தண்ணீரை நோக்கி செல்ல வைக்கிறது. கரம், தொண்டை, மூளை இவை ஒருங்கிணைந்து செயல்படுகின்றன.

எல்லாப் பகுதிகளையும் ஒருங்கிணைத்து வைத்திருக்கும் அந்த முழுமைதான் ஆன்மா. ஆன்மா பூரணமானது. ஓர் உடலை அறுப்பதால், நீ ஆன்மாவைத் தெரிந்து கொள்ள முடியாது. ஏனென்றால், நீ வெட்டத் தொடங்கும் கணமே, அது போய்விடுகிறது. ஐக்கியம் செயல்பட்டால் மட்டுமே அது இருக்கும்.

நீ விஞ்ஞானிகளிடம் சென்று, வாழ்க்கையைப் பற்றிக் கேட்டால், அவர்கள் பல விடைகளைக் கூறுவார்கள். ஆனால், அவர்கள் கூறும் விடைகள் அனைத்தும் இறப்பு தொடர்பாக இருக்குமே தவிர, வாழ்க்கை தொடர்பாக இருக்காது. ஏனென்றால், அவர்கள் போரிடுபவர்களாக, அழிப்பவர்களாக, வெட்டுபவர்களாக, ஆராய்ச்சி செய்பவர்களாக இருக்கிறார்கள். அவர்களுடைய இந்தச் செயல்பாடுகளினால், அவர்கள் வாழ்க்கையைத் தவற விட்டு விடுகிறார்கள். அதனோடு மோத, அவர்கள் தயாராக இல்லாததால்தான், அவர்கள் எப்போதும் ஆன்மா இல்லை என்று கூறுகிறார்கள். ஏனென்றால், ஆய்வுக் கூடத்தில் அவர்களால் ஆன்மாவைப் பார்க்க முடிவதில்லை. அவர்கள் பல உடல்களை அறுத்தாலும், அவர்களால் ஆன்மாவைப் பார்க்க முடிவதில்லை. காரணம், அவர்கள் அறுக்கத் தொடங்கியவுடன் ஆன்மா நீங்கி விடுகிறது. அவர்களுக்கு அதைப் பற்றி ஒன்றும் தெரியாததால், ஆன்மா இருப்பதை விஞ்ஞானிகள் தொடர்ந்து மறுத்து வருகிறார்கள். இதைப் போலவே,

கடவுள் இருப்பதையும் விஞ்ஞானிகள் தொடர்ந்து மறுத்து வருகிறார்கள். ஆனால், விஷயம் இதுவல்ல. கடவுள் இருக்கிறாரா, இல்லையா என்பதல்ல. ஏனென்றால், விஞ்ஞானத்தின் அடிப்படை அமைப்பு தடுக்கிறது. அதன் அடிப்படை அமைப்பு முட்டுக்கட்டையாக விளங்குகிறது.

அடுத்ததாக வருவது, கலை என்னும் மூன்றாவது அமைப்பு. தத்துவம், விஞ்ஞானம் மற்றும் கலை ஆகிய இந்த மூன்று அமைப்புகளும்தான் வல்லுநர்களை உரு வாக்குகின்றன. மனித மூளையின் செயல்பாடுகள், இந்த மூன்று பரிமாணங்களில்தான் இருக்கின்றன. தத்துவத்தில் கலைக்கு ஆர்வம் இருப்பதில்லை. வெட்டுவதில் கலைக்கு ஆர்வம் இருப்பதில்லை. அதனால்தான் மற்ற எதையும்விடக் கலை என்பது மதத்திற்கு நெருக்கமாக இருக்கிறது. நீ நினைத்துக் கொண்டிருப்பது போல அல்லாமல், தத்துவவாதிகள் மதத்தை விட்டு வெகுதூரம் தள்ளி இருக்கிறார்கள். விஞ்ஞானிகள்கூட சற்று நெருக்கமாக இருக்கிறார்கள். விரோத மனப்பாங்கை, நல்லுறவு மனப்பாங்காக மாற்ற முடியும். ஏனென்றால், வெறுப்பு என்பது காதலின் தலைகீழ்தான்.

ஓர் ஐன்ஸ்டீன், பெர்ட்ராண்டு ரஸ்ஸலைவிட எளிதாக, ஒரு மதவாதியாக மாறக்கூடும். காரணம், அவரிடம் வெறுப்பாவது இருக்கிறது. வாழ்க்கையை எதிர்த்துப் போரிடச் செய்கிறார்கள். போரிடுவது என்பது கூட வாழ்க்கைக்கான ஒரு வழிதான். போரிடுவது கூட உயிர்ப்பான தருணம்தான். ஒரு விஞ்ஞானி என்பவர் தத்துவங்களில் மட்டும் ஈடுபாடு கொள்வதில்லை. அவர் சோதனைச் செயல்பாடுகளைச் செய்பவர். தத்துவவாதி என்பவர், கண்களை மூடி அமர்ந்தபடி, பெண்ணைப் பற்றிக் கனவு காண்பவர். விஞ்ஞானி பெண்ணைக் கற்பழிப்பவர். ஒரு தத்துவவாதியைவிட, ஒரு விஞ்ஞானி யின் இந்தச் செயல் மேன்மையானது. காரணம், ஓர்

உண்மையான பெண்ணாவது அங்கு இருக்கிறாள். கற்பழிக்கும் மனிதனுக்கும், கற்பழிக்கப்பட்ட பெண்ணுக்கும் சரியான ஓர் உறவுமுறை இல்லாவிட்டாலும்கூட, ஏதோ ஒரு வகை உறவு முறை இருக்கிறது. எதிரியும்கூட, உன்னோடு ஒரு தொடர்பு வைத்திருக்கிறான்.

விஞ்ஞானிகள் மாறுவதற்கு வாய்ப்பு இருக்கிறது - பல விஞ்ஞானிகள் கொஞ்சம் கொஞ்சமாக, வயது ஆக ஆக, மேலும் புரிந்து கொண்டவர்களாய், மதத்தைப் பின்பற்றத் தொடங்குகிறார்கள். ஆனால், தத்துவவாதிகள் கடைசி வரை முட்டாள்தனமாகப் பேசியபடி, கடைசி வரை பிடிவாதமாக இருக்கிறார்கள். தங்கள் வாழ்க்கை முழுவதும் இயற்கையோடு மோதிக் கொண்டிருந்த, அதனை அழித்துக் கொண்டிருந்த விஞ்ஞானிகள் திடீரென விழித்தெழக்கூடும். அவர்களுடைய மொத்த மனப்பாங்கும் 180 டிகிரி கோணத்திற்குத் திரும்பக்கூடும். அதற்கு வாய்ப்பிருக்கிறது. எதிரி ஒரு நாள் நண்பனாகிறான். குறைந்த பட்சம் அவர்கள் இருவருக்கும் ஏதோ ஓர் உறவு இருக்கிறது. அந்த உறவு சுமுகமாக இல்லா விட்டாலும்கூட, ஏதோ ஓர் உறவாவது அவர்களுக்கிடையே இருக்கிறது. தத்துவத்தின் அமைப்பு முறை, மதத்திலிருந்து வெகுதூரம் தள்ளி இருக்கிறது. தத்துவத்தை விடக் கூடுதலாக நெருங்கி இருப்பது, விஞ்ஞானம். கலை என்பது விஞ்ஞானத்தைவிடக் கூடுதலாக நெருங்கி இருப்பது.

கலை என்பது என்ன? இந்த உலகத்தில் கலை என்ன செய்து கொண்டிருக்கிறது? கலை என்பது ஒரு குழந்தையைப் போன்றது. வண்ணத்துப் பூச்சிகளின் பின்னால் ஓடும் குழந்தைகளைப் போல மகிழ்ச்சியோடு இருப்பது, கலை என்பது குழந்தைத்தனமான மனப்பாங்கு கொண்டது. அது, வாழ்க்கையை இன்னும் சற்று அழகானதாக மாற்ற முயற்சிக்கிறது. அது ஓர் உள்முக அலங்காரம். அது வாழ்க்கையை அலங்கரிக்கிறது. அது,

வாழ்க்கைக்குச் சிறப்பான கனவுகளை அளிக்கிறது. ஓவியம் மூலமாக, கவிதை மூலமாக, இசை மூலமாக அது அழகை அதிகரிக்கிறது. அது தற்காலிக சந்தோஷத்தையும், நீடித்து இருக்கப் போவது போன்று காட்சிதரும் மகிழ்ச்சியையும் தரவல்லது. அது வாழ்வதற்கான ஒரு முயற்சி. ஆனால், இப்போதும் அது மதமல்ல. அது வாழ்க்கையை எப்படி இருக்கிறதோ, அப்படியே ஏற்றுக் கொள்ளாது. அதை மேம்படுத்த முயற்சிக்கிறோம். அதை மேலும் அழகாக்க முயற்சிக்கிறோம். உப்பு சப்பில்லாத வாழ்க்கை என்பது, வாழ்வதற்குத் தகுதியானது அல்ல என்று அது கருதுகிறது. அது பிரபஞ்ச இருப்பை மேம்படுத்த முயற்சிக்கிறது. அது மதத்தின் அருகில் இருக்கும். காரணம், வாழ்வதற்கு அது முயற்சிக்கிறது. ஆனால், இருந்தாலும் அது மதமல்ல...

மதம் என்பது உப்பு சப்பற்ற இருப்பின் மேல் நிகழும் ஒரு பாய்ச்சல். மதம் பூரணமாக ஏற்றுக் கொள்கிறது. அது வாழ்க்கையை அலங்கரிக்க வேண்டிய அவசியம் இல்லை என்று சொல்கிறது. காரணம், வாழ்க்கை என்பது, ஏற்கெனவே ஓர் அழகான கவிதையாகத்தான் இருக்கிறது. எந்த ஷேக்ஸ்பியர்களும் அதை மேம்படுத்த முடியாது. எந்தக் காளிதாசர்களும் தேவைப்பட மாட்டார்கள். அது ஏற்கெனவே ஒரு மகத்தான கவிதையாகத் திகழ்கிறது. அதனை மேம்படுத்தும் முயற்சிகள் அனைத்தும் பலனற்றவை. இது, பாம்பை நீ காலால் மிதிப்பது போன்ற முட்டாள்தனம். பாம்பு ஒழுங்காகத்தான் இருக்கிறது. உன் கால்களால் அதனை மிதிப்பதற்கு அவசியமே இல்லை. நீ அதன்மீது கால்களை வைத்தால், உடனடியாகவோ அல்லது பிறகோ, சிலர் உன் கால்களில் செருப்பை மாட்டுவதற்கு முயற்சிப்பார்கள். பிறகு நீ பாம்பை கொன்று விடுவாய்.

கலை என்பது பாம்பின் மேல் கால்களை வைக்க முயற்சிக்கிறது. அதற்கு அவசியமில்லை. இப்போதிருக்

கும் வாழ்க்கையே அபாரமான அழகோடு விளங்குகிறது. எல்லையற்ற எழிலோடு காட்சியளிக்கிறது. அதை அனுபவிப்பதற்கு, அதில் எந்தக் குறைபாடுகளும் இல்லை. எந்த அளவுக்கு நீ அதை அலங்கரிக்கிறாயோ, அந்த அளவுக்கு அதில் பொய்மை ஏற்படுகிறது. அரிதாரம் பூசப்பட்ட ஒரு பெண்ணைப் போல, அது காட்சியளிக்கத் தொடங்குகிறது.

நான் ஓர் உபகதை கேள்விப் பட்டிருக்கிறேன்: பெண்கள் பவுடர், லிப்ஸ்டிக், அது இது என்று தங்கள் முகத்துக்கு அலங்காரம் செய்து கொள்வதை ஒரு சந்நியாசி கடுமையாக எதிர்த்து வந்தார். பெண்கள் அரிதாரம் பூசிக் கொள்வது, அவருக்குச் சற்றும் பிடிக்காத விஷயம். அவருக்கு அருகில் வசித்து வந்த இன்னொரு சந்நியாசி, பெண்கள் செய்யும் இந்த அலங்காரங்களை மிகவும் விரும்பினார். முதல் சந்நியாசியைப் பொறுத்தவரை, வாழ்க்கை எப்படி இருக்கிறதோ, அப்படியே ரசிப்பதுதான் அழகு, அதை மேம்படுத்த எந்தத் தேவையும் இல்லை, அதை உன்னால் மேம்படுத்த முடியாது, அதுதான் இறுதி என்று கருதுவர். இரண்டாவது சந்நியாசி, வாழ்க்கை என்பது அசிங்கமானது, அந்த அசிங்கம் மறைக்கப்பட வேண்டும் என்று கூறுபவர்.

ஒரு பெண், இந்த இரண்டு சந்நியாசிகளையும் சந்தித்ததால், மிகுந்த பிரச்சினைக்கும் குழப்பத்துக்கும் ஆளானாள். லாஜிக் மனிதரான ஒரு வல்லுநரிடம் அவள் இதைப் பற்றிக் கேட்டாள். ''ஒரு சந்நியாசி இப்படிச் சொல்கிறார், இன்னொரு சந்நியாசி அப்படிச் சொல்கிறார். எதைப் பின்பற்றுவது?'' சட்டரீதியாகப் பேசக் கூடிய அந்தத் தத்துவஞானி, இதைப் பற்றி ஆழ்ந்து யோசித்துவிட்டு, அந்தப் பெண்ணிடம் கூறினார். ''நீ ஒன்று செய். உன்னுடைய பாதி முகத்தில் மட்டும் அரிதாரத்தைப் பூசிக் கொள். அந்த இரண்டு சந்நியாசிகளும் மாறுபட்ட கருத்து கொண்டிருப்பதால், இது மட்டும்தான்

சட்டரீதியான பதிலாக அமையும். நீ நடுவில் இரு. நடுப்பாதையைப் பின்பற்று.''

இதுதான் நடந்தது. இது ஒவ்வொரு நாளும் உனக்கு நடக்கிறது. யாரோ ஒருவர் எதையோ சொல்கிறார். இன்னொருவர் அதை எதிர்க்கிறார். நீ என்ன செய்வாய்? சமரசம் செய்து கொள்வாய். உன்னுடைய பாதி முகத்தில் மட்டும் அரிதாரம் பூசிக்கொண்டு, அசிங்கமாகக் காட்சி யளிப்பாய்.

வாழ்க்கை என்பது எப்படி இருக்கிறதோ, அதுவே பூரணமாகத்தான் இருக்கிறது. அதனால்தான், நாம் வாழ்க்கையைக் கடவுள் என்கிறோம். கடவுள் என்றால் பூரணம். அதற்கு அப்பால் எதுவுமில்லை.

கலை என்பது நெருங்கி வருகிறது. ஏனென்றால், அது தத்துவங்களை பொருட்படுத்துவதில்லை. அது, எந்தச் சண்டையையும் பற்றிப் பொருட்படுத்துவதில்லை. வெறுமனே அலங்கரிப்பதற்கு மட்டுமே முயற்சிக்கிறது. அது சிறிது அழகுபடுத்த முயற்சிக்கிறது, நீ அதை ரசிக்க முடியும் என்கிறது. ஆனால், அங்கு அது தவறையும் இழைத்து விடுகிறது. ஏனென்றால், வாழ்க்கையை அதன் போக்கிலேயே ரசிக்க வேண்டும். உண்மை என்னவென் றால், வாழ்க்கையை அதன் போக்கில்தான் ரசிக்க முடியும்.

கலை என்பது குழந்தையைப் போன்றது. தத்துவம் முதுமைப் பருவத்தைச் சார்ந்தது. அது மனதில் தந்திரம் நிறைந்தது. அதனால்தான், தத்துவவாதிகள் எப்போதும் பழமையாக, கிழட்டுத்தனமாக உனக்குப் புலப்படு கிறார்கள். கலைஞர்கள் எப்போதும் குழந்தைத்தனமான வர்கள். கடற்கரையில் கிடக்கும் வண்ணக் கற்களைச் சேகரித்து விளையாடும் குழந்தைத்தனமான மனப் பான்மையைக் கொண்டவர்கள் அவர்கள்.

அது மீண்டும் மீண்டும் நடந்து கொண்டுதான் இருக் கிறது. கலை என்பது முற்றிலும், எந்தப் படாடோபமும்

இன்றிக் குழந்தைத்தனமாக மாறக்கூடிய காலகட்டங்கள் ஏற்பட்டுக் கொண்டுதான் இருக்கிறது. இது பிகாஸோ விடம் ஏற்பட்டது. அவருடைய சிறப்பம்சம் இதுதான்: அவர் ஒரு குழந்தையைப் போல ஓவியம் தீட்டியவர். அதில் மாபெரும் கலை இருந்தாலும், அவருடைய ஓவியம் குழந்தைத்தனமாகக் காட்சியளிக்கிறது. என்ன செய்கிறோம் என்ற எந்த எண்ணமும் இல்லாமல், வண்ணங்களைக் கொண்டு அவர் விளையாடியதைப் போன்று அந்தப் படங்கள் காட்சியளிக்கின்றன. ஏதோ வண்ணங்களைக் கொண்டு, விளையாட்டுத்தனமாகக் கிறுக்கியதைப் போன்று, அந்த ஓவியங்கள் தோற்றமளிக் கின்றன. ஆனால், ஒரு குழந்தை என்பது வளரக்கூடியது. ஏனென்றால், குழந்தைப் பருவம் என்பது ஆரம்பம் மட்டுமே, முடிவல்ல. ஒரு குழந்தை சரியான முறையில் வளர்ந்தால், அவன் ஆன்மிகத்தில் ஈடுபடுகிறான். ஓர் ஓவியன் சரியானபடி வளர்ந்தால், அவன் ஆன்மிகத்தில் ஈடுபாடு கொள்கிறான். அவன் வளர்ச்சி அடையாவிட் டால், அவன் ஓர் . ஓவியனாகவே இருந்து விடுகிறான்.

ஒரு தத்துவவாதி ஆன்மிகவாதியாக மாறுவதற்கு, ஒரு நீண்ட பயணம் தேவைப்படுகிறது. அது மிகமிகக் கடினம். கிட்டதட்ட சாத்தியமில்லாதது. அவனுடைய மொத்த இருத்தலையும் பணயம் வைக்க வேண்டிய திருக்கும். அவன் தன்னைத்தானே அழித்துக் கொள்ள வேண்டியிருக்கும். அதற்குப் பிறகுதான் அவனால், ஆன்மிகவாதியாக மாற முடியும். அதனால்தான், தத்துவ வாதிகள் ஒரு விளையாட்டை உருவாக்கினார்கள். அந்த விளையாட்டின் பெயர் வேத சாஸ்திரம். அது மதமல்ல. தாங்கள் ஆன்மிகவாதிகள் என்ற கற்பனையை உருவாக்கு வதற்காக, தத்துவவாதிகள் செய்த தந்திரம்தான் இது. அவர்கள் உண்மை, அழகு, அது இது என்று பலவற்றைச் சிந்தித்தார்கள். அதற்குப் பிறகு, கடவுளைப் பற்றி சிந்தித் தார்கள். வேத சாஸ்திரம் என்றால், தத்துவார்த்தம் பற்றிய

லாஜிக், கடவுளைப் பற்றிய லாஜிக் என்று அர்த்தம். அவர்கள் கடவுளைப் பற்றிய ஒரு சச்சரவைத் தோற்றுவித்து, பிறகு அதைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கினார்கள். வேத சாஸ்திரம் என்பது தவறான மதம். அது தத்துவ இயலின் ஒரு பாகம். அதற்கும் மதத்திற்கும் துளியும் தொடர்பு இல்லை.

விஞ்ஞானிகளைப் பொறுத்தவரை, ஆன்மிகவாதியாக மாறுவதற்கு 180 டிகிரி மாற்றம் தேவை. அது கடினமாக இருந்தாலும் அதற்குச் சாத்தியமிருக்கிறது. காரணம், விஞ்ஞானமும் மதமும், இரண்டும் இளமைப் பருவத்தைச் சார்ந்தவை. இதை நீ புரிந்து கொள்ள முயற்சி செய். கலை, குழந்தைப் பருவத்தைச் சார்ந்தது. தத்துவம், முதுமைப் பருவத்தைச் சார்ந்தது. விஞ்ஞானம் மற்றும் மதம் இரண்டும் இளைஞனைச் சார்ந்தது. இரண்டுக்கும் சக்தி தேவைப்படுகிறது. விஞ்ஞானம் என்பது பகை, மதம் என்பது அன்பு. விஞ்ஞானம் வாழ்க்கையை எதிர்த்துப் போராடுகிறது. மதம் அதன்மீது அன்பு செலுத்துகிறது.

ஒரு குழந்தை என்பது இளைஞனுக்கு அருகில் உள்ளது. ஏனென்றால், சிறிது காலத்தில் அவனும் வளரப் போகிறவன். தடுக்கப்படாதவரை, எந்தக் குழந்தையும் ஆன்மிகவாதியாகத்தான் வளர்வான். ஒவ்வொரு கலைஞனும் வளர்ச்சி அடையும்போது, ஒரு நாள் தெய்விகச் சந்நிதானத்திற்குள் தான் நுழைந்து விட்டதைக் கண்டு கொள்வான். ஒவ்வொரு கவிஞனும், ஒவ்வொரு இசைக் கலைஞனும், ஒவ்வொரு நடனக் கலைஞனும் வளர்ந்து கொண்டே இருந்தால், அந்த வளர்ச்சி இடையில் எங்கேனும் தடுக்கப்படாமல் இருந்தால், அவர்கள் ஆன்மிகவாதிகளாகி விடுவார்கள். ஒரு கலைஞனாக இருப்பதன் இயற்கையான விளைவு இதுதான்.

ஒரு விஞ்ஞானி என்பவன் 180 டிகிரி மாற்றத்தைப் பெற வேண்டும். அவனால், ஆன்மிகத்துக்குள் வளர

முடியாது. அவன் தன்னைத்தானே மாற்றிக் கொள்ள வேண்டும். அவன் தத்துவ இயலில் எளிதாக வளர முடியும். எடிங்க்டன், ஜேம்ஸ் ஜின்ஸ் போன்ற பல விஞ்ஞானிகள், தங்களுடைய முதுமைப் பருவத்தில் தத்துவவாதிகளாக மாறினார்கள். அது எளிதானது.

ஆன்மிகவாதியைப் பொறுத்தவரை, முதுமைப் பருவத் துக்குள் வளர்வது சாத்தியமில்லாதது. ஏனென்றால், ஒரு ஆன்மிகவாதி முதுமையை அடைவதில்லை. அவன் வளர வளர, இளமையாக, மேலும் இளமையாக ஆகிறான். அவன் முதுமையை அடைவதே இல்லை. ஆன்மிகவாதி முதுமைப் பருவத்தைச் சார்ந்திருக்க மாட்டான். ஏனென் றால், அவன் கணத்துக்குக் கணம் புதுப்பொலிபோடு வாழ்பவன் எப்போதும் இளமையாகவே இருப்பவன். தன்னுடைய இளமையை, வாழ்க்கை போஷிக்கின்ற காரணத்தால், அவன் வாழ்க்கையை மிகவும் ஆழமாக நேசிக்கிறான். முதியவர் என்ற வார்த்தைக்கு அர்த்தம் கூறுவதென்றால், வாழ்க்கையால் புறக்கணிக்கப்பட்ட ஒருவர் என்றும், குப்பைத் தொட்டியில் தூக்கி வீசப்படத் தயாராகிக் கொண்டிருப்பவர் என்றும் சொல்லலாம். அவன் பயன்படுத்தப்பட்டு விட்டவன். இப்போது அவன் தேவையில்லை.

ஓர் ஆன்மிகவாதி எப்போதும் முதுமையை அடைவ தில்லை. அதனால்தான், வயதான தோற்றத்தில் உள்ள புத்தர் சிலைகள் எங்கும் இருப்பதில்லை. அவர் 80 வருடம் வாழ்ந்தவர். ஆனால், ஒரு புத்தரின் சிலையையோ அல்லது மகாவீரர், கிருஷ்ணர், அல்லது இராமரின் சிலைகளில் உன்னால் முதுமையைப் பார்க்க முடியாது. நாம் ஒரு படத்தில்கூட, அவர்களுடைய உருவங்களை முது மைக் கோலத்தில் சித்திரித்ததே கிடையாது. ஏனென்றால், ஆன்மிகவாதிகள் எப்போதும் முதுமை அடைவதில்லை என்பது நமக்குத் தெரியும். உடலுக்கு வயதாகலாம்.

ஆனால் அது முக்கியமல்ல. பிரக்ஞை உணர்வு இளமை யோடும், ஒளியோடும் எப்போதும் மாறாமல் இருக்கும்.

ஓர் ஆன்மிகவாதி தத்துவவாதி ஆவதில்லை. அதற்குச் சாத்தியமில்லை. இயற்கையில் அப்படி நடக்கவே முடியாது. ஒரு தத்துவவாதி ஆன்மிகத்துக்கு மாறுவது என்பது கடினம். ஏனென்றால், அவன் பின்னோக்கிச் செல்ல வேண்டும். பின்னோக்கிச் செல்வது என்பது சாத்தியமாக இருந்தாலும், அது இயற்கைக்கு மாறானது. இது அரிதாக நடைபெறுவது, மிகவும் அரிதாக. ஒருவன் பின்னோக்கிச் செல்வது சாத்தியம்தான். பல விஷயங்கள் இதில் சம்பந்தப்பட்டிருக்கின்றன. முதலீடு அங்கு இருக்கிறது - மொத்த வாழ்க்கையும் தத்துவார்த்தத்தில் மூலதனம் செய்யப்பட்டிருக்கிறது - பின்னோக்கிச் செல்வதென்பது மிகவும் கடினம். தத்துவவாதிகள் தங்களுக்குள் சிறைப்பட்டிருக்கும் தங்கள் தத்துவங்களை இறுதிக்கட்டம் வரை மக்களிடம் வலியுறுத்துவதையே வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர்.

இவைதான் நான்குவிதமான வாழ்க்கை முறைகள். ஆன்மிகவாதி என்பவன், வல்லுநர் ஆகாமலேயே வாழ்க்கை நடத்துபவன். அவன் எப்போதும் வல்லுநர் ஆவதில்லை. ஏனென்றால், வாழ்க்கை மிகவும் விஸ்தார மானது - வல்லமையை நீ எப்படி எதிர்பார்க்க முடியும்? வாழ்க்கை என்பது எல்லையற்றது. தொடக்கமும் முடிவும் இல்லாதது. அதைப் பற்றிய அறிவு உனக்கு எப்படி உண்டாகும்? உண்மையைச் சொல்லப் போனால், நீ அதிகமாகத் தெரிந்து கொள்ளும்போது, உனக்குத் தெரியும் என்ற உணர்வு குறைந்து விடுகிறது. உன் அறிவு விருத்தியடைய அடைய, அறியாமையில் நீ இருப்பது போன்ற எண்ணமும் கூடவே உருவாகிறது. ஓர் ஆன்மிகவாதியின் அறிவு பூரணம் அடைந்தால், தனக்கு எதுவும் தெரியாது என்ற எண்ணம் அவருக்கு ஏற்படுகிறது. அவர் ஒரு வல்லுநர் அல்லர்.

நன்றாகப் புரிந்து கொள். ஆன்மிகத்தில் வல்லுநராக யாராவது உனக்குத் தென்பட்டால், அவர் ஆன்மிக மனிதர் அல்லர். அவன் வேத சாஸ்திரங்களின் போலியான ஒழுக்கங்களைச் சார்ந்தவராக இருக்க வேண்டும். சாஸ்திரம் என்பது போலியான நாணயம். அது மதம் என்ற போர்வையில் மக்களை ஏமாற்ற முயற்சிக்கிறது. கிறிஸ்துவ மதம் அழிந்ததற்கு காரணம், அதன் வேத வசனங்கள்தான். அளவுக்கு அதிகமான வேத வசனங்கள் அந்த மதத்தை மூச்சுத் திணற வைத்துவிட்டது.

யூதர்களால் இயேசுவைக் கொல்ல முடியவில்லை. அவர் சிலுவையில் அறையப்பட்டார். ஆனால், அவர் உயிர்த்தெழுந்தார். அதற்குப் பிறகு வேத விற்பன்னர்கள் வந்தார்கள் - கிறிஸ்துவ மதம் மிகப் பெரிய வேத விற்பன் னர்களை உருவாக்கியது. உண்மையைச் சொல்லப் போனால், கிறிஸ்துவ மதம் வேறு எதையும் செய்ய வில்லை. அந்த அழுகிப் போன வெற்று சாஸ்திரங்கள் தான், இயேசுவை முழுமையாக மூழ்கடித்து, அவரைக் கொலை செய்து விட்டது. இயேசு, கோல்கொத்தா மலையில் கொலை செய்யப்படவில்லை. அவரை வாடிகனிலேயே கொன்று விட்டார்கள்.

சாஸ்திரங்கள்தான் மதத்தை எப்போதும் அழிக் கின்றன. அது ஓர் அபாயகரமான, புற்று நோய் வளர்ச்சி. மதம் உன்னை வல்லுநர் ஆக்குவதில்லை. அது உன்னைப் பண்டிதன் ஆக்குவதில்லை. கண்களைக் கொண்டிருக்கும் மனிதன் ஒரு பண்டிதனாக முடியாது. காரணம், வாழ்க்கை என்பது தத்துவம் அல்ல. அது ஒரு வேத நூல் அல்ல. அது, கற்றுக் கொள்வதற்கு ஓர் அனுமானம் அல்ல. அது வாழ வேண்டிய மர்மம். அந்த மர்மத்துக்குள் நீ எவ்வளவு தூரம் உள்ளே செல்கிறாயோ, அந்த அளவுக்கு உன்னை நீ இழக்கிறாய்.

நீ இல்லாமல் வாழ்க்கை மட்டும் இருக்கக் கூடிய ஒரு நாள் வரும். நீ முழுமையாகக் கரைந்துவிடும் ஒரு நாள்

வரும். அலை கடலுள் மறைந்து விடும். இதுதான் முடிவு - இறுதி முடிவு. இந்தியாவில் சமாதி என்று அழைக் கிறோமே அது - ஞானமடைதல், சாம்போதி. எப்போது, நீ இல்லாமல் போகிறாயோ, அப்போது நீ புத்தர். இப்போது நீதிக் கதைக்கு வருவோம்:

*இறந்து விட்டதாக நம்பப்பட்ட ஒரு மனிதனின் ஈமச் சடங்குகள் நடைபெற்றுக் கொண்டிருந்தன. அந்த மனிதனுக்குத் திடீர் என உயிர் வந்துவிட்டது. அவன் கண் விழித்துச் சுற்றுமுற்றும் பார்த்தான். தன்னைச் சுற்றி நடைபெற்றுக் கொண்டிருந்த காட்சியைப் பார்த்ததும், அவனுக்கு மயக்கம் வந்துவிட்டது. அவனைச் சவப்பெட்டிக்குள் அடைத்து, அடக்கம் செய்வதற்காக கல்லறைக்கு எடுத்துச் சென்றார்கள்.*

*அவர்கள் கல்லறையை அடைந்ததும், அவனுக்குச் சுயநினைவு வந்துவிட்டது. அவன் சவப் பெட்டியின் மூடியைத் திறந்து கொண்டு, உதவிக்காகக் கத்தினான்.*

*துக்கம் அனுஷ்டிக்க வந்தவர்கள், அவன் மீண்டும் உயிர் பெற்றதை நம்ப மறுத்தனர். ஏனென்றால், அவன் இறந்து விட்டதாக, தகுதியான வல்லுநர்கள் சான்றிதழ் வழங்கியிருந்தார்கள்.*

அந்த மனிதன் இறந்து விட்டதாக, தகுதியான வல்லு நர்கள் அறிவித்துவிட்ட பிறகு, அவன் மீண்டும் உயிர் பெறுவது எவ்வாறு சாத்தியம்? மக்கள் தத்துவங்களை நம்புகிறார்களே தவிர, வாழ்க்கையை அல்ல. அந்த மனிதன், உயிருடன், உதவிக்காகக் கத்திக் கொண்டிருக் கிறான். ஆனால், ஒருவரும் வரவில்லை. காரணம், அவர் களுடைய கண்கள், தத்தவங்களாலும், அறிவினாலும், அவன் இறந்து விட்டதாகத் தகுதியான வல்லுநர்கள் கொடுத்த அத்தாட்சிப் பத்திரத்தாலும் மூடப்பட்டு விட்டன. அவர்கள் எவ்வாறு தவறு செய்வார்கள்? அது

ஒரு மாயையாகத்தான் இருந்திருக்க வேண்டும். நாம் மாயையில் இருக்கிறோமா, அல்லது இந்த மனிதன் மாயையில் இருக்கிறானா? இறந்து போன ஒருவன், தான் உயிரோடு இருப்பதாக நினைக்கிறான். எங்கோ, எதிலோ தவறு நேர்ந்திருக்கிறது. ஏனென்றால், வல்லுனர்கள் எவ்வாறு தவறு செய்வார்கள்?

சிரிக்காதீர்கள், உங்களுடைய செய்கைகளும் இப்படித் தான் இருக்கின்றன. வேதங்களில் கூறப்பட்டிருக்கும் சிலவற்றை, வாழ்க்கை மறுக்கும் போது, நீ வாழ்க்கையை மறந்துவிட்டு, வேதங்களை நம்புகிறாய். அது எவ்வாறு சாத்தியம் என்று நீ கேட்கிறாய். மாபெரும் வல்லுநர் களான வேத ரிஷிகள் இது அப்படி இல்லை என்று சொல்வார்கள். ''வாழ்க்கையில் சில விஷயங்கள் தவறாகி விடுகின்றன. வாழ்க்கை தவறாகலாம். ஆனால், வல்லு நர்கள் தவறு செய்வதில்லை'' என்று நீ சொல்கிறாய்.

இது பல தடவைகள் நடந்திருக்கின்றன. இது ஒவ்வொரு நாளும் உன்னிடமும் பிறரிடமும் நடந்து கொண்டுதான் இருக்கிறது.

ஜோதிட சாஸ்திர வல்லுநர்களும், வானசாஸ்திர வல்லுநர்களும், பூமி தட்டையானது அல்ல, உருண்டை யானது என்று முதன்முதலில் நிரூபித்தபோது, வாட்டிகன் போப் அதனை மறுத்தார். அவர் கூறினார், ''இது எவ்வாறு சாத்தியம்? ஏனென்றால், பூமி தட்டையானது என்று பைபிளில் குறிப்பிடப்பட்டிருக்கிறதே!''

பூமி உருண்டையானது என்பதற்கான எல்லா நிரூபணங்களையும் கிறிஸ்துவ வேதாந்திகள் அலட்சியப் படுத்தினார்கள். அவர்கள் கூறினார்கள், ''இது எவ்வாறு சாத்தியம்? பூமி தட்டையாகத்தான் இருக்க வேண்டும். பைபிள் எவ்வாறு தவறு செய்யும்? பிசாசு உங்கள் மனதில் புகுந்து, சில தந்திரங்களைச் செய்து வருகின்றன. அதனால் தான், இத்தகைய வாக்குவாதங்களில் நீ ஈடுபடுகிறாய்.

ஆனால், எங்களை உன்னால் ஏமாற்ற முடியாது. கடவுளின் வார்த்தையை நன்றாக அறிந்திருப்பவர்கள் நாங்கள்.

பிறகு, பூமியைச் சுற்றிச் சூரியன் நகருகிறது என்கிற நம்பிக்கையும் ஆதாரப்பூர்வமாக உடைத்தெறியப் பட்டது. இதற்கு மாறாக, சூரியனைச் சுற்றி பூமி சுழல்வது அனைத்து அத்தாட்சிகளுடன் நிரூபிக்கப்பட்டது. ஒரே ஒரு சிறு நிரூபணம்கூட, அதற்கு எதிராக இருக்கவில்லை. இதனால், போப்பின் அவைக்கு, கலிலியோ மீண்டும் வரவழைக்கப்பட்டார். தன்னுடைய கருத்தைத் திரும்பப் பெற்றுக் கொள்ளும்படி அவர் நிர்ப்பந்திக்கப்பட்டார்.

கலிலியோ அவையில் பணிவாகக் கூறினார். ''பூமியைச் சுற்றித்தான் சூரியன் நகர்ந்து கொண்டிருக்க வேண்டும் என்று நானும் நம்புகிறேன். ஏனென்றால், வேதங்களில் அப்படித்தான் சொல்லப்பட்டிருக்கிறது. பூமி சூரியனைச் சுற்றிச் சுழல்கிறது என்ற என்னுடைய அறிவிப்பிற்காக நான் மன்னிப்பு கேட்டுக் கொள்கிறேன்.'' அவர் போப்பிடம் தொடர்ந்து கூறினார். ''ஆண்டவரே, தாங்கள் விரும்பினால், வேதத்தில் சொல்லப்பட்டிருப்பது உண்மை என்பதை நிரூபிப்பதற்காக, என்னால், இன்னொரு நூலை எழுத முடியும். ஆனால், ஒரு விஷயத்தை இப்போது நான் சொல்லியாக வேண்டும். நான் அப்படியே நிரூபித்தாலும்கூட, சூரியனைச் சுற்றிப் பூமி சுழல்கிறது என்கிற உண்மையை ஒன்றும் செய்ய முடியாது. என்னுடைய வாதத்தைப் பொய்யாக்குவதற்கு நான் இன்னொரு நூலை எழுதினாலும், அதுவும் எந்தப் பலனையும் தரப் போவதில்லை. பிரச்சினை இதுவல்ல.''

கலிலியோ ஓர் அரிதான மனிதராக இருந்திருக்க வேண்டும். அவர் ஒரு கோழை என்று மக்கள் கருது கிறார்கள். ஆனால், நான் அப்படி நினைக்கவில்லை. அவர் மன்னிப்புக் கேட்டதால்தான், மக்கள் அவரைக் கோழை என்று நினைத்து விட்டார்கள். அவர் தியாகம் தான்

செய்திருக்கிறார். என்னைப் பொறுத்தவரை, தியாகிகள் எப்போதும் பைத்தியக்காரர்கள், முட்டாள்கள். 99 சதவிகிதம் முட்டாள்கள். கலீலியோ, மிகமிக அதிகமாக புரிந்து கொள்ளும் மனிதராக இருந்திருக்க வேண்டும்.

நீ முட்டாளுடன் வாழும்போது, அவனுடைய முட்டாள்தனத்தை நீ ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். இந்தச் சாதாரண விஷயத்துக்காக, நீ தேவையில்லாமல் எதற்காகத் தியாகிப் பட்டத்தைச் சூட்டிக் கொள்ள வேண்டும்? பூமி சூரியனைச் சுற்றினால் என்ன? சூரியன் பூமியைச் சுற்றினால் என்ன? இந்த வாக்குவாதத்தில் உன் னுடைய வாழ்க்கையை நீ ஏன் வீணடித்துக் கொள்கிறாய்? அவர் மிகவும் அரிதான புரிந்து கொள்ளும் மனிதராக இருந்திருக்க வேண்டும். அவர் ஒருபோதும் கோழையாக இருந்தவரல்லர். அவர் தம்முடைய கருத்தை மற்றவர்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று பிடிவாதம் செய்ய வில்லை. ஆனால், பிற்காலத்தில் அவருடைய கண்டு பிடிப்பு மகத்தானதாக அனைவராலும் போற்றப்பட்டது. கலிலியோ கூறுகிறார். ''ஆனால், என்னால் எதுவும் செய்ய முடியாது. என்னால் நிரூபிக்க முடியும், அவ்வளவு தான். ஆனால் யார் என்ன சொன்னாலும், சூரியனும் கண்டு கொள்ளப் போவதில்லை, பூமியும் பின்தொடரப் போவ தில்லை.''

கலீலியோ முதன்முதலில் டெலஸ்கோப்பை உருவாக் கியபோது, தன்னுடைய நண்பர்களை - பல்கலைக் கழகப் பேராசிரியர்களை - பாதிரியார்களை எல்லாம் அழைத்து வந்து, அதன் வழியாகப் பார்க்குமாறு வேண்டினார். வெறுங்கண்ணால் பார்க்க முடியாத நட்சத்திரங்கள் பலவற்றை, இந்த டெலஸ்கோப்பின் வழியாகப் பார்க்க முடியும். ஆனால், ஒருவரும் அந்த டெலஸ்கோப் வழி யாகப் பார்ப்பதற்குச் சம்மதிக்கவில்லை. ஏனென்றால், நட்சத்திரங்களின் எண்ணிக்கை பைபிளில் குறிப்பிடப் பட்டிருக்கிறது. கடவுள் ஓர் எண்ணிக்கையை உருவாக்கி

இருக்கும்போது, ஒரு கருவி காட்டக்கூடிய நட்சத்திரங்களின் எண்ணிக்கையை நாங்கள் எவ்வாறு ஏற்றுக் கொள்ள முடியும்? இந்தக் கருவியை, ஏதோ ஒரு பிசாசு தான் அனுப்பியிருக்க வேண்டும்.

அந்தக் கருவியின் வழியாகப் பார்ப்பதற்கு ஒருவரும் தயாராக இல்லை. அந்த அளவுக்கு அவர்களுக்குப் பயம் இருந்தது. காரணம், வேதத்தில் குறிப்பிடப்படாத நட்சத்திரங்கள் சிலவற்றை, ஒருவேளை பார்க்க நேர்ந்துவிட்டால், பிரச்சினை ஏற்பட்டு விடுமே. ஒரு சிலர் மட்டும், எப்படியோ தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, உள்ளே பார்த்துவிட்டு, சிரித்துக் கொண்டே, ''இந்தக் கலிலியோ, தந்திரத்தால் நட்சத்திரங்களைக் காட்டுகிறார்'' என்று கூறினார்கள்.

இத்தகைய மனப்பாங்குதான் இருந்து வந்துள்ளது. அதாவது, வேதங்களைப் பின்பற்றித்தான் வாழ்க்கை இருக்க வேண்டும். தத்துவார்த்தத்தைப் பின்பற்றித்தான் வாழ்க்கை இருக்க வேண்டும். இந்த மக்களைப் பார்த்து நீ சிரிக்காதே - நன்கு ஸ்தாபிக்கப்பட்ட பைத்தியக்கார சட்டதிட்டத்தை அவர்கள் பின்பற்றுகிறார்கள்.

*இவன் உயிரோடு இருப்பதற்குச் சாத்தியமில்லை. ஏனென்றால், தகுதியான வல்லுநர்கள் அவன் இறந்து விட்டதாக அத்தாட்சிப் பத்திரம் அளித்துள்ளனர்.*

இது நான் கேள்விப்பட்ட நிகழ்ச்சி: முல்லா நஸிருதீனின் மனைவியின் பெயர் வாக்காளர் பட்டியலில் விடுபட்டு விட்டது. தேர்தல் நடைபெற்ற போது, மிகுந்த ஆர்வத்துடன், முல்லாவின் மனைவி வாக்களிக்கச் சென்றாள். ஆனால், அவருடைய பெயர் பட்டியலில் இல்லை. உடனே நஸிருதீன் தன்னுடைய மனைவியை அழைத்துக் கொண்டு தேர்தல் ஆணையரிடம் சென்றார். அவருடைய பெயர் விடுபட்டதோடு அல்லாமல், அவள் இறந்து விட்டதாகவும் அங்கே கூறப்பட்டது. மனைவிக்

குக் கடுங்கோபம் ஏற்பட்டது. நஸிருதீன் இதைப் பெரிதாக எடுத்துக் கொள்ளாததால், அவளுடைய வெறி உச்சத்தை அடைந்தது. 'ஒரு பெண் உயிரோடிருக்கும் போது, அவள் இறந்துவிட்டதாகச் சொல்வதற்கு, இந்த அதிகாரிகளுக்கு எவ்வளவு துணிச்சல் இருக்க வேண்டும்?' என்றெல்லாம் எண்ணி, நஸிருதீன் கோபப்படாமல், மிகவும் அமைதியாக இருந்தார். அந்தக் கமிஷனரிடம் மனைவி கோபத்துடன் கூறினாள், "இது நியாயமா? நான் இங்கு உயிரோடு இருக்கிறேன். ஆனால், உங்கள் பட்டியலில் நான் இறந்து விட்டதாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. என்ன விளையாடு கிறீர்களா?"

உடனே நஸிருதீன், தன் மனைவியிடம் கூறினார், "சற்றுப் பொறு. அதிகாரிகளிடம் நீ சண்டை போடக் கூடாது. அவர்கள் செய்தது சரியாகத்தான் இருக்கும். அவர்கள் எப்படித் தவறு செய்வார்கள்? நம்மை விட அவர்களுக்கு நன்றாகத் தெரியும். படிப்பறிவு சற்றும் இல்லாத முட்டாள் பெண்ணான நீ, மிகப் பெரிய அதிகாரியிடம் எதற்காக வாதம் செய்கிறாய்? நீ இறந்து விட்டதாக அவர்கள் கூறினால், நீ இறந்திருக்கத்தான் வேண்டும். வல்லுநர்கள் தவறு செய்ய மாட்டார்கள்."

*"ஆனால், நான் உயிரோடு இருக்கிறேன்" - அந்த மனிதன் கத்தினான்.*

வாழ்க்கை என்பது உன்னைச் சுற்றி எப்போதும் கத்திக் கொண்டிருக்கிறது. ஆனால், நீதான் அதைக் கவனிப்ப தில்லை. நீ வல்லுநர்களிடம் மிகமிக அதிகமாக ஈடுபட் டிருக்கிறாய். நீ இராமாயணத்தையும் பைபிளையும் படித்துக் கொண்டே இருக்கிறாய். வாழ்க்கை எப்போதும் கத்திக் கொண்டே இருக்கிறது. "நான் இங்கே இருக் கிறேன், என்னைப் பார்." அந்தக் கத்தல், பறவைகள் வழியாக, மரங்கள் வழியாக, பாறைகள் வழியாக, மேகங் கள் வழியாக ஒலித்துக் கொண்டே இருக்கிறது. ஆனால்,

நீ தான். செவிடாக இருக்கிறாய். உன்னுடைய காதுகளை வேதங்களும், வல்லுநர்களும், தத்துவவாதிகளும் அடைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

நீ உன் புத்தகத்தைப் படித்துக் கொண்டிருக்கிறாய். நீ புத்தகத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறாய். நீ புத்தகத்தில் வாழ்க்கையைத் தேடிக் கொண்டிருக்கிறாய்.

இராமகிருஷ்ணர் இந்த நிகழ்ச்சியை அடிக்கடி குறிப்பிடுவதுண்டு. இராமகிருஷ்ணரின் சீடனின் மனைவி, தன்னுடைய கணவனிடம் கூறினாள், ''நேற்று இரவு இரண்டு மூன்று வீடு தள்ளி அமைந்திருக்கும் வீடு, தீப்பிடித்து எரிந்து விட்டது.'' அந்தச் சீடன் படித்தவன். உடனே அவன் அன்றைய செய்தித்தாளை எடுத்து, எல்லாப் பக்கங்களையும் புரட்டினான். ''நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?'' என்று மனைவி கேட்டாள். அவன் கூறினான், ''ஒரு வேளை, அந்த வீடு உண்மையிலேயே தீப்பிடித்து எரிந்திருந்தால், அந்தச் செய்தி பத்திரிகையில் வந்திருக்கும். ஆனால், அப்படி ஒரு செய்தி எதுவும் இதில் இல்லை. அதனால், அந்த வீடு தீப்பிடித்து எரிந்துவிட்டது என்ற செய்தி உண்மையான தல்ல. அது வெறுமனே புரளிதான். மூன்று வீடு தள்ளி நடந்திருக்கும் ஒரு சம்பவத்தைத் தெரிந்து கொள்ள, நீ பத்திரிகையைப் படிக்க வேண்டியிருக்கிறது. பத்திரிகை யில் அதை உறுதி செய்ய வேண்டியிருக்கிறது. பத்திரிகை என்பது வாழ்க்கையைவிட உயிர்ப்புடன் திகழ்கிறது. உண்மையைவிட எழுத்து வடிவத்துக்கு அதிக முக்கியத் துவம் இருக்கிறது.

பிரபஞ்ச இருப்பு என்பது உன்னைவிட்டு வெகுதூரம் தள்ளிச் சென்றுவிட்டது. வார்த்தைகள், தத்துவங்கள், சாஸ்திரங்கள், மதங்கள், கோட்பாடுகள் ஆகியவற்றைக் கொண்டு கட்டப்பட்டிருக்கும் சீனப் பெருஞ்சுவர் உன்க்கும் பிரபஞ்ச இருப்புக்கும் மத்தியில், நந்தி போல

நிற்கிறது. அந்தச் சுவருக்குள் ஊடுருவி, பிரபஞ்ச இருப்பை அடைவது என்பது கடினம். அதனால்தான், நீ மிகுந்த சோகத்துடன், மிகுந்த தாகத்துடன், மிகுந்த பசியுடன் இருக்கிறாய். நீ சிறிதும் வாழவில்லை. வெறுமனே இழுத்துச் செல்லப்படுகிறாய்.

''ஆனால், நான் உயிரோடுதான் இருக்கிறேன்'' என்று அந்த மனிதன் கத்தினான். பிரபலமானவராக விளங்கிய, பாரபட்சமின்றித் தீர்ப்பு அளிக்கக்கூடிய விஞ்ஞானியான ஒரு நீதிபதி அங்கு நின்று கொண்டிருப்பதைப் பார்த்தும், தனக்கு உதவி செய்யும்படி அவரிடம் அவன் கெஞ்சினான்.

துக்கம் அனுஷ்டிக்க வந்தவர்கள் செய்த அதே தவறை அவனும் செய்தான். காரணம், இவனும் அந்தக் கூட்டத்தைச் சேர்ந்தவன் தானே! இந்தக் கதையைப் படிக்கும் போது, சில நேரங்களில் நான் சிந்திப்பதுண்டு. ஒரு வேளை, அவனுக்கும் கூட ஒரு சந்தேகம் இருக்கிறதோ என்று. அவர்கள் சரியாகக்கூட இருக்கலாம். ஏனென்றால், வல்லுநர்கள் எவ்வாறு தவறு செய்வார்கள்? ஒருவேளை, நான் ஏமாற்றப்பட்டு விட்டேனோ? காரணம், அவனும் துக்கம் விசாரிக்க வந்த கும்பலின் ஒரு அங்கம் தானே? அவன் மாறுபட்ட மனிதன் அல்லன். இதே கூட்டத்தில் அங்கம் வகிப்பவன் தான். அவனுடைய உள் மனது இவ்வாறு நினைத்துக் கொண்டது: நான் உயிரோடு இருப்பது போன்ற உணர்வு எனக்கு இருக்கிறது. ஆனால், தன்னுடைய சுய உணர்வை யார் நம்புகிறார்கள்? நீ கூட, உன்னுடைய சுய உணர்வை நம்ப மாட்டாய். ஒரு சந்தேகக் கண்ணோட்டத்தில்தான் பார்ப்பாய். யாருக்குத் தெரியும் - நீ தவறாக இருக்கலாம். அந்த மனிதன் உயிரோடு இருந்தான், தான் உயிரோடு இருப்பதாக உணர்ந்தான். ''நான் உயிரோடு இருக்கிறேன்'' என்று அவன் கத்தினான். ஆனால், அவன் ஒரு தவறான மனிதரிடம், பிரபலம் வாய்ந்த விஞ்ஞானியிடம், பாரபட்சமற்ற நீதிபதியிடம் முறையிட்டுவிட்டான்.

முதல் விஷயம், அவர் ஒரு விஞ்ஞானி. அதாவது, இறந்துபோன பொருள்களைப் பற்றிய ஆராய்ச்சியில் வல்லமை பெற்றவர். எந்த விஞ்ஞானியும், எப்போதும் வாழ்க்கையோடு மோதுவதில்லை. அவர்களால் அது முடியாது. அவர்களுடைய செயல்முறை அதைத் தடுத்து விடுகிறது. இறந்த பொருள்களைப் பற்றி அறிந்த ஒரு மனிதரிடம், வாழ்க்கையைக் குறித்து முறையிட்டது ஒரு தவறான வழிமுறை. அந்த மனிதர் பிரபலமானவர் என்பதில், அந்த வழிமுளற இன்னும் அதிகமான தவறாகி விட்டது. ஒருவேளை, அந்த வல்லுநர் பிரபலமாக இல்லாமலிருந்தால், தன்னுடைய நிபுணத்துவத்தைச் சில சமயங்களில் அவர் ஒதுக்கி வைத்திருக்கக் கூடும். இந்த விஷயம் அவரைப் பெரிதாக ஒன்றும் பாதித்துவிடப் போவதில்லை. ஆனால், அந்த மனிதர் புகழ் பெற்றவராக விளங்கிய காரணத்தால், தன்னுடைய நிபுணத்துவத்தை நிலைநிறுத்திக் கொள்ள வேண்டிய கட்டாயத்தில் அவர் இருக்கிறார். இங்குக் கேள்வி என்பது, அந்த மனிதன் உயிரோடு இருக்கிறானா? இல்லையா? என்பது பற்றியதல்ல. அந்தக் கேள்வி, தான் ஒரு பிரபலமான விஞ்ஞானி என்ற கௌரவத்தைத் தக்க வைத்துக் கொள்வதிலேதான் இருந்தது. ஒரு சாதாரண மனிதன் தற்கொலை செய்து கொள்ளலாம். ஆனால் பிரபலமான விஞ்ஞானியால் அதைச் செய்ய முடியாது. ஒரு முதிர்ச்சி பெறாத விஞ்ஞானியாக இருந்திருந்தால், அவர் அந்த மனிதனைப் பார்த்துவிட்டு இப்படி நினைத்திருப்பார்: ஒருவேளை இவன் உயிரோடு இருக்கக்கூடும். இது எதைக் காட்டுகிறது என்றால், அந்த விஞ்ஞானியின் முதிர்ச்சி யின்மையையும், பக்குவமின்மையையும் தான்.

எவ்வளவுக்கெவ்வளவு ஒரு மனிதன் ஸ்தாபித்திருக் கிறானோ, அவ்வளவுக்கவ்வளவு அவனுடைய மூலதன மும் அமைந்திருக்கும். புதிதாகக் கிளம்பும் உண்மைகளை அனுமதிக்க, அவனுக்குக் குறைந்த அளவு சாத்தியக்

கூறுகளே இருக்கும். அந்தப் புதிய உண்மையைப் புறக் கணித்துவிடத்தான் அவன் விரும்புவான். ஏனென்றால், ஒரு புதிய உண்மையை ஏற்றுக் கொண்டால், அது பழைய அமைப்புகளை ஒட்டு மொத்தமாக அழித்துவிடும். அதிகமாக ஸ்தாபிக்கப்பட்ட மனிதர்கள், குறைந்த அளவு கிளர்ச்சியாளர்களாக இருக்கிறார்கள். அவர்கள் அப்படித் தான் இருக்க வேண்டிய கட்டாயம். அவர்களால் கிளர்ச் சிக்குத் துணைபோக முடியாது. சமுதாயங்கள், புரட்சிக்கு எதிராகத் திட்டமிடும்போது, இதைத்தான் அடிப்படைத் தந்திரங்களுள் ஒன்றாகச் செயல்படுத்துகின்றன.

இந்தியாவில் கடந்த 5000 வருடங்களாக, எந்தப் பெரிய புரட்சியும் நடைபெற்றதில்லை. ஏனென்றால், பிராமணர் களுக்கு மிக அதிக அளவு கௌரவத்தை நாம் தந்துவிட் டோம். அறிவாளியை, உச்ச ஸ்தானத்தில், சிகர ஆசனத் தில் அமர்த்தி விட்டோம். மொத்த ஸ்தாபனத்திற்கும், அறிவாளியைத்தான் ஆணிவேராக ஊன்றியிருக்கிறோம். பிறகு, யார் கிளர்ச்சி செய்வார்கள்? கிளர்ச்சி செய்வதற்கு, நீ ஒரு பிராமணராக, புத்திசாலியாக இருக்க வேண்டும். புத்திசாலி வர்க்கம்தான் கிளர்ச்சி செய்ய முடியும். ஆனால், அந்தப் புத்திசாலி வர்க்கத்தையே, ஸ்தாபனத்தின் அடித்தளமாக வைத்திருக்கும்போது, கிளர்ச்சி செய்வதற்கு ஒருவரும் இருக்க மாட்டார்கள். அதற்கான எந்தச் சாத்தியக் கூறுகளும் இல்லை. இந்தியாவில் உள்ள எல்லாப் பிராமணர்களும் உச்ச ஸ்தானத்தில் இருப்ப வர்கள். அவர்களால், கிளர்ச்சியில் ஈடுபட முடியாது. ஏனென்றால், கிளர்ச்சியால், அவர்களுடைய கௌரவம் பறிபோய் விடும். ஸ்தாபனம் பறிபோய்விட்டால், அவர்களும் பறிபோய் விடுவார்கள். ஸ்தாபனத்துடன் இணைந்துதான் அவர்களால் வாழ முடியும். கிளர்ச்சிக்கு அவர்களால் துணை போக முடியாது.

இதே தந்திரத்தைத்தான் சோவியத் ரஷ்யாவிலும் கடைபிடித்தார்கள். அதனால்தான், சோவியத் ரஷ்யாவில்

எந்தவிதக் கிளர்ச்சிக்கும் வாய்ப்பே இல்லை. இரண்டு இடங்களிலும் ஒரே தந்திரம்தான். அவர்கள் இந்துக்களிட மிருந்துதான் இந்தத் தந்திரத்தைக் கற்றிருக்க வேண்டும். ஏனென்றால், இந்த உலகத்தில், இந்தியா என்ற ஒரு நாட்டில்தான், ஆயிரக்கணக்கான வருடங்களாகப் புரட்சியே ஏற்படவில்லை. கிளர்ச்சியற்ற ஒரே சமுதாய அமைப்பு, கிளர்ச்சிக்கு எந்த வாய்ப்பும் தராத ஒரே நிலப் பகுதி - அவர்களுக்கு ஏதோவோர் இரகசியம் தெரிந் திருக்க வேண்டும். இந்து சமுதாயத்தின் அடித்தளத்தை அமைத்துக் கொடுத்த மனிதனான 'மனு'தான் இந்த இரகசியத்தைத் தெரிந்து வைத்திருக்க வேண்டும்.

இப்போது, மார்க்ஸ் மற்றும் மனு என்னும் இந்தக் கூட்டணிதான் சோவியத் ரஷ்யாவின் அமைப்பை நிர்ண யித்திருக்கிறது. அவர்கள் நூலாசிரியர்கள், பேராசிரி யர்கள், எழுத்தாளர்கள், நாவலாசிரியர்கள், விஞ்ஞானி கள், அதிபுத்திசாலிகளான பிராமணர்கள் ஆகியோர்க்கு மிகுந்த மரியாதை செலுத்துகின்றனர். ரஷ்யாவிலும், பிராமணர்தான் உச்ச ஸ்தானத்தில், சிகர ஆசனத்தில், அமர்ந்திருக்கிறார்கள். இப்போது, அங்கு எந்தவிதப் புரட்சிக்கும் வாய்ப்பே இல்லை. காரணம், யார் புரட்சி செய்வார்கள்? தொழிலாளிகள். சூத்திரர்கள் - புரட்சி மாட்டார்கள். அவர்கள் சுயமாகப் புரட்சி செய்பவர்கள் அல்லர். இவர்களைத் தூண்டுவதற்குப் புத்திசாலி வர்க்கம் தேவை. ஆனால், அவர்களை யார் தூண்டுவார்கள்? ஏனென்றால், புரட்சி வெடித்தால், அது புத்திசாலி வர்க்கத் தைத்தான் பாதிக்கும். போர்வீரர்கள், படைவீரர்கள் புரட்சி செய்ய மாட்டார்கள். அவர்கள்தான், இந்த உலகத்தி லேயே, அதிகபட்சமாகக் கீழ்ப்படிந்து நடப்பவர்கள். இன்னும் சொல்லப்போனால், அது ஒரு குருட்டுத்தனமான கீழ்ப்படிதல். கீழ்ப்படிந்து நடப்பதற்குத்தான், அவர் களுக்கு மொத்தப் பயிற்சியும் கொடுக்கப்படுகிறது. அவர்கள் புரட்சி செய்ய மாட்டார்கள்.

வணிகப் பெருமக்கள் புரட்சியில் ஈடுபடுவதில்லை. ஏனென்றால், புரட்சியின்போது அவர்கள் கொள்ளையடிக்கப் பட்டு விடுவார்கள். இழப்பதற்கு அவர்களிடம் நிறைய இருக்கிறது. வணிகப் பெருமக்கள், வைஸ்யர்கள் எப்போதும் புரட்சி செய்வதில்லை. அவர்களால் செய்ய முடியாது. அவர்கள் எப்போதும் புரட்சிக்கு எதிரானவர்கள். அதனால்தான், அமெரிக்காவில் புரட்சிக்கு வாய்ப்பு இருப்பதில்லை. ஏனென்றால், அந்த நாடு முழுவதும், நடுத்தர மக்கள், அதாவது வியாபார வகுப்பினர், வைஸ்யர்கள், குடியிருக்கிறார்கள். அமெரிக்காவில் புரட்சிக்குச் சாத்தியமில்லை. யார் புரட்சி செய்வார்கள்? நாட்டின் பெரும்பான்மையான பகுதி, நடுத்தர வகுப்பைச் சார்ந்தது. ஒரு நடுத்தர வகுப்பு மனம் எப்போதும் உச்ச கட்டத்திற்குச் செல்லவே முயற்சித்துக் கொண்டிருக்கும். அவனுக்குப் புரட்சி செய்வதற்கு நேரம் இருப்பதில்லை. அது மட்டுமல்லாமல், எந்தவிதப் புரட்சியாக இருந்தாலும், அது அவனுடைய குறிக்கோளுக்கு இடையூறாக இருக்கும். வைஸ்யர்கள் புரட்சியாளர்கள் அல்லர்.

போர் வீரர்கள், படைவீரர்கள், சத்திரியர்கள் - இவர்கள்தான் ஒரு நாட்டில் மிகவும் அதிகமாகக் கீழ்ப்படிந்து நடப்பார்கள். அவர்கள் புரட்சி செய்ய மாட்டார்கள். ஆட்சியாளர் யாராக இருந்தாலும், அவரைப் பின்பற்றத் தொடங்கி விடுவார்கள். சூத்திரர்களுக்கு அந்த அளவுக்கு அறிவு இருப்பதில்லை. அந்தத் தொழிலாளர்களுக்குப் புரட்சி செய்வதற்கான எண்ணமே ஏற்படுவதில்லை. தங்களிடம் இருப்பதைக் கொண்டு, திருப்தியடையும் வர்க்கம் இது. இருப்பதைக் கொண்டு காலம் தள்ளுபவர்கள். அவர்களிடம் பெரிய எதிர்பார்ப்பு எதுவும் இருப்பதில்லை. அவர்கள் விரக்தி அடைவதில்லை. பிராமணர்களால்தான், அவர்களிடையே விரக்தியை உருவாக்க முடியும். பிராமணர்கள் மட்டும்தான் புரட்சி செய்யக்கூடிய வகுப்பினர். நீ பிராமணர்களை உச்சத்

திற்குக் கொண்டு செல்லும்போது, புரட்சி நசுக்கப்படு கிறது. புரட்சி முளையிலேயே எரிக்கப்படுகிறது. வல்லு நர்கள் புரட்சியாளர்களாக இருக்க முடியாது. அவர்கள் தான் பிராமணர்கள். அவர்கள் ஏற்கெனவே நன்கு ஸ்தாபிக் கப்பட்டிருப்பதால், அவர்கள் எந்த மாற்றத்தையும் விரும்புவதில்லை.

அந்த மனிதன் முறையிட்டது தவறான மனிதரிடம். அவன் முறையிட்டது, ஒரு பிரபலமான விஞ்ஞானியிடம் - அங்கு மேலும் ஒரு நிபந்தனை இருக்கிறது: பாரபட்ச மின்மை.

இது புரிந்து கொள்வதற்கு மிகவும் சிக்கலான ஒரு விஷயம். விஞ்ஞானம், தான் பாரபட்சம் இல்லாதது என்று நினைக்கிறது. இது தவறு. எந்த அறிவும் எப்போதும், தனிப்பட்டவருக்குச் சொந்தமானதல்ல. அறிந்தவன்தான் அறிவுக்குள் நுழைகிறான். அவனால், வெளிப்புறத்தில் இருக்க முடியாது. உனக்குச் சில விஷயம் தெரியும் என்று நீ நினைத்தால், உனக்கு அவை தெரியும். நீ அதற்குள் நுழைந்துவிட்டாய். அதன் அங்கமாக மாறிவிட்டாய். அதனால்தான், சோவியத் ரஷ்யாவில், அமெரிக்காவைப் போன்றல்லாமல், ஒரு வித்தியாசமான விஞ்ஞான அமைப்பு இருக்கிறது. ஏனென்றால், அவர்களிடம் வித்தியாசமான மூலதனங்களும், வித்தியாசமான பொறுப்புகளும் இருக்கின்றன.

ஸ்டாலினின் ரஷ்யாவில், பல விஞ்ஞானக் கோட் பாடுகள் மறுக்கப்பட்டன. அவை ஏற்றுக் கொள்ளப்படாத தற்குக் காரணம், அவை மார்க்ஸிஸத்திற்கு எதிரானவை. அதனால் எவரும் அவற்றைப் பற்றிப் பேசுவதில்லை. எவரும் அவற்றைப் புலனாய்வு செய்வதில்லை. அவர்கள் வேறு சில விஷயங்களைக் கண்டுபிடிக்கத் தொடங்கி விட்டார்கள். சோவியத் ரஷ்யாவில், ஃபிராய்டின் மனோ தத்துவ ஆராய்ச்சி, ஏற்றுக் கொள்ளப்படவில்லை.

அங்கிருக்கும் மனோதத்துவ நிபுணர்களில் ஒருவர்கூட, ஃபிராய்டின் ஆராய்ச்சி சரி என்று சொல்வதில்லை. மொத்த உலகமும் சொல்லும் கருத்தை ரஷ்யா நிராகரித்தது.

அவர்களுக்கென்று தனிப்பட்ட முறையில் மனோ தத்துவவியல் உள்ளது. அதுதான் பாவ்லோவியன். அவர்களுடைய ஃபிராய்ட், பாவ்லோவ்தான். ஏனென்றால், அவர் கம்யூனிஸத்தை ஆதரிப்பவர். காரணம், அவர் ஆன்மா இல்லை. மனம் இல்லை என்று கூறுபவர். மனிதன் என்பவன் வேறொன்றுமில்லை, இன்னமும் எந்திரமயமாக இருப்பவன். எப்படிச் செப்பனிடுவது என்பதில்தான் மொத்த விஷயமும் அடங்கியிருக்கிறது. தவறான செப்பனிடுதல், மனோதத்துவக் காய்ச்சலுக்கு வழிவகுக்கிறது. சரியான முறையில் செப்பனிடுவது, மனிதனை மாற்றுகிறது. மனோதத்துவ ஆராய்ச்சிக்கு அவசியமில்லை. மனோதத்துவ ஆராய்ச்சி என்பது பூஷ்வாக்களுக்கு உரியது. அது முதலாளி வர்க்கத்தைச் சார்ந்தது. சோவியத் எல்லைக்குள் ஃபிராய்டால் நுழைய முடியவில்லை. அவர்களுக்கென்று சுயமாக ஒரு மனோதத்துவம் இருக்கிறது. அவர்கள் பாரபட்சம் இல்லாதவர்கள் என்றும் நினைக்கிறார்கள். ஃபிராய்டும்கூடத்தான் பாரபட்சம் இல்லாதவர் என்றுதான் நினைத்தார். உண்மை என்னவென்றால், பாரபட்சமற்ற அறிவு சாத்தியமில்லாதது. ஏனென்றால், அதைக் கண்டுபிடிக்கும் மனிதனுக்கு ஒருதலைப்பட்ச உணர்வு இருக்கும். அவனுக்கென்று சுயமாக ஒருபக்கச் சாய்தல் இருக்கும். அவனுக்கென்று சொந்தமாக அறிவு இருக்கும். அவனுக்கென்று சொந்தமாக மனம் இருக்கும். மொத்த விஷயங்களையும் அதுதான் தீட்டுகிறது. பாரபட்சமில்லாமல் எதுவும் இல்லை.

பாரபட்சமற்ற அறிவுக்கு ஒரே ஒரு வாய்ப்புதான் இருக்கிறது. அது எப்போது என்றால், உன்னுடைய மனத்தை நீ முழுமையாக இழக்கிறபோது. கிழக்கில்

இருக்கும் நாம் கூறுகிறோம்: புத்தரால் மட்டுமே பாரபட்சமின்றி இருக்க முடியும். புத்தர் மனம் இல்லாதவர், அவர் சுயம் இல்லாதவர், ஒருதலைப்பட்ச உணர்வு இல்லாதவர், கற்பனா சாஸ்திரம் இல்லாதவர், வெறுமையில் வாழ்ப்வர்.

அந்த ஞானி பாரபட்சமின்றி இருக்கக் கூடியவர். ஆனால், மனதுடன் வாழும் ஒரு மனிதர் - பாரபட்சமின்றி இருப்பதற்கு எப்படி சாத்தியம்? அவருடைய மனம் திட்டப் போகிறது. அவருடைய மனம் சிந்திக்கப் போகிறது.

விஞ்ஞானியின் செய்கை, அவருடைய பிரபலத்தை நிரூபிப்பதாக இருக்கிறது. மேலும், தான் பாரபட்சம் அற்றவர் என்று அவர் நினைத்துக் கொண்டிருந்திருக்க வேண்டும். அந்தப் பாரபட்சமின்மைதான், அந்த மனிதனைக் கொன்றுவிட்டது. அவன் தவறான மனிதரிடம் வேண்டுகோள் விடுத்திருக்கிறான்.

*''சற்றுப் பொறுங்கள்'' என்று அந்த வல்லுநர் கூறினார். பிறகு, அங்கு நின்று கொண்டிருந்தவர்களை அவர் எண்ணினார். ''இறந்து விட்டதாகச் சொல்லப்பட்ட இந்த மனிதன், தான் உயிரோடு இருப்பதாகக் கூறுகிறான். உங்களில் ஐம்பது பேர் சொல்லக்கூடிய சாட்சியத்தை வைத்துத்தான், நான் தீர்ப்பளிக்க வேண்டும்.''*

ஓட்டெடுப்புதான் பாரபட்சமற்ற தீர்ப்புக்கு ஒரே வழி என்பது உண்மைதான். மேலும், பெரும்பான்மையினர் சொல்வதே சரியாக இருக்கும் என்பதும் உண்மைதான். உண்மையை நிரூபிப்பதற்குப் பெரும்பான்மை வேண்டும். இப்படித்தான் மொத்த உலகத்தையும் வல்லுநர்கள் கையாள்கிறார்கள் - உண்மையைப் பெரும்பான்மைதான் நிருபிக்க வேண்டும். நிஜத்தில் இந்த விஷயம் தலைகீழாக இருக்கிறது. பெரும்பான்மையினர் எப்போதும் பொய்

களைத்தான் நம்புகின்றனர். ஏனென்றால், முட்டாள்கள் தான் பெரும்பான்மையினராக இருக்கிறார்கள்.

மக்களைப் பொறுத்துத்தான் ஜனநாயகம் செயல்படு கிறது. வேறு எந்த அடிப்படையும் இருப்பதில்லை. யார் சரி, எது சரி என்று நீ முட்டாள்களைத்தான் கேட்டாக வேண்டும். மக்கள் கூட்டத்தில் பிறரைப் பின்பற்றும் போக்கு இருக்கிறது. மக்கள் கூட்டத்திற்கு - சுயமான முடிவெடுக்கும் திறன் இல்லை. அது குழப்பம் நிறைந்தது. யாரோ ஒருவன் கையை உயர்த்துகிறான். மற்றவர்கள் அவனைப் பின்தொடர்ந்து செல்கிறார்கள். இந்த மக்கள் கூட்டம் ஆடுகளைப் போன்றவர்கள்.

ஓர் ஆசிரியர் தன்னுடைய வகுப்பில் படிக்கும் சிறிய பையன் ஒருவனிடம் கேட்டார் - அவன் ஓர் இடையனின் மகன் - ''உன்னிடம் பத்து ஆடுகள் இருக்கின்றன. ஐந்து ஆடுகள் வேலியைத் தாண்டிக் குதித்து ஓடிவிட்டன. மீதி எத்தனை ஆடுகள் அங்கு இருக்கும்?''

அந்தப் பையன் கூறினான், ''ஒன்றும் இருக்காது.''

ஆசிரியர் கூறினார், ''என்னது? இதோ பார், நான் சொல்வதை நன்றாகப் புரிந்து கொள். மொத்தம் அங்கு இருந்தது பத்து ஆடுகள். ஐந்து ஆடுகள் போய்விட்டன. இப்போது எத்தனை ஆடுகள் மீதம் இருக்கும்?''

பையன் மீண்டும் கூறினான், ''ஒன்றும் இருக்காது.''

ஆசிரியர் பொறுமையை இழந்துவிட்டார். கோபத் துடன் அவர் கத்தினார். ''முட்டாளே, இந்தச் சிறிய கணக்கைக்கூட உனக்குப் போடத் தெரியவில்லையே!''

பையன் கூறினான், ''உங்களுக்குக் கணக்கைப் பற்றித் தெரியும். ஆனால், எனக்கு ஆடுகளைப் பற்றித் தெரியும். ஒரே ஓர் ஆடு வெளியே குதித்து ஓடினால்கூட போதும். மீதம் உள்ள ஒன்பது ஆடுகளும், அதனைப் பின்பற்றி ஓடிவிடும். அங்கு ஒன்றும் இருக்காது.''

அவன் சொல்வதும் சரிதான். பாரபட்சமற்ற, பிரபலமான அந்த விஞ்ஞானி என்ன செய்தார்? அவர் செய்தது ஜனநாயக ரீதியான விஷயம்.

''சற்றுப் பொறுங்கள்'' என்று அந்த வல்லுநர் கூறினார். பிறகு அங்கு நின்று கொண்டிருந்தவர்களை அவர் எண்ணினார்.

''இறந்து விட்டதாகச் சொல்லப்பட்ட இந்த மனிதன், தான் உயிரோடு இருப்பதாகக் கூறுகிறான். உங்களில் ஐம்பது பேர் சொல்லக்கூடிய சாட்சியத்தை வைத்துத் தான், நான் தீர்ப்பளிக்க வேண்டும்.'' அவன் இறந்து விட்டான் என்று அவர்கள் சாட்சியம் கூறினார்கள்.

''புதைத்து விடுங்கள்'' என்றார் வல்லுநர். அந்த மனிதன் புதைக்கப்பட்டான்.

அதனால் நீ புதைக்கப்பட்டாய். உன்னுடைய வல்லு நர்கள் உன்னைப் புதைத்து விட்டார்கள். உன்னுடைய சாஸ்திரங்கள் உன்னைப் புதைத்து விட்டன. உன்னுடைய வேதாந்தங்கள் உன்னைப் புதைத்துவிட்டன. உயிரோ டிருந்த நீ வல்லுநர்களிடம் கேட்கச் சென்றாய்.

வல்லுநர்களிடம் செல்லாதே, வாழ்க்கையிடம் நேரடி யாகச் செல். சாஸ்திரங்களிடம் செல்லாதே, பிரபஞ்ச இருப்பிற்கு நேரடியாகச் செல். தத்துவவாதிகளிடம் கேட்காதே, வாழ்க்கையிடம் நேரடியாகக் கேள்.

அந்த மனிதன் ஒரு வடிகட்டின முட்டாள். அவன் வல்லுநரிடமிருந்து தப்பித்து ஓடியிருக்க வேண்டும். பிரபலமான விஞ்ஞானியான, பாரபட்சமற்ற அந்த மனிதன், அங்கு நிற்பதைப் பார்த்த கணமே, நீ சவப் பெட்டியிலிருந்து வெளியே குதித்து, வேகமாக ஓடித் தப்பித்திருக்க வேண்டும். அவனைக் காப்பாற்றிக் கொள்ள அதுமட்டும்தான் ஒரே வழி.

நீ கூட அதைத்தான் செய்ய வேண்டும்: உன் சவப் பெட்டியிலிருந்து வெளியே குதித்து, உன்னால் எவ்வளவு வேகமாக ஓட முடியுமோ, அவ்வளவு வேகமாக ஓடி, உன்னுடைய அனைத்து வல்லுநர்களிடமிருந்தும் தப்பித்துக் கொள். இல்லையென்றால், அவர்கள் உன்னைக் கொன்று விடுவார்கள். உன்னை அவர்கள் ஏற்கெனவே கொன்று விட்டார்கள். உன்னை அவர்கள் புதைத்து விடுவார்கள். நீ உயிரோடு இருக்க விரும்பினால், வாழ்க்கையைக் கவனி, அறிவை அல்ல. நீ உயிரோடு இருக்க விரும்பினால், உன்னுடைய சொந்த இதயத்தைக் கவனி. வல்லுநரைத் தீர்ப்பளிக்குமாறு வேண்டிய அந்த மனிதன், எவ்வளவு பெரிய முட்டாளாக இருந்திருக்க வேண்டும்?

நினைவு வைத்துக் கொள்: உன்னுடைய சொந்த இதயம்தான், உன்னுடைய ஒரே நீதிபதி. வேறு நீதிபதி யாருமில்லை. அதனைக் கேள். அதன் உட்புறக் குரலைக் கேள். அது உன்னை எங்கே இழுத்துச் செல்கிறதோ, அதை அப்படியே பின்தொடர்ந்து செல். உட்புறக் குரலை நீ கேட்டால், தத்துவங்களைப் பற்றி நீ சட்டை செய்யாவிட்டால், வாழ்க்கையிடம் நீ நேரடியாகவும் உடனடியாகவும் தொடர்பு வைத்துக் கொண்டால், உன்னால் உச்சத்தை அடைய முடியும்.

கடவுள் அங்கே காத்துக் கொண்டிருக்கிறார். உன்னைத் தவிர வேறு எவராலும் உன்னைத் தடுக்க முடியாது. உன் வழியில் நீ குறுக்கே நிற்காதே.

இன்றைக்கு இது போதும்.



# 5

# மனரீதியான விளையாட்டுக்கள்

தன்னுடைய கோடரியை ஒருவன் தொலைத்து விட்டான். தன் பக்கத்து வீட்டில் வசிக்கும் பையன் மீது அவனுக்குச் சந்தேகம் ஏற்பட்டது.

அந்தப் பையன் நடந்து செல்லும்போது, கோடரியைத் தொலைத்த மனிதன் அவனை உன்னிப்பாகப் பார்த்தான். அவனுடைய முகம், அவனுடைய பேச்சு, அவனுடைய நடத்தை ஆகிய அனைத்தும், அவன்தான் கோடரியைத் திருடியவன் என்பதைக் காட்டிக் கொடுத்தன.

சிறிது நேரம் கழித்து, அந்த மனிதன் தன்னுடைய தோட்டத்தில் தோண்டிக் கொண்டிருந்தபோது, அவனுடைய கோடரி அங்கு இருந்தது.

இன்னொரு நாள், பக்கத்து வீட்டுப் பையனை அந்த மனிதன் மறுபடியும் பார்க்க நேர்ந்தது. அவனுடைய நடத்தையோ, பேச்சோ, முகமோ, அவன் கோடரியைத் திருடியிருப்பான் என்று சந்தேகப் படும் வகையில், சற்றும் இருக்கவில்லை.

எல்லா மனிதர்களும், உன்னையும் சேர்த்துத்தான், ஒரு மூடிய வாழ்க்கையைத்தான் வாழ்கிறார்கள். ஒவ்வொருவரும், அவரவருக்குண்டான தனி உலகத்தில் வாழ்கிறார்கள். உன்னைச் சுற்றியிருப்பது ஓர் உலகம் அல்ல. பலவித மனித மனங்களைப் போலவே, பலவித உலகங்களும் இருக்கின்றன. ஒவ்வொரு மனதுக்கும், ஒவ்வொரு தனிப்பட்ட உலகம் இருக்கிறது. அது மூடப்பட்டிருக்கிறது. சில நேரங்களில், மற்ற உலகங்களிடம் உனக்கு ஒரு நெருங்கிய தொடர்பு இருக்கிறது. அதுவும் மேலோட்டமாகத்தான் இருக்கிறது. உன்னுடைய மையங்கள் அப்படியேதான் தனித்து இருக்கின்றன. அதற்கு உரிய மூடிய உறைக்குள் அவை வாழ்க்கையை நடத்திக் கொண்டிருக்கின்றன.

மதம் என்பது உன்னைச் சுற்றி அமைந்திருக்கும் சுவர். அதற்குள்ளே நீ கைதியாகச் சிறைப்பட்டிருக்கிறாய். ஆனால், அந்தச் சுவர் ஒளி ஊடுருவக் கூடியது. அது சிந்தனைகளும், பாரபட்சமும், கோட்பாடுகளும், சாஸ்திரங்களும் நிறைந்து விளங்கும் ஒரு கண்ணாடிச் சுவர். அதனால்தான், உன்னால் அதைத் தொட முடியவில்லை. அதனால்தான், அதைப் பற்றிய விழிப்பு உனக்கு இல்லை. ஆனால், அதன் பின்னணியில்தான் நீ வாழ்ந்து கொண்டிருக்கிறாய். நீ காண்பதும், உணர்வதும் எதுவாக இருந்தாலும், அது உண்மையல்ல. அது உன்னுடைய தனிப்பட்ட கருத்து.

நீ ஒரு பெண்ணைப் பார்க்கும்போது, இவ்வாறு எண்ணுகிறாய்: ''ஆஹா, எத்தனை அழகு.'' இது உன்னுடைய தனிப்பட்ட கருத்து. வேறு சிலர் இதை ஏற்றுக் கொள்ளாதிருக்கக் கூடும். சிலர் உன்னுடைய கருத்தை முழுமையாக ஆட்சேபிக்கக் கூடும். அவள் ஒரு பேரழகி என்று நீ நினைக்கலாம். ஆனால் வேறு சிலர், ''பரவாயில்லை, சுமாரான அழகு'' என்று நினைக்கலாம்.

இன்னும் சிலர், "அவள் அசிங்கமானவள்" என்றும்கூட நினைக்கலாம்.

சரி, இவர்கள் அனைவரும் எதைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறார்கள்? ஒரே பெண்ணைப் பற்றித்தான் அவர்கள் அனைவரும் இப்படிப் பேசுகிறார்களா? இது எப்படி முடிகிறது? ஒரு பெண்ணைப் பற்றி அனைவரும் பேசும்போது, ஏன் இவ்வளவு முரண்பட்ட கருத்துகள் ஏற்படுகின்றன? இவர்கள் ஒரே பெண்ணைப் பற்றிப் பேசுவதில்லை. அந்தப் பெண் ஒரு மாயை. அவர்கள் பேசுவது, வெவ்வேறு தனிப்பட்ட எண்ணங்களைப் பற்றியது. அந்தப் பெண், வெறுமனே ஒரு திரையைப் போலப் பயன்படுத்தப்பட்டிருக்கிறாள். அவர்கள், தங்களுடைய தனிப்பட்ட மனங்களை அவள் மீது செலுத்துகிறார்கள். எதையெல்லாம் பார்க்க வேண்டும் என்று நினைக்கிறார்களோ, அதையெல்லாம் அவர்கள் பார்க்கிறார்கள். அவர்களால் பார்க்க முடிந்த எல்லாவற்றையும் பார்க்கிறார்கள். ஆரம்பம் முதலே, அவர்களுடைய மனநிலைக்கு ஏற்ப, அவர்களுடைய பார்வைகள் அமைந்திருக்கின்றன. இது ஒவ்வொருவரின் சுய கருத்து. ஆனால், இது உண்மையல்ல.

அதனால்தான், பல நூற்றாண்டுகளாக அழகை வரையறுக்க முயற்சித்து வருகிறார்கள். இதுவரை அவர்களால் முடியவில்லை. இனிமேலும் அவர்களால் முடியாது. ஏனென்றால், அழகு என்பது உண்மையல்ல. அது நிஜ உலகத்தைச் சார்ந்ததல்ல. அது ஒரு தனிப்பட்ட எண்ணம். அதனால், அது அசிங்கமாகப் புலப்படக் கூடும்.

இரட்டைத் தன்மையும் இதைப் போன்றது தான். ஏனென்றால் நிஜம் என்பது ஒன்று. நிஜம் என்பது இரண்டல்ல. அது அசிங்கமாகவும் இருப்பதில்லை, அழகாகவும் இருப்பதில்லை. எந்தவித அழகும் இல்லா

மல், எந்தவித அசிங்கமும் இல்லாமல், அது வெறுமனே அங்கு இருக்கிறது. இங்கு ஒப்பீடு பற்றிய கேள்வியே இல்லை. ஏனென்றால், வேறு எதுவும் இதன் அருகில் இருப்பதில்லை. அது மட்டும்தான் நிஜம். வேறு நிஜம் எதுவும் இல்லை. அதனால் நீ எப்படி ஒப்பிட முடியும்? எது அழகு, எது அசிங்கம், எது நல்லது, எது கெட்டது, எது தெய்விகம், எது துன்மார்க்கம் என்பதெல்லாம் இல்லை. ஒன்று மட்டும்தான் இருக்கிறது. இந்தப் பகுப்புகள் எல்லாம் மனதைப் பொறுத்துத்தான் அமைகின்றன.

நீ ஒருவனை நல்லவன் என்று சொல்லலாம், இன்னொருவனைக் கெட்டவன் என்று சொல்லலாம். ஒருவனை யோகி என்று சொல்லலாம், வேறொருவனைப் பாவி என்று சொல்லலாம். இதைப் போன்ற எண்ணங்கள் அனைத்தும், உன்னுடைய தனிப்பட்ட கருத்துகள். அதனால்தான், யூதர்கள் இயேசுவை ஒரு குற்றவாளியாகக் கருதினார்கள். ஆனால், கிறிஸ்துவர்கள் அவரை, இந்தப் பூமியை இரட்சிக்க வந்த கடவுளின் தூதர் என்று போற்றினார்கள். ஆனால், யூதர்கள் அவரை மோசமானவராக, மனித உருவத்தில் வந்த பாவச் சின்னமாகக் கருதினார்கள்.

இயேசு சிலுவையில் அறையப்பட்ட போது, அவர் மட்டும் தனியாகச் சிலுவையில் அறையப்படவில்லை. அவருடைய இருபுறமும் இரண்டு குற்றவாளிகளையும் சேர்த்து, மூன்று பேரையும் ஒன்றாகச் சிலுவையில் அறைந்தார்கள். ஒரு குற்றவாளியைப் போலத்தான் இயேசு சிலுவையில் அறையப்பட்டார். அது மட்டுமல்ல, ஒவ்வொரு வருடமும், அந்த நாட்டின் வைஸ்ராய்க்கு, அதாவது ரோமன் வைஸ்ராய்க்கு, ஒரு குற்றவாளிக்கு மன்னிப்பு வழங்கி, அவனை மரணத்திலிருந்து விடுவிக்கும் அதிகாரம் இருந்தது. இப்போது, மொத்தம் நான்கு பேர், சிலுவையில் அறையப்பட வேண்டும் - இயேசுவும் மற்ற மூன்று குற்றவாளிகளும். அந்த மூவரும்

கொலைகாரர்கள். அந்த வைஸ்ராய், இயேசுவின் அப்பாவித்தனமான, குழந்தைத்தன்மான முகத்தைப் பார்த்ததும், அந்த மனிதரைக் கொல்வது அநீதி என்று நினைத்தார். அதனால், அவர் இயேசுவை மனதிலே நினைத்துக் கொண்டு, யூதர்களிடம், ''நான் ஒரு மனிதனை விடுவிக்கலாம்'' என்று கூறினார்.

அந்த வைஸ்ராய் ஒரு யூதரல்லர். அவருடைய கண் ணோட்டம் வேறுவிதமாக இருந்தது. இயேசுநாதர் மீது யூதர்கள் கொண்டிருந்த காழ்ப்புணர்ச்சி வைஸ்ராயிடம் இல்லை. இயேசுவிடம் எந்தக் கெட்டதையும், எந்தத் துன் மார்க்கத்தையும் அவரால் பார்க்க முடியவில்லை. அவர் இயேசுவுடன் பேசியபோது, இயேசு ஓர் எளிமையான மனிதர் என்பதைக் கண்டு கொண்டார். அவர் மிகவும் தைரியமாக, அப்பாவித்தனத்தால் வெளிப்பட்ட அந்தத் தைரியத்தில், தன்னை அறியாமல் அவர் பேசிக் கொண்டே இருந்தார். வைஸ்ராயின் இதயத்தின் அடி யாழத்தில், இயேசுவிற்கு மன்னிப்பு அளிக்க வேண்டும் என்று யூதர்கள் கேட்பார்கள் என்ற எதிர்பார்ப்பு இருந்தது.

ஆனால், யூதர்கள் இயேசுவை மன்னிக்குமாறு கேட்க வில்லை. மூன்று குற்றவாளிகளில் ஒருவரான பாராப்பஸ் (Parabbas) என்னும் கொலைகாரனை விடுவிக்க அவர்கள் முடிவெடுத்தார்கள். ஒரு குற்றவாளியைப் போல இயேசு விற்கு மரணதண்டனை நிறைவேற்றப்பட்டது. என்ன ஆயிற்று? இயேசுவைப் பற்றிய கண்ணோட்டங்கள் ஏன் இப்படி மாறுபடுகின்றன? எதிர் எதிர்க் கோணங்களில் ஏன் இருக்கின்றன?

இயேசு என்பவர் பிரச்சினையல்ல. பிரச்சினை எங்கிருக்கிறது என்றால், ஒவ்வொரு மனதிலும் உள்ள தனிப்பட்ட எண்ணத்தில்தான். நீ சிலரை நல்லவர்கள் என்று கூறுகிறாய், சிலரைக் கெட்டவர்கள் என்று

கூறுகிறாய். ஆனால், நல்லது என்பது என்ன என்பதைப் பற்றி நீ எப்போதாவது நினைத்துப் பார்த்திருக்கிறாயா? அதை உன்னால் வரையறுக்க முடியுமா? இதுவரை எவராவது அதை வரையறுத்திருக்கிறார்களா?

இந்த நூற்றாண்டின் மாபெரும் சட்ட வல்லுநரான G.E.மூர் (G.E.Moore) ஒரு நூலை எழுதினார். அந்த நூலின் பெயர் பிரின்ஸிபா எத்திகா (PRINCIPA ETHICA). இது ஓர் அரிதான புத்தகம். மிகவும் ஊடுருவக்கூடிய உன்னதப் படைப்பு. மிகவும் சட்டபூர்வமானது - நல்லது என்றால் என்ன? என்ற கேள்வியுடன் இந்த நூல் தொடங்கு கிறது. அசாத்திய குணத்திண்மை கொண்ட G.E.மூர் போன்றவர், அரிதாகப் பிறப்பவர். இந்த அளவிற்குக் கூர்மையாக மனதை ஊடுருவக்கூடிய குணாதிசயம் கொண்ட இன்னொருவரை, இந்த நூற்றாண்டில் உன்னால் கண்டு பிடிக்க முடியாது.

அவர் இப்படித் தொடங்குகிறார்: நல்லது என்றால் என்ன? பிறகு, நல்லதை வரையறுக்க முடியாது என்று கூறிப் புத்தகத்தை முடிக்கிறார். புத்தகம் முழுவதும் அவர் கடுமையாக உழைக்கிறார். அங்குமிங்கும் சுற்றி அலை கிறார். நல்லதில் பொதிந்திருக்கும் மர்மங்களை ஊடுருவு வதற்குப் பல வழிகளைக் கையாள முயற்சிக்கிறார். ஆனால், இறுதியில் தோல்வி அடைகிறார். இதுதான் முடிவு. நீ மொத்த மலையையும் குடைந்து பார்த்தும், ஒரு சுண்டெலியைக்கூடக் கண்டுபிடிக்க முடியவில்லை. நல்லது என்பது வரையறுக்க முடியாதது.

ஆனால், நல்லது என்பது வரையறுக்க முடியாதது என்பது நீண்ட காலமாகத் தெரிந்ததுதான். இப்போது, கேள்வி என்னவென்றால், நல்லதை ஏன் வரையறுக்க முடியாது? அழகினை ஏன் வரையறுக்க முடியாது? அவற்றை வரையறுக்க முடியாததற்குக் காரணம் என்ன

வென்றால், அது இந்த உலகத்தில் உண்மையாக இருப்ப தல்ல. அது மாறுபட்ட கருத்துகளைக் கொண்டது. அது மனதைப் பொறுத்தது. அது விருப்பமும் விருப்பமின்மை யும் கொண்டது.

இந்த மலர் எனக்குப் பிடிக்கும் என்று சிலர் கூறு வார்கள். அது உனக்குப் பிடிக்காவிட்டால், பிடிக்க வில்லை என்று சொல்வதற்கு உனக்கு உரிமை இருக்கிறது. இதில் எந்தவிதச் சச்சரவுக்கும் இடமில்லை. விருப்பம் என்பது, ஒருவருக்கொருவர் மாறுபடுவது என்பது நமக்குத் தெரியும். அழகு என்பதும் விருப்பமும் விரும்பாமையும் கொண்டதுதான். நல்லது என்பதும் விருப்பமும் விரும் பாமையும் கொண்டதுதான். இந்த உலகத்தில் அவைதான் உண்மை என்பதல்ல. உன்னுடைய சொந்தக் கருத்தை உண்மையின்மீது புகுத்துகிறாய். பிறகு உன்னுடைய சொந்தக் கருத்துக்கும் உண்மைக்கும் இடையில் ஒரு புதிய கருத்து பிறக்கிறது: நீ அதனை அழகு என்கிறாய். அந்த அழகு உன்னுடைய எண்ணத்தோடு ஒத்துப் போகிறது.

ஆனால், உன்னுடைய இந்த எண்ணம், பிரபஞ்சம் பூரா வும் இருப்பதல்ல. அது உனக்கு மட்டுமே உரித்தான சொந்தக் கருத்து. அதனால்தான், சூஃபிக்கள் அனைத்து அறிவும் தனிப்பட்டது என்று வலியுறுத்துகின்றனர். எந்த அறிவும் பொதுவானதல்ல. எல்லா அறிவும் பாரபட்ச மானது என்று அவர்கள் வலியுறுத்துகிறார்கள். எந்த அறிவாலும் பாரபட்சமின்றி இருக்க முடியாது. புத்தர், இயேசு, முகமது போன்ற மகான்கள் மட்டுமே பாரபட்ச மின்றி இருந்திருக்கிறார்கள் - ஆனாலும்கூட, அவர்களுக் கென்று அறிவு என்பது இருந்ததில்லை. அவர்கள் சிந்திப் பதற்கு மனம் அற்றவர்கள், அவர்கள் நிஜத்தைப் பார்ப்ப வர்கள், வெறுமனே பார்ப்பவர்கள். அவர்கள் நிஜத்தின் மீது எந்த எண்ணத்தையும் புகுத்துவதில்லை. அவர்கள் சாத்விகமானவர்கள். அவர்களுடைய மனம் செயலற்று

விளங்குகிறது. அவர்கள் ஜாக்கிரதையானவர்கள். வெறுமனே பெற்றுக் கொள்பவர்கள். அவர்கள் எதையும் வெளிப்படுத்துவது இல்லை.

ஒரு புத்த மனத்திற்கும், சாதாரண மனத்திற்கும் உள்ள வித்தியாசம் இதுதான்: ஒரு சாதாரண மனம் என்பது செயலாற்றக் கூடியது. அது கண்ணாடியைப் போன்ற தல்ல. இருப்பதை அப்படியே அது பிரதிபலிக்காது. அது சுறுசுறுப்புடன் ஊடுருவக் கூடியது. அது நிஜத்தின் மீது, தன்னுடைய சொந்த எண்ணங்களைப் புகுத்துகிறது. அது, நிஜத்துக்கு வண்ணம் பூசுகிறது. அது வடிவமைக்கிறது. அது நிஜத்திற்கு ஓர் அமைப்பைத் தருகிறது. இவை யெல்லாம் அங்கு ஏற்கெனவே இல்லை. மனம் தானாக இவற்றையெல்லாம் கொண்டு வருகிறது.

ஒரு மலரைப் பார்த்ததும், மனம் கூறுகிறது: ‘‘எவ்வளவு அழகு’’. வெறுமனே மலர் மட்டும்தான் அங்கு இருக்கிறது - அழகோ, அசிங்கமோ அங்கு இல்லை. மலைகள் அங்கு இருக்கின்றன. அவற்றில் அழகோ, அசிங்கமோ இருப்பதில்லை. அவை வெறுமனே அங்கு இருக்கின்றன. அந்தப் பிரபஞ்ச இருப்பு சாதாரணமாக இருக்கிறது. அது பிரிக்கப்படவில்லை. மனம் அறிவைக் கொண்டு வந்து அவற்றைப் பிரிக்கிறது. இப்படியே நீ செல்லச் செல்ல, உன்னைச் சுற்றி ஒரு மெல்லிய சுவர் எழுப்பப்படுவதை உன்னால் தெரிந்து கொள்ள முடியாமல் போய்விடும். அந்தச் சுவரினால்தான், நிஜத்தின் உள்ளே ஊடுருவுவதற்கு உன்னால் முடியவில்லை. நீ சாத்விகமாக மாற வேண்டும். நினைவு வைத்துக் கொள்: ஜாக்கிரதை யுடன் கூடிய சாத்விகம் - இதுதான் தியானத்தைப் பற்றிய என்னுடைய வரையறை. ஜாக்கிரதையோடு கூடிய சாத்விகம்.

ஒரு நாள், யாரோ ஒருவர் எனக்கு ஒரு சிறிய கார்ட்டூன் ஓவியத்தை அனுப்பியிருந்தார். அதை நான் மிகவும்

ரசித்தேன். இரண்டு மனிதர்கள் நின்று கொண்டிருக்கிறார்கள் - பக்கத்து வீட்டுக்காரர்களாகவோ, நண்பர்களாகவோ இருக்கலாம். ஒருவர் மற்றவரிடம் கூறுகிறார், "உங்களுடைய மகன் தியானிக்கத் தொடங்கியிருப்பதாகக் கேள்விப் பட்டேனே!"

அடுத்தவர் கூறுகிறார், "ஆமாம். அவன் தியானிக்கத் தொடங்கியிருக்கிறான். எதுவும் செய்யாமல் வெறுமனே உட்கார்ந்திருப்பதற்கு, இது எவ்வளவோ பரவாயில்லை என்று நினைக்கிறேன்."

ஆனால், தியானத்தின் அர்த்தம் அதுதான்; எதுவுமே செய்யாமல் வெறுமனே அமர்ந்திருப்பது. நீ ஏதாவது செய்தால், அது தியானம் அல்ல.

ஜாக்கிரதையோடு கூடிய சாத்விகம். ஜெனரின் (Zenerin) கூறுகிறார்: அமைதியாக உட்கார், எதுவுமே செய்யாதே, வசந்தம் வந்தவுடன் புல் தானாக வளர்கிறது. எதுவுமே செய்யப்பட வேண்டியதில்லை. ஏனென்றால், நீ ஏதேனும் செய்யத் தொடங்கிவிட்டால், நீ அங்கு இருக்கிறாய். நீ ஏதாவது செய்தால், நிஜத்தை நீ மாற்றுகிறாய் என்று அர்த்தம். ஏற்கெனவே, அதில் நிறைய மாற்றங்கள் ஏற்பட்டுவிட்டன. நீ எதையும் செய்யாதே. வெறுமனே கவனி - ஜாக்கிரதையுடன் சாத்விகமாக இரு. விழிப்போடு, எதுவும் செய்யாமல், அமைதியாக உட்கார்ந்திரு. திடீரென அங்கு நிஜம் புலனாகும். மனம் தூக்கி எறியப்பட்டு விடும். எப்போது உனக்கு மனம் இல்லையோ, அப்போது உனக்கு நிஜம் புலப்படும். மனம் நிஜத்தைத் தெரிந்து கொள்வதற்கு அனுமதிக்காது. ஏனென்றால், மனம் அதன் போக்கில் மாயைகளை உருவாக்கிக் கொண்டே இருக்கும்.

இந்தியாவின் ஒரு கோடியில் அமைந்திருந்த பல்கலைக் கழகம் ஒன்றில், நான் ஆசிரியராக வேலை பார்த்து வந்தேன். பிரம்மச்சாரிகள் விடுதி ஒன்றில் தங்கி

யிருந்தேன். என்னுடைய அறையில் என்னோடு தங்கி யிருந்த மனிதர் மிகவும் இங்கிதமும் நல்ல மனமும் கொண்ட எளிமையானவர். அப்போது ஹோலிப் பண்டிகை வந்தது. அவர் பங்கி என்ற போதை மாத்தி ரையை உட்கொண்டு விட்டார். அதற்கு முன்பு, அதை அவர் சாப்பிட்டதில்லை. அவருடைய போதை உச்சந் தலைக்கு ஏறிவிட்டது. அவர் தெருவில் நிர்வாணமாகச் சுற்றத் தொடங்கினார். அதனால், அவர் கைது செய்யப் பட்டு, அன்று இரவு முழுவதும் போலீஸ் ஸ்டேசனில் வைக்கப்பட்டிருந்தார். அந்த அப்பாவி மனிதரை, அந்தச் சம்பவம் மிகவும் பாதித்துவிட்டது. அவர் பிரமை பிடித்தவர் போல ஆகிவிட்டார். அவர் வராததால் நான் அவரை தேடிச் சென்றேன். போலீஸ் ஸ்டேஷனில் அவர் இருப்பதை அறிந்து,

நான் போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்று, அங்கிருந்த போலீஸ் அதிகாரியிடம், நடந்ததை எடுத்துக் கூறினேன். "அவர் மிகவும் நல்லவர், ஏதோ சில நண்பர்களின் தூண்டுதலால், இவர் பலியாகி விட்டார். இதற்கு முன்பு, அவர் போதை மாத்திரை சாப்பிட்டுப் பழக்கமில்லாத தால், அது அவரை மிகவும் பாதித்துவிட்டது" என்று பக்குவமாக அவர்களிடம் எடுத்துக்கூறி, அந்த நண்பரை அங்கிருந்து விடுவித்து, அறைக்கு அழைத்து வந்தேன். அன்றுமுதல், அவர் மிகவும் பயந்து காணப்பட்டார். எதற்கெடுத்தாலும் பயந்து நடுங்கத் தொடங்கினார். தெருவில் செல்லும் ஒரு காரின் சத்தத்தைக் கேட்டால் கூட, உடனே அவர் என் படுக்கையின் மீது சுருண்டு விழுந்து, "போலீஸ் வருகிறது" என்று அலறத் தொடங்கி னார். இரவு நேரத்தில், யாராவது வேறு எந்த வீட்டின் கதவையாவது தட்டினால்கூட, அவர் பதறியடித்துக் கொண்டு, என் படுக்கைக்குக் கீழே ஒளிந்து கொள்வார். போலீஸ் பீதி அவரை ஆட்டிப் படைத்துக் கொண் டிருந்தது. அவரால், பல்கலைக் கழகத்திற்கும் செல்ல

முடியவில்லை. காரணம், வழியில் ஏதாவது ஒரு போலீஸ் காரர் குறுக்கே வந்துவிட்டால் என்ன செய்வது? என்கிற அச்சம்.

இருபத்து நாலு மணி நேரமும் நான் அவரைக் கவனித்தேன். அந்த அளவுக்கு அவர் அசாதாரணமாக விளங்கினார். எப் போதுமே ஒரு விஷயம் அசாதாரணமாக இருக்கும்போது, அதனை உன்னால் எளிதாகக் கவனிக்க முடியும். அவர் தனக்குத்தானே சில கற்பனைகளை உருவாக்கத் தொடங்கி விட்டார். அரசாங்கம் தனக்கு எதிராக சதித்திட்டம் தீட்டத் தொடங்கி விட்டது என்றெல்லாம் பிதற்றத் தொடங்கி னார். ஒரு சாதாரண பல்கலைக் கழக ஆசிரியரை, அர சாங்கம் ஏன் லட்சியம் செய்யப் போகிறது? அது கவலைப் படுவதற்கு, ஏகப்பட்ட பிரச்சினைகள் இருக்கின்றன.

ஒரு சாதாரண மனிதர், இப்போது தன்னுடைய சொந் தக் கற்பனையினால், மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்தவ ராகத் தனக்குத் தானே கருதிக் கொண்டார். மொத்த உலகமும், தனக்கு எதிராக இருப்பதாகவும், அனைவரும் தன்னையே கவனித்துக் கொண்டிருப்பதாகவும், தன்னைக் கையும் களவுமாகப் பிடித்துச் சிறையில் தள்ளச் சரியான சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருப்பதா கவும், அவர் தனக்குத் தானே கருதிக் கொண்டார். அந்த அறையை விட்டு வெளியே செல்வதைக்கூட அவர் நிறுத்திக் கொண்டார். நான் அறைக்குத் திரும்பும்போது கூட, முதலில் அவர் ஜன்னலைத் திறந்து, நான் வந்திருப் பதை உறுதி செய்து கொண்ட பின்னர்தான் கதவைத் திறப்பார். யாராவது தன்னை ஏமாற்ற முயற்சிக்கிறாரோ? ஒரு வேளை போலீஸாக இருக்குமோ? அல்லது வேறு யாராவது எதிரியாக இருக்குமோ? என்றெல்லாம் அவர் பயந்து கொண்டே இருந்தார். நான் வந்ததும், அறையின் வாசல் கதவைத் திறப்பதற்கு, சில நேரங்களில் அரை மணி நேரம்கூட ஆகிவிடும். வந்திருப்பது நான் தான் என்று

முழுமையாக ஊர்ஜிதம் செய்து கொண்ட பிறகுதான், அவர் கதவைத் திறப்பார்.

நாளடைவில், இது மேலும் அதிகமாகி விட்டது. அதன் பிறகு, என்னாலும்கூட, இரவும் பகலும் தூங்கவும் முடியவில்லை, ஓய்வெடுக்கவும் முடியவில்லை. ஒரு சாதாரண காற்று, கதவின் மேல் பட்டு, சத்தம் வந்தால் கூட, அவர் அலறியடித்துக் கொண்டு ஓடிப்போய், பீரோவுக்குள் புகுந்து கொள்வார். அதனால், நான் இதற்கு ஏதாவது ஒரு முடிவு கட்ட வேண்டும் என்று தீர்மானித்தேன்.

நான் நேராக போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்றேன். அங்கிருந்த அதிகாரிகளிடம் பக்குவமாக எடுத்துக் கூறினேன். ''நடந்தது நடந்து விட்டது. இப்போது நீங்கள்தான் உதவ வேண்டும் - ஏனென்றால், உங்களிடம் அவருக்கு எதிரான பத்திரங்கள் ஏதோ இருப்பதாக அவர் நினைத்துக் கொண்டிருக்கிறார். இதனால் தயவு செய்து இன்று இரவு எங்கள் அறைக்கு வாருங்கள். ஒரு ஃபைலைக் கொண்டு வாருங்கள். வெறுமனே ஒரு போலியான ஃபைல்தான். ஏனென்றால், அவருக்கு எதிரான பத்திரங்கள் எதுவும் இல்லை. அவர் ஒரே ஒரு முறை பங்கி சாப்பிட்டதைத் தவிர, வேறு எந்தத் தவறையும் இதுவரை அவர் செய்ததில்லை. அதனால், ஒரு போலியான ஃபைலில், ஏதாவது சில தாள்களை உள்ளே வைத்து, முகப்பில் அவருடைய பெயரை எழுதிக் கொண்டு வாருங்கள். அங்கு வந்ததும் அவரை நன்றாக அடியுங்கள். ஓர் அதிர்ச்சி அவருக்குத் தேவைப்படுகிறது. இல்லையென்றால், இந்தச் சிக்கலான வட்டத்திலிருந்து அவரால் மீள முடியாது. இதை எண்ணி எண்ணி, அவர் மேலும் மேலும் வாடி வதங்கிக் கொண்டிருக்கிறார். அதனால், எதைப் பற்றியும் கவலைப் படாமல், அவரை நையப் புடையுங்கள். அவருடைய கைகளில் விலங்கை மாட்டுங்கள். நான் அவர் எதிரில், அவரை விடுவிக்குமாறு தங்களிடம் பக்குவமாக மன்றாடு

கிறேன். அதற்காக, உங்களுக்கு லஞ்சம் கொடுப்பதாகவும், அவர் முன்பாகக் கூறுகிறேன். அதனால், இந்த வழக்கு இதோடு முடிந்து விட்டது என்ற திருப்தி அவருக்கு உண்டாகும். நீங்கள் கொண்டு வரும் ஃபைலை அவர் கண் எதிரிலேயே எரித்து விடுங்கள்.

அந்த போலி விசாரணை நாடகம் வெற்றிகரமாக நடந்தது. அவரை உண்மையிலேயே நன்றாக அடித்தார்கள். அவர்கள் அவரை அடிக்கும் போது, நண்பர் என்னைப் பார்த்துக் கூறினார், ''பார்த்தீர்களா? நான் எதை எதிர்பார்த்தேனோ, அது நடந்து கொண்டிருக்கிறது. நான் புலம்பியதை யாராவது சட்டை செய்தீர்களா?'' தன்னுடைய எண்ணம் சரியானதாக அமைந்து விட்டதில், அவருக்கு ஓர் ஆழமான திருப்தி உண்டாகிவிட்டது. அவருடைய கைகளில் அவர்கள் விலங்கைப் பூட்டிய போது, கண் ஜாடை செய்தபடியே அவர் என்னிடம் கூறினார், ''அந்த ஃபைலைப் பார்த்தீர்களா? என் பெயர் இருக்கிறது'' இது அவருக்கு அதிர்ச்சியை ஏற்படுத்தி இருந்தது. பிறகு, நான் போலீஸுக்கு லஞ்சம் கொடுப்பதாகக் கூறிய பிறகு, அந்த ஃபைல் எரிக்கப்பட்டது. அந்தப் பிரச்சினையும் அதோடு முடிந்துவிட்டது.

நான் அந்த மனிதரை ஒருமாத காலம் தொடர்ச்சியாக கவனித்தபோது, எனக்கு ஒரு விஷயம் புரிந்தது. ஒரு சாதாரண மனிதனுக்கும் அவருக்கும் பெரிதாக எந்த வித்தியாசமும் எனக்குத் தெரியவில்லை. குணத்தில், பெரிய வேறுபாடு தோன்றவில்லை. அளவில், டிகிரியில் தான் வேறுபாடு காணப்படுகிறது. அவர் ஏணியின் உச்சப் படியில் இருக்கக் கூடும். நீ நடுப்படியில் இருக்கலாம். சிலர் ஆரம்பப் படியில் இருப்பார்கள். எனவே, இந்த வித்தியாசம் அளவைப் பொறுத்ததுதானே தவிர, குணத்தைப் பொறுத்தது அல்ல. எவரிடமெல்லாம் மனம் இருக்கிறதோ, அவர்கள் அனைவரும் ஏதோ ஒரு வகையில்

பைத்தியக்காரர்கள்தான். மனம் என்பது பைத்தியம். நீ பைத்தியமாக ஆகிவிடும் போது, அதைப் பற்றி உனக்குத் தெரியப் போவதில்லை. ஏனென்றால், அனைவருமே அதே டிகிரி அளவுக்குப் பைத்தியக்காரர்களாகத் தான் இருப்பார்கள். நீ அவர்களோடு உன்னை இணைத்துக் கொண்டால், ஒரு பிரச்சினையும் இல்லை.

ஒரு பழைய சூஃபி கதை இருக்கிறது:

ஒரு சூனியக்காரி தலைநகரத்துக்கு வந்தாள். அவள் ஏதோ சிலவற்றைக் கிணற்றுக்குள் போட்டுவிட்டு, ஒரு மந்திரத்தை முணுமுணுத்தாள். அதன்பிறகு, அவள் கூறினாள், ''இந்தக் கிணற்றில் இருக்கும் தண்ணீரைக் குடிப்பவர் யாராக இருந்தாலும், அவர்களுக்குப் பைத்தியம் பிடித்துவிடும்.'' அந்த நகரத்தில், இரண்டு கிணறுகள் மட்டுமே இருந்தன. ஒன்று, பொதுமக்கள் பயன்படுத்தக் கூடியது. இன்னொன்று, அரண்மனையில் இருந்தது. அந்தக் கிணற்றின் நீரை, அரசரும், பிரதம மந்திரியும் மட்டுமே பயன்படுத்த முடியும்.

தங்களுக்குப் பைத்தியம் பிடித்துவிடும் என்று தெரிந்தும், பொதுமக்கள் அந்தக் கிணற்று நீரைக் குடிப்பதைத் தவிர வேறு வழியில்லை. ஏனென்றால், அவர்களுக்கு இருப்பது அந்த ஒரு கிணறு மட்டுமே. அரண்மனையில் இருக்கும் கிணற்று நீரைப் பயன்படுத்திக் கொள்வதற்கு, அரசர், பிரதம மந்திரி ஆகிய இருவரைத் தவிர, மற்ற எவருக்கும் அனுமதி இல்லை.

அன்று மாலை, சூரிய அஸ்தமனத்தின்போது, நகரவாசிகள் அனைவரும் பைத்தியமாகிவிட்டார்கள். ஒருவருக்கும் எதுவும் தெரியவில்லை. அனைவருக்குமே சித்தம் கலங்கி விட்டபோது, அதைப் பற்றி யாருக்கு எப்படித் தெரியும்? ஹிப்பிகள் சொல்வதைப் போல, அனைவரும் தங்கள் போக்கில் ஏதேதோ செய்து கொண்

டிருந்தார்கள். அவர்கள் நிர்வாணமாக நடனமாடினார்கள். கத்திக்கொண்டும், கூச்சலிட்டுக் கொண்டும் அங்குமிங்கும் திரிந்தார்கள். பெண்கள் நிர்வாணமாகத் தெருக்களில் ஓடினார்கள். மக்கள் விதவித்மான யோகாசனங்களைச் செய்தார்கள். அவர்கள் தலைகீழாக நின்று கொண்டிருந் தார்கள். சிலர் ஆசனங்களைச் செய்து கொண்டிருந்தார்கள். அந்த நகரம் முழுவதும் பெரு மகிழ்ச்சியும், பேரானந்த மும் நிலவியது. மக்கள் குதிப்பதும், கொண்டாடுவது மாக, மொத்த நகரமும் விழித்துக் கொண்டிருந்தது.

அரசரும் பிரதம மந்திரியும் மட்டும், மிகவும் கவலையோடு இருந்தார்கள். இப்போது என்ன செய்வது? மொத்த நகரமும் பைத்தியமாகி விட்டது. அந்த அப்பாவிகளுக்கு இதைப் பற்றியெல்லாம் தெரிந்து கொள்ளக்கூட வாய்ப்பில்லை. காரணம், அனைவருமே பைத்தியமாகிவிட்ட நிலையில், எவ்வாறு மதிப்பிடுவது? உண்மை என்னவென்றால், பிரதம மந்திரிக்கும் அரசருக் கும் தங்களுடைய சொந்த விவேகத்தின் மீதே சந்தேகம் வந்துவிட்டது. ஒருவேளை, தங்களுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதோ? ஏனென்றால், மொத்த நகரமும் எதைப் பற்றியும் கவலைப்படாமல், பரமானந்தமாக இருந்தது. ஆயிரக்கணக்கான மக்கள் பைத்தியமாகி விட்டார்கள். ஆனால், ஒருவரும் எவரையும் பைத்தியம் என்று நினைக்கவில்லை.

நடு இரவில் ஒரு பெரிய பிரச்சினை ஏற்பட்டது. மொத்த நகரவாசிகளும் ஒன்றாகக் கூடி, தங்கள் நாட்டு அரசருக்கும் பிரதம மந்திரிக்கும் ஏதோ ஆகிவிட்டது - என்று பேசிக் கொண்டார்கள். அரசருக்கும் பிரதம மந்திரிக்கும் பைத்தியம் பிடித்துவிட்டதாகப் புரளி கிளம்பியது. அனைவரும் இதை ஆமோதித்தார்கள்.

அவர்கள் அரண்மனையைச் சுற்றி வளைத்தார்கள். பைத்தியம் பிடித்த வாயில் காவலர்கள், பைத்தியம்

பிடித்த போலீஸ்காரர்கள், பைத்தியம் பிடித்த படை வீரர்கள் என்பதால், அரண்மனைக்குச் சிறிதும் பாதுகாப்பு இல்லை. அவர்கள் அனைவரும் ஒட்டுமொத்தமாகக் குரல் கொடுத்தார்கள். ''உங்களுடைய பைத்தியம் குணமாகா விட்டால், உங்களை ஆட்சிப் பொறுப்பில் இருந்து அகற்றி விடுவோம்.''

அரசர், ''என்ன செய்வது?'' என்று பிரதம மந்திரியிடம் கேட்டார்.

பிரதம மந்திரி கூறினார், ''நீங்சள் அவர்களிடம் பேசிக் கொண்டிருங்கள். நான் பொதுக் கிணற்றுக்குச் சென்று, குடிப்பதற்குக் கொஞ்சம் தண்ணீர் கொண்டு வருகிறேன். ஏனென்றால், இப்போது அதைத் தவிர வேறு எந்த வழியும் இல்லை. இந்தப் பைத்தியக்கார நகரத்தில், ஒரு நிமிடம் உயிர் வாழ்வதாக இருந்தாலும்கூட, நாமும் பைத்தியமாகிவிட வேண்டியதுதான்.

அவர் பொதுக் கிணற்றிலிருந்து தண்ணீர் கொண்டு வந்தார். இருவரும் அதைக் குடித்தார்கள். பிறகு, இருவரும் நடனமாடத் தொடங்கினார்கள். தங்களுடைய உடைகளை கழற்றி வீசினார்கள் - இப்போது மொத்த நகரவாசிகளும், அரசரும் பிரதம மந்திரியும் குணமாகி விட்டதை நினைத்து, மிகுந்த மகிழ்ச்சியடைந்தனர்.

மனித குலம் முழுமையும் பைத்தியங்கள்தான். ஏனென்றால், மனம் என்பது பைத்தியம். அந்தப் பைத்தியக் கார மனதின் மூலமாக, நீ பார்க்கும் அனைத்தும், வெறுமனே நிஜத்தின் மீதான உன்னுடைய சொந்த அபிப்பிராயங்கள் தான். அது உன் மனதிற்குள் தான் இருக்குமே தவிர, வேறெங்கும் இருப்பதில்லை. பைத்தியக்காரன் மூடிய மனதுடன் வாழ்கிறான். நீயும்கூட மூடப்பட்டிருக்கிறாய். அந்த அளவிற்கு இல்லாவிட்டா லும் ஓரளவிற்கு மூடப்பட்டிருக்கிறாய். ஒருவேளை ஆங்

காங்கே சில ஓட்டைகள் இருக்கலாம், சின்னச் சின்னக் கிழிசல்கள் இருக்கலாம். ஆனால், நீ மொத்தக் கூட்டத்தையும் போன்றவன்தான். அதனால், எந்த ஒப்பீடும் உனக்கு இல்லை.

விஞ்ஞானிகள் கூறுகிறார்கள்: ஒருவேளை, எல்லாப் பொருள்களையும் பத்தில் ஒரு பங்காகக் குறைப்பதற்குக் கடவுள் திடீரென்று தீர்மானித்தால், யாருக்கும் இது தெரியப் போவதில்லை. ஆறடி இருக்கும் நீ, பத்தில் ஒரு பங்காகக் குறைக்கப்பட்டால், 0.6 அடியாக மாறி விடுவாய். ஆனால், அதே சமயத்தில் எல்லாப் பொருள் களும் இதே விகிதாச்சாரத்தில் குறைக்கப்பட்டிருக்கும். 60 அடி உயரமுள்ள மரம் 6 அடியாகக் குறைக்கப்பட் டிருக்கும். 6000 அடி உயரம் கொண்ட மலை, 600 அடியாகக் குறைக்கப்பட்டிருக்கும். இதே விகிதத்தில் எல்லாப் பொருள்களும் குறைக்கப்படும் போது - நீ 0.6 அடியாகக் குறையும் போது, எல்லாப் பொருள்களும் இதே விகிதத்தில் குறைந்து விடுகின்றன. இதனால், ஒருவருக் கும் எதுவும் தெரியப் போவதில்லை. உனக்கு எப்படித் தெரியும்? உன்னுடைய வீட்டு வாசல் கூடக் குறைந்து விடும். இதைப் பற்றி எவருக்கும் எதுவும் தெரியாது.

நீ விழிப்படைவது எப்போதென்றால், உன்னால் ஒத்துப்போக முடியாதபோது மட்டும்தான். இல்லையென் றால், உனக்கு விழிப்பு இருப்பதில்லை. இதனைத் தலைகீழாகச் சொல்லும்போதும் அதுதான் உண்மை. நீ விழிப்படைந்தால், நீ ஒத்துப் போகமாட்டாய். நீ எந்த அளவுக்கு அதிகமாக விழிப்படைகிறாயோ, அந்த அளவுக்குக் குறைவாக சாதாரண மனிதகுலத்துடன் நீ ஒத்துப் போகிறாய். இயேசு ஒரு வெளி மனிதர். அவர் உனக்குப் புதியவராகத் தோன்றுபவர். பிரபஞ்ச இருப்போடு மிகச் சரியாக அவர் பொருந்துபவர். ஆனால், இந்தப் பைத்தியக்கார உலகத்தோடு அவரால் பொருந்த

முடியாது. மாறாக, நீ அவரைப் பைத்தியம் என்று கருது வாய். ஒரு சாக்ரடீஸ், ஓர் இயேசு, ஒரு புத்தர் - இவர்கள் எல்லாம் பைத்தியக்காரர்களாகவே பாவிக்கப்பட்டார்கள். அவர்கள் அனைவரும் அசாதாரணமானவர்கள் என்ற எண்ணமே உனக்குத் தோன்றுகிறது. எப்போதும் அசா தாரணத்திற்கு மத்தியில் நீ வாழ்ந்து கொண்டிருப்பதால், ஒரு சாதாரண, ஆரோக்கியமான மனிதன் கூட, அசாதாரண மான மனிதனாக உனக்குத் தோன்றுகிறது.

மனம் என்பது ஒரு நோய் என்று சூஃபிக்கள் கூறு கின்றனர். அறிந்தவர்கள் அனைவரும் இந்தக் கருத்தை ஆமோதிக்கிறார்கள். இதில் இருக்கும் தந்திரம் என்ன வென்றால், மனம் எதையெல்லாம் நினைக்கிறதோ, எப்போதும் அவற்றைத் தெரிந்து கொண்டு விடுகிறது. ஏனென்றால், நிஜத்தில் சிலவற்றைத் திணித்துவிட்டு, அதன்பிறகு நீ படிக்கத் தொடங்குகிறாய். வலது கையைக் கொண்டு நீ போடுகிறாய். இடது கையைக் கொண்டு நீ படிக்கிறாய். அதன்பிறகு நிஜத்தைப் படிப்பதாக நீ நினைத்துக் கொள்கிறாய்.

நான் உன்னிடம் பேசிக் கொண்டிருக்கிறேன். ஆனால், நான் என்ன சொல்கிறேன் என்பதை நீ கவனிப்பதில்லை. அது முடியாத விஷயம். அதற்கு எந்த வாய்ப்பும் இல்லை. ஆயிரத்தொரு விஷயங்களை நீ கேட்டுக் கொண்டிருக்கக் கூடும். ஒருவருக்கொருவர் மாறுபட்ட கண்ணோட்டத்தில் கேட்டுக் கொண்டிருக்கலாம். உன்னுடைய தனிப்பட்ட சிந்தனைகள் உன்னைச் சேர்ந்தவை. உன் நண்பனைப் பொறுத்தவரை, அது அவனைச் சார்ந்தது. பேச்சு முடிந்த பிறகு, நீங்கள் அனைவரும ஒன்றுகூடி, நீங்கள் கேட்டுக் கொண்டிருந்த பேச்சைப் பற்றி விவாதிக்கும்போது, உங்களுக்கு ஆச்சர்யம் ஏற்படுகிறது. ஒவ்வொருவரும் வெவ்வேறு விஷயங்களைக் கேட்டுக் கொண்டிருந்திருக் கிறீர்கள். வெவ்வேறு கதைகளைக் கவனித்திருக்கிறீர்கள்.

ஏனெனில் மனம் அங்கிருக்கிறது. அது தொடர்ச்சியாகக் கூட்டிக் கொள்கிறது, நீக்கிக் கொள்கிறது, அர்த்தப் படுத்திக் கொள்கிறது.

நீ வெறுமனே நான் சொல்வதைக் கேட்பதில்லை. நீ உத்வேகத்துடன் இருக்கிறாய். ஆனால், நீ உத்வேகத்துடன் இருந்தால், என்னைத் தவற விட்டுவிடுவாய். ஒரு சுறுசுறுப்பான மனம்தான், புரிந்து கொள்வதற்குத் தடையாக இருக்கிறது. அமைதியான மனம் தேவை. ஒரு வெற்று மனம் தேவை. எல்லாச் சிந்தனைகளிலிருந்தும் விடுபட்ட வெறுமை அவசியம். நீ ஒரு கண்ணாடியைப் போல மாறு. நீ வெறுமனே கவனி. அதைப் பற்றிச் சிந்திப்பதற்கு முயற்சிக்காதே. ஏனென்றால், நீ அதைப் பற்றிச் சிந்தித்தால், நீ தவற விட்டுவிடுவாய். நீ வழி தவறிப் போய்விட்டவன். நீ ஏற்கெனவே நீண்ட தூரம் போய்விட்டவன்.

வெறுமனே கவனி. ஓர் இசையைக் கவனிப்பதைப் போல என்னைக் கவனி, ஒரு பறவையின் கானத்தைக் கவனிப்பது போல. என்னைக் கவனி, ஓர் ஆற்றைப் போல என்னைக் கவனி, அமைதியாக என்னைக் கவனி. அமைதியாக கவனிப்பது எதற்காகவென்றால், கற்றுக் கொள்வதற்காக. கற்றுக் கொள்வதற்கு வேறு எந்த வழியும் இல்லை.

புரிந்து கொள்ள வேண்டிய மிக முக்கியமான அடிப் படை விஷயங்களில் இதுவும் ஒன்று. இல்லையென்றால், கீதையையும் குரானையும் நீ படிக்கலாம். ஆனால், நீ படிக்கப் போவது கீதையையோ, குரானையோ அல்ல. அவற்றின் மூலமாக நீ உன்னைத்தான் படிக்கப் போகிறாய். உன்னுடைய சுய மனதைத்தான் நீ படிக்கப் போகிறாய். விஷச் சூழலில் நீ மாட்டிக் கொண்டிருக்கிறாய். ஒரு சுவர் உன்னைச் சுற்றிலும் சூழ்ந்திருக்கிறது - ஆனால், அந்தச் சுவர் மிகவும் மெல்லியது. அதை உன்னால் பார்க்க முடியாது. அதை உன்னால் உணர முடியாது. மனம் என்பது

சுவர் என்பதை எப்போது நீ புரிந்து கொள்கிறாயோ, அப்போது அதைத் தூக்கிப் போடத் தொடங்குகிறாய்.

சில நேரங்களில் நீ மரங்களுடன் இரு. நீ எதுவும் சொல்லாதே. வாய்ப்பேச்சைத் தவிர்த்துவிடு. வெறுமனே இரு. ஒரு மரத்தின் கீழே அமர்ந்து கொள். பல பூக்கள் அந்த மரத்தில் இருக்கும். ஆனால், எதுவும் பேசாதே. வெறுமனே அந்த மலர்களைப் பார். அந்த மரத்தைப் பார். அந்த மரத்தைக் கட்டித் தழுவிக் கொள். அந்த மரத்தை முத்தமிடு. ஆனால், எதுவும் பேசாதே. நீ எதை வேண்டுமானாலும் செய்யலாம். ஆனால், எந்த வாய்ப்பேச்சும் அங்கு இருக்கக் கூடாது.

உன் மனதைக் கொண்டு வராதே. மரமும் உன்னுடைய நிஜமும் ஒன்றாகச் சங்கமம் ஆவதற்கு அனுமதி. இவற்றுக்கிடையில், மனதைக் கொண்டு வராதே. மனதைத் தூக்கிப் போடு. நேரடியாகவும், உடனடியாகவும் மரத்தோடு சங்கமித்துவிடு. நேரடியாகவும், உடனடியாகவும் வானத்தோடு சங்கமித்துவிடு. உடனடியாகவும் நேரடியாகவும் என்னோடு சங்கமித்துவிடு, அல்லது உன் அன்புக்குரியவர்களோடோ நண்பர்களோடோ சங்கமித்துவிடு.

ஒரே ஒரு விஷயத்தை நினைவு வைத்துக் கொள்: உன் மனதைக் கொண்டு வரும் கணத்திலேயே நீ சித்த பிரமையையும் கொண்டு வருகிறாய். நீ மனத்தைக் கொண்டு வரும் கணத்திலேயே, நீ விரக்தி மனப்பான்மையையும் கொண்டு வருகிறாய்.

உன்னால் மனம் அற்றவனாக இருக்க முடியுமா? நிஜத்தை அறிந்து கொள்வதற்காக ஒரே வழி அதுதான்.

இப்போது அந்தச் சிறிய நீதிக்கதை:

*ஒருவன் தன்னுடைய கோடரியைத் தொலைத்து விட்டான். தன் பக்கத்து வீட்டில் வசிக்கும் பையன் மீது அவனுக்குச் சந்தேகம் ஏற்பட்டது.*

எப்போது நீ சந்தேகப்படத் தொடங்குகிறாயோ, அப்போது உன்னுடைய மனம் சுறுசுறுப்பாகி விடுகிறது. இப்போது அங்கே சந்தேகம் இருக்கிறது. அந்தச் சந்தேகம் சிலவற்றை வெளிப்படுத்தத் தொடங்கும். அந்த மனிதன் பக்கத்து வீட்டுப் பையனைச் சந்தேகித்தான்.

அந்தப் பையன் நடந்து செல்லும் போது, கோடரியைத் தொலைத்த மனிதன், அவனை உன்னிப்பாகப் பார்த்தான்.

அவனைப் பார்த்ததும், அந்த மனிதனின் சந்தேகம் முழுமையாக ஊர்ஜிதம் அடைந்தது. அந்தப் பையனின் நடையில், ஒரு திருட்டுத்தனம் தெரிந்தது. திருடர்கள் நடந்து செல்வதைப் போல அவன் நடந்து சென்றான். அவன்தான் கோடரியைத் திருடியிருக்கிறான்.... அவனுடைய முக அசைவுகள்... அந்தப் பையனின் கண்கள் எதையோ மறைக்க முயற்சித்தன. நேரடியாகப் பார்ப்பதை அவன் தவிர்த்தான். திருடியது அவன்தான். அவனுடைய பேச்சு முன்னுக்குப் பின் முரணாக இருந்தது. அவன் ஏமாற்ற முயற்சித்தான். திருடியது அவன்தான். அவனுடைய நடத்தை சாதாரணமாக இருக்கவில்லை. அசாதாரணமாக இருந்தது. ஏதோ ஒன்றால், அவனுடைய இதயம் அழுத்தப்பட்டிருந்தது. அவன் எப்போதும் போல இருக்கவில்லை. அவனுடைய தலையைக் கோடரி அழுத்திக் கொண்டிருந்தது. அவன் நடந்து கொண்ட விதம்... இவையெல்லாம் அவன்தான் கோடரியைத் திருடியவன் என்பதைக் காட்டிக் கொடுத்தன.

உனக்கும்கூட இது நிகழ்ந்திருக்கும். ஒரு விஷயத்தை நீ சந்தேகிக்கத் தொடங்கினால், அதை வலுப்படுத்த ஆரம்பித்துவிடுவாய். எப்போது சந்தேகம் நுழைகிறதோ, அப்போது அங்கே விதை முளைவிடத் தொடங்குகிறது. பிறகு, அனைத்தும் மாறிவிடுகின்றன.

நீ ஒரு பெண் மீது காதல் கொண்டால் - அவள் உன்னைக் காதலிப்பதாகக் கனவிலும் நினைத்திருக்க மாட்டாள், ஆனால், நீ அவள்மீது காதல் கொண்டிருந்தால், பிறகு அனைத்தும் - அவள் நடக்கும் முறை, அவள் 'ஹலோ' சொல்லும் முறை, அவள் உன் அருகில் நிற்கும் முறை போன்ற அனைத்தும், அவள் உன்மீது காதல் கொண்டிருப்பதைப் புலப்படுத்த உதவும். அவள் உன்மீது காதல் வசப்பட்டிருப்பதாக நீ மேலும் மேலும் நம்பத் தொடங்கிவிடுவாய். இந்தக் காதல் உணர்வு, அவளுக்குச் சற்றும் இருக்காது. துளிகூட அந்த எண்ணம் அவளுக்கு இருக்காது. ஆனால், நீ உறுதியாக இருப்பாய். அவள் எப் போதும் போலத்தான் இருப்பாள். ஆனால், நீ எப்போதும் போல இருக்க மாட்டாய். உன் மனம் எதையோ சுமந்து கொண்டிருக்கும். ஒரு விதை, ஒரு வெளிப்பாடு இருக்கும். உன் மனம் ஏதோ ஓர் எண்ணத்தில் நிரப்பப் பட்டிருக்கும். அல்லது, உண்மையாக நடந்து கொள்ளாத தற்காக, நீ மனைவியையோ அல்லது கணவனையோ சந்தேகிக்கக்கூடும். இந்த சந்தேகம் ஏற்பட்ட உடனேயே, அதற்கான நிரூபணங்களைத் தேடுவதில் நீ முனைவாய்.

நினைவு வைத்துக் கொள், இதுதான் பைத்தியக்காரத் தனம் என்பது: முதலில் நீ தீர்மானித்து விடுகிறாய். பிறகு அதற்கான நிரூபணங்களைத் தேடுகிறாய். அந்த நிரூபணங் களும் உனக்கு எப்போதும் கிடைத்துவிடும். வாழ்க்கை விஸ்தாரமானது. பைத்தியக்காரப் பாதை என்பது இதுதான். முதலில் தீர்மானிப்பது, அதன் பின்னர் நிரூ பணங்களைத் தேடுவது. அந்த நிரூபணங்கள் உண்மை யான அத்தாட்சிகள் அல்ல. அவை போலியானவை. அவை கிட்டத்தட்ட அநீதியான அத்தாட்சிகள். ஆனால், நீ ஏற்கெனவே இந்த விஷயத்தில் முடிவெடுத்து விட்டாய்.

முதலில் நிரூபணங்கள் இருக்க வேண்டும், பிறகுதான் தீர்மானத்துக்கு வரவேண்டும். ஆனால், மக்கள் முதலில்

தீர்மானித்துவிட்டு, பிறகு தேடிக் கொண்டிருக்கிறார்கள். நினைவு வைத்துக் கொள், நீ எதை முடிவெடுத்தாலும், உன்னால் அதைச் செய்துவிட முடியும். அதற்கு இடையூறாக ஒருவரும் இருக்க மாட்டார்கள். நீ கடவுள் இருக்கிறார் என்று தீர்மானித்தால், நீ ஒருவரைத் தேடிப் பிடித்து விடுவாய். கடவுள் இல்லை என்று நீ தீர்மானித் தால், கடவுள் இல்லை என்பதைக் கண்டு கொள்வாய். நீ பதின்மூன்றாம் எண்ணைத் துர்மார்க்கமானது, துரதிர்ஷ்ட மானது என்று முடிவெடுத்துவிட்டால், அந்த பதின்மூன்றாம் எண்ணில் உள்ள துன்மார்க்கத்தையும், துரதிர்ஷ்டத்தையும் நிரூபிப்பதற்கு ஒவ்வொரு நாளும் செயல்படுவாய். அந்த மாதத்தின் பதின்மூன்றாம் தேதி அன்று, ஏதோ ஒரு காரியம் நடக்காமல் போய்விடும். ஒவ்வொரு நாளும் அப்படிப் பல விஷயங்கள் தவறாகப் போகும். ஆனால், அதை யெல்லாம் நீ கண்டு கொள்ள மாட்டாய். ஆனால், பதின்மூன்றாம் தேதி மட்டும், நீ செய்யும் எல்லாக் காரியங் களையும் கவனமாக ஆராய்ந்து பார்ப்பாய். அமெரிக்கா வில், பல ஹோட்டல்களில், பதின்மூன்றாவது மாடி இருக் காது. ஏனென்றால், பதின்மூன்றாவது மாடியில் தங்குவதற்கு எவரும் விரும்புவதில்லை. அதனால், பன்னிரண்டாவது மாடிக்குப் பிறகு, பதினான்காவது மாடி வந்துவிடும். பதின்மூன்றாவது மாடி வராது.

நான் சமீபத்தில், ஒரு பத்திரிகையில் இந்தச் செய்தி யைப் படித்தேன்: பதின்மூன்றாம் எண் பிசாசுக்குச் சொந்த மானது என்பதை நிரூபிக்க, ஆயிரக்கணக்கான புள்ளி விவரங்களை ஒருவர் எழுதியிருந்தார். ஆயிரக்கணக்கான உண்மை நிகழ்ச்சிகளை, அதில் அவர் சேகரித்து தந்திருந் தார்: ஒவ்வொரு மாதமும் பதின்மூன்றாம் தேதி அன்று, உலகத்தில் எத்தனை கொலைகள் செய்யப்பட்டன? எத்தனை கொள்ளைகள் நடைபெற்றன? எத்தனை பேர் தற்கொலை செய்து கொண்டார்கள்? எத்தனை மோட்டார்

விபத்துகள் நடந்தன? எத்தனை மனிதர்களுக்குப் பைத்தியம் பிடித்தது? இப்படி ஆயிரக்கணக்கான உண்மையான புள்ளிவிவரங்களை அவர் தொகுத்துத் தந்திருந்தார். யாரோ ஒருவர், இந்தச் செய்திக் கட்டு ரையை எனக்கு அனுப்பியிருந்தார் - இந்தக் கட்டுரை அவரை மிகவும் கவர்ந்ததாக குறிப்பிட்டிருந்தார். அந்தக் கட்டுரை, அந்த அளவுக்கு நன்றாக இருந்தது என்பது உண்மைதான். அந்தக் கட்டுரை ஆசிரியர், தன்னுடைய கருத்தை வலியுறுத்த, பல உண்மைகளைப் பட்டியலிட் டிருந்தார்.

அந்தக் கட்டுரையை எனக்கு அனுப்பிய மனிதருக்கு, நான் இப்படிப் பதில் எழுதினேன்: ''பன்னிரண்டாம் தேதியில் நடந்த சம்பவங்களை எல்லாம் சேகரித்துப் பாருங்கள். அன்றைய தினமும், அதே எண்ணிக்கையில் தான் கொலைகளும், கொள்ளைகளும், மாரடைப்புகளும், தற்கொலைகளும், பைத்தியம் பிடித்ததும் நடைபெற்றிருக் கும். இதே போன்று, எந்தத் தேதியில் வேண்டுமானாலும், உங்கள் ஆராய்ச்சியைச் செய்து பாருங்கள். முதலில் நீ ஓர் எண்ணைத் தீர்மானித்துக் கொள்கிறாய். அதன்பிறகு, உன் வாழ்க்கையோடு அந்த எண்ணைத் தொடர்புபடுத்தி, ஆராயத் தொடங்குகிறாய். பதின்மூன்று என்பது நல்ல எண் என்று நீ தீர்மானித்து விட்டால், பிறகு வேறு மாதிரியான உண்மைகள் உனக்குப் புலனாகும். எத்தனை பேர் திருமணம் செய்து கொண்டார்கள்? எத்தனை குழந்தைகள் பிறந்தன? எத்தனை பேர் காதலிக்கத் தொடங்கினார்கள்?

பதின்மூன்றாம் தேதியில், திருமணங்களும் நடைபெறு கின்றன. விவாகரத்துகளும் நடைபெறுகின்றன. இவை அனைத்துமே உன்னைப் பொறுத்துத்தான் அமைகின்றன. மக்கள் பிறக்கவும் செய்கிறார்கள், இறக்கவும் செய் கிறார்கள். நிஜத்தில், எல்லா நாள்களும் ஒரே மாதிரி யானவைதான். நிஜத்திற்கு எந்தப் பாரபட்சமும்

கிடையாது. ஆனால் உன் மனம்... அது வேலை செய்யத் தொடங்கிவிட்டால், நீ ஆராய்ச்சியில் ஈடுபடத் தொடங்கி விடுவாய்.

என்னிடம் மக்கள் வருகிறார்கள் - நான் ஒரு கெட்ட மனிதன் என்று ஒருவேளை அவர்கள் முடிவெடுத்து விட்டால், உடனே அதற்கான அத்தாட்சிகளைத் தேடிப் பிடிப்பதில் அவர்கள் ஈடுபடத் தொடங்கிவிடுவார்கள். யாரும் அவர்களைத் தடுக்க முடியாது. அவர்கள் எப்போதும் அத்தாட்சிகளைத் தேடுவதிலேயே கவனமாக இருப்பார்கள். வாழ்க்கை என்பது விஸ்தாரமானது. அதில் கோடைக்காலமும் குளிர்காலமும் இருக்கும். நல்லதும் கெட்டதும் இருக்கும். சரியும் தவறும் இருக்கும். அது, பறவையின் இரண்டு பக்கச் சிறகுகளைப் போன்றது. இவை இரண்டும் இல்லாமல் நம்மால் இருக்க முடியாது. ஒரு மனிதனைக் கெட்டவன் என்று ஒருவன் நினைத்து விட்டால், உடனே அதற்கான நிரூபணங்களை அவன் சேகரிக்கத் தொடங்குகிறான். ஒரு மனிதனை நல்லவன் என்று ஒருவன் நினைத்துவிட்டால், உடனே அதற்கான நிரூபணங்களையும் அவன் சேகரிக்கத் தொடங்குகிறான். வாழ்க்கை உனக்கு அளவற்ற வாய்ப்புகளை அள்ளித் தருகிறது. ஏகப்பட்ட மாற்றுவழிகள் திறந்திருக்கின்றன.

அந்தப் பையன்தான் கோடரியைத் திருடியிருக்க வேண்டும் என்ற சந்தேகம் வந்தவுடனேயே, அவன் நடந்து செல்வதை அந்த மனிதன் உன்னிப்பாகக் கவனித்தான். அந்தப் பையனின் நடை, அவனைத் திருடன் என்று சொல்லியது. அவன் நடந்து கொண்ட விதம் அனைத்தும், அவன்தான் கோடரியைத் திருடியிருப்பான் என்பதைக் காட்டிக் கொடுத்தது.

சிறிது நேரம் கழித்து, அந்த மனிதன் தன்னுடைய தோட்டத்தில் தோண்டிக் கொண்டிருந்தபோது, அவனுடைய கோடரி அங்கு இருந்தது.

திடீரென்று அனைத்தும் மாறிவிட்டன.

இன்னொரு நாள், பக்கத்து வீட்டுப் பையனை அந்த மனிதன் பார்க்க நேர்ந்தது. அவனுடைய நடத்தையோ, பேச்சோ, முகமோ, அவன் கோடரியைத் திருடியிருப்பான் என்று சந்தேகப்படும் வகையில், சற்றும் இருக்கவில்லை.

அனைத்தும் மாறிவிட்டன. பையன் அப்படியேதான் இருக்கிறான். அவனுக்கு என்ன நடந்தது என்பதுகூடத் தெரியாது. திருடனாக இருந்தவன், இப்போது திருடன் இல்லை - தங்கமான பையன், மிகவும் நல்ல பையன். அவனுடைய நடையைப் பார் - எவ்வளவு அப்பாவித்தனமாக இருக்கிறது. பையன் அப்படியேதான் இருக்கிறான். ஆனால், அந்த மனிதனின் மனம்தான் மாறி இருக்கிறது.

நிஜத்திற்கு உன் மனதை நீ கொண்டு வந்தால், அங்கு இல்லாத ஒன்று உனக்குப் புலப்படும். அங்கு இருக்கும் ஒன்று உன் கண்ணுக்குத் தெரியாது. நிஜத்திற்கு மனதைக் கொண்டு வரும். இந்த நிகழ்ச்சியைத்தான், இந்துக்கள் மாயை என்று அழைக்கிறார்கள். இதுதான், எல்லாவித மாயத் தோற்றங்களுக்கும் ஆணி வேராக இருப்பது.

இந்துமதக் கோட்பாடான மாயையை நீ புரிந்து கொள்ள வேண்டுமென்றால், இதுதான் அடிப்படை. நீ உன் மனதின் வழியாக வாழும்போது, நீ மாயையில் வாழ்கிறாய், நீ மாயத் தோற்றத்தில் வாழ்கிறாய், உன் சுய வெளிப்பாடுகளுடனும் எண்ணங்களுடனும் வாழ்கிறாய்.

உன்னுடைய அடுக்கடுக்கான சிந்தனைகள், நிஜத்திலிருந்து உன்னை மறைக்கிறது. மேலும், உன்னிடமிருந்து நிஜத்தை மறைக்கிறது. மனதைத் தூக்கிப் போடுவது என்பது மாயையைத் தூக்கிப் போடுவது போன்றது. எப்போது, மனம் இல்லாமல் போகிறதோ, அப்போது திடீரென்று அதன் வெளிப்பாடு தோன்றுகிறது. அதுதான்

கடவுள். கடவுளைப் பற்றிய உன்னுடைய எண்ணங்கள் அல்ல.

கிருஷ்ணர் புல்லாங்குழல் வாசிப்பதை ஓர் இந்து எப்போதும் பார்க்கிறான். எந்தக் கிறிஸ்துவரும் எப்போதும் கிருஷ்ணர் புல்லாங்குழல் வாசிப்பதைப் பார்ப்பதில்லை. உண்மையைச் சொல்லப் போனால், கிறிஸ்துவர்களின் கண்ணோட்டத்தில், இப்படிப் புல்லாங்குழல் வாசிப்பது, சுற்றிலும் பெண்கள் நடனமாட, நடுவில் காட்சியளிப்பது போன்ற விஷயங்கள், தெய்வ நிந்தனையாகக் கருதப் படும்... எந்த வகையிலும் அவர்கள் இதை நியாயப்படுத்த மாட்டார்கள். ஒரு ஹிப்பியைப் போலத்தான், அவர்களின் கண்களுக்குக் கிருஷ்ணரின் தோற்றம் இருக்கும். அவரைக் கடவுளாகக் கிறிஸ்துவர்கள் ஒருபோதும் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். அதற்குச் சாத்தியமே இல்லை. அவர்களைப் பொறுத்தவரை, கடவுள் விளையாட்டுத்தன மாக இருக்கக் கூடாது. உண்மையில் சொல்லப் போனால், அவர்களைப் பொறுத்தவரை, கடவுள் எப்போதும் சிலுவையில்தான் இருக்க வேண்டும், ஒரு தியாகியாக, மனித குலத்தின் மொத்தப் பாரத்தையும் சுமப்பவராக, மனித குலத்தின் பாவங்களிலிருந்து இரட்சிப்பவராகத் தான் இருக்க வேண்டும். அவரால் எப்படிப் புல்லாங் குழல் வாசித்துக் கொண்டிருக்க முடியும்? அது இயலாத விஷயம். அவர் குற்றங்களிலிருந்து பாதுகாப்பவர், மனித குலத்தின் மலையளவு பாரத்தைச் சுமப்பவர். மனித குலத்தின் தலையெழுத்து அவரைப் பொறுத்துத்தான் இருக்கிறது. அவர் பெண்களுடன் எப்படி விளையாட முடியும்? அவர்கள் பார்வையில், கிருஷ்ணர் ஒரு பிளேபாய் ஆகத்தான் தோற்றமளிக்கிறாரே தவிர, ஒரு கடவுளாக அல்ல.

கிறிஸ்துவர்களைப் பொறுத்தவரை, இயேசு சோகமய மானவர், கற்பனைக்கெட்டாத அதிகபட்ச கவலையோடு

இருப்பவர் - அந்த முகத்தில் ஜீவகளையைவிட சவக்களை தான் அதிகம் குடிகொண்டிருந்தது. அவர் சிலுவையில் அறையப்பட்டவர். அவருடைய மரணம்தான் வழிபடப் படுகிறதே தவிர, அவருடைய வாழ்க்கை அல்ல. அவர் சற்றும் விளையாட்டுத்தனம் இல்லாதவர். இயேசு எப்போதும் சிரித்ததில்லை என்பது கிறிஸ்தவர்களின் கூற்று. அது உண்மையாக இல்லாமலிருக்கலாம். ஆனால், கிறிஸ்துவர்களுக்கு அந்த எண்ணம் உண்டு. இவ்வளவு துன்பங்கள் இருக்கும்போது, கடவுளால் எவ்வாறு சிரிக்க முடியும்? இவ்வளவு குற்றங்கள் இருக்கும்போது, கடவு ளால் எவ்வாறு சிரிக்க முடியும்? வியட்நாம் இருக்கும் போது, கம்போடியா இருக்கும் போது, இஸ்ரேல் இருக் கும் போது, விதவிதமான போர்கள் நடைபெறும்போது, கொலை பாதகச் செயல்கள் நடைபெற்றுக் கொண்டிருக் கும்போது, கடவுளால் எப்படிப் புல்லாங்குழல் வாசிக்க முடியும்? அதற்குச் சாத்தியமே இல்லை. அவர் சற்றும் விளையாட்டுத்தனமின்றி, சிலுவையில் இருக்க வேண்டும்.

கிறிஸ்துவ மனத்தைப் பொறுத்தவரை, சிலுவைதான் அடையாளம், புல்லாங்குழல் அல்ல. ஆனால், இந்துவைப் பொறுத்தவரை, சிலுவையில் அறையப்பட்ட கடவுளை வழிபடுவது என்பது அபத்தமாகத் தோன்றும். ஏனென் றால், கடவுள் என்பவர் ஆனந்தம், ஆடிப்பாடும் கொண் டாட்டம்! கடவுள் பரமானந்தமாகப் புல்லாங்குழல் வாசிக்க வேண்டும். ஏனென்றால், மொத்தப் பிரபஞ்ச இருப்பும் ஒரு கொண்டாட்டம் தான்.

ஒரு சிலுவையின்மீது எந்த மலரையும் உன்னால் பார்க்க முடியாது. ஒரு சிலுவையின்மீது எந்தப் பறவையையும் உன்னால் பார்க்க முடியாது. நீ எந்த நதியையும் சோகமாகப் பார்க்க முடியாது. எந்த மலையும் சோகமாக இருப்பதில்லை. மொத்தப் பிரபஞ்ச இருப்பும்

புல்லாங்குழல் வாசிக்கிறது. கிருஷ்ணர் புல்லாங்குழல் வாசிப்பதற்கான அர்த்தம் இதுதான்: கொண்டாட்டம் எங்கும் தொடர்ச்சியாக இருக்கிறது. பெண்மைச் சக்தி நடனமாடுகிறது.

இப்படித்தான் கடவுள் இருக்க வேண்டும். இரண்டு துருவங்களும் அவருள் சந்திக்கின்றன. சுயசக்தியோடு, சுயசிருஷ்டியோடு, அவை ஆழமாகக் கட்டித் தழுவிக் கொள்கின்றன. சிருஷ்டி கர்த்தாவும், சிருஷ்டியும், ஆணும் பெண்ணும், யின்னும் யாங்கும், நேர்ச்சக்தியும் எதிர்ச் சக்தியும் ஒன்றாக இணைந்து நடனமாட வேண்டும் - இல்லையென்றால், அங்கு நடனம் இல்லை. மனிதனால் தனியாக எப்படி நடனமாட முடியும்? அது பார்ப்பதற்குக் கேலிக் கூத்தாக இருக்கும். காரணம் என்ன...? ஏனென் றால், மனிதன் என்பவன் பாதி, அப்படியிருக்கும் போது, ஒரு பாதியால் எப்படி நடனமாட முடியும்? முழுமைதான் நடனமாட முடியும்.

வட்டம் முழுமை அடையும்போது, நடனம் தன் னிச்சையாக நடைபெறுகிறது. எந்த வலுக்கட்டாயமும் இல்லாமல், கொண்டாட்டம் தன்னிச்சையாக நடைபெறு கிறது. அது இயல்பாக நடைபெறுகிறது. அது தானாக நடைபெறுகிறது. கிருஷ்ணர் நடனமாட முயற்சிக்க வில்லை. அவர் ஒரு நடிகர் அல்லர். அவர் எதையும் மிகைப்படுத்தவில்லை. பெண்மைச் சக்தி அங்கு இருக் கிறது, ஆண்மைச் சக்தி திருப்தி அடைந்துவிட்டது, ஓர் ஆழமான திருப்தி. ஒரு சந்திப்பு, ஒரு திருமணம் நடக்கிறது. நடனம் தானாக நடைபெறுகிறது.

இயேசு எப்போதும் சிரித்ததில்லை என்று இந்துக்கள் நினைக்க முடியாது. அவர் சிரித்திருக்கவில்லை என்றால், அவர் எதையுமே தெரிந்து கொண்டிருக்க முடியாது. அவர் தாமே ஓர் ஆனந்தமாக இருந்திருக்க வேண்டும். அதிக பட்ச ஆழமான ஆனந்தமாக இருந்திருக்க வேண்டும்.

இயேசு வயிறு குலுங்கச் சிரித்தவராக இருந்திருக்க வேண்டும். இல்லையென்றால், எதுவும் சாத்தியமில்லை.

ஆனால், இவை அனைத்தும் தனிப்பட்ட எண்ணங்கள். ஒரு இந்து, அவர் பாணியில் நினைக்கும்போது, இந்துக் கடவுள் தோன்றுகிறார். ஒரு கிறிஸ்துவர், அவர் பாணியில் நினைக்கும்போது, கற்பனை செய்யும் போது, கிறிஸ்துவக் கடவுள் வருகிறார். ஆனால், இரண்டுமே மனதின் சிருஷ்டிகள்தான். எதுவுமே உண்மையல்ல. இரண்டும் கற்பனையான வெளிப்பாடுகள்தான்.

எல்லாக் கிருஷ்ணர்களும், எல்லா கிறிஸ்துக்களும் கைவிடப்பட்டால் தவிர, உன்னால் நிஜத்தை அறிந்து கொள்ள முடியாது. அவை அனைத்தும் உன்னால் கற்பனை செய்யப்பட்ட கனவுகள். அவை அழகான கனவுகளாக இருந்தாலும், இன்னமும் கனவுகள்தான்.

நீ மட்டுமே தனியாக விடப்பட்டிருக்கும்போது, ஜாக்கிரதையுடன் கூடிய சாத்விகம் நிலவும்போது, எதுவுமே செய்யாமல், வெறுமனே இருக்கும்போது, திடீரென, நிஜம் வெடிக்கிறது. அது எந்தக் கற்பனா சாஸ்திரத்தையும் பொறுத்து இருக்காது. அது இந்து என்றோ, கிறிஸ்து என்றோ, முகமதியன் என்றோ பார்க்காது. கற்பனா சாஸ்திரங்கள் எல்லாம் மிகைப்படுத்தப்பட்டவை. அவை மிகவும் குறுகலானவை. நிஜம் என்பது எல்லையற்ற பரப்பைக் கொண்டது. அதனை எந்த ஒரு குறிப்பிட்ட எண்ணத்துக்குள்ளும் அடக்கிவிட முடியாது. அதனை எந்த ஒரு குறிப்பிட்ட கருத்துக்குள்ளும் குறுக்கிவிட முடியாது.

மனம் என்பது மிகவும் குறுகலானது. அதனால், நிஜத்தைச் சூழ்ந்திருக்க முடியாது. அது நிஜத்துக்குள் கரைந்துவிடத்தான் வேண்டும்.

நீ மனமில்லாதபோது, நிஜம் இருக்கிறது. அந்த நிஜம் தான் கடவுள். அந்தக் கடவுள் இந்துவுடன் பொருந்து

கிறாரா? அல்லது கிறிஸ்துவரிடம் பொருந்துகிறாரா? என்பதை உன்னால் கண்டுபிடிக்க முடியாது. அவர் யாரிடமும் பொருந்துவதில்லை. அது முடியாத விஷயம். அதனால்தான், மதம் என்பது ஒரு கிறிஸ்துவோ, ஓர் இந்துவோ, ஒரு புத்தரோ இல்லை என்பதை நான் தொடர்ந்து வலியுறுத்தி வருகிறேன். மதத்துக்கு எந்த அடைமொழியும் கிடையாது. மதத்துக்கு எந்தக் குறியீடும் கிடையாது. மகத்தான அதன் ஜீவனில், எல்லையற்ற அதன் விஸ்தாரத்தில், தொடக்கமும் முடிவுமற்ற அதன் பாய்ச்சலில், வாழ்க்கையே அதுதான்.

கடவுள் என்பது வாழ்க்கை. எல்லா எண்ணங்களும் வலிமையற்றவை. அந்த எண்ணங்களுக்கு நீ மிகுந்த முக்கியத்துவம் கொடுப்பாயேயானால், உனக்குத்தான் பிரச்சினை. ஒரு கிறிஸ்தவன், தன்னுடைய கடவுள்தான் உண்மை என்று கூறுவான். ஏனென்றால், அவன் அப்படித் தான் உணர்கிறான். ஒரு முகமதியன், கடவுளைப் பற்றித் தான் கொண்டிருக்கும் எண்ணம்தான் உண்மை என்று கூறுவான். ஏனென்றால், அவன் அப்படித்தான் நினைக் கிறான். அனைவரும், ''நாங்கள் அனுபவித்திருக்கிறோம்'' என்றுதான் கூறுகிறார்கள். அந்த அனுபவத்தை உன்னால் எப்படி மறுக்க முடியும்? ஓர் இந்து, தனக்குரிய கடவுளை வணங்குகிறான். மனம் என்பது சுய-திருப்தி பட்டுக் கொள்வது. உன்னுடைய எண்ணம் எதுவாக இருந்தாலும், அதில் நீ திருப்திப்பட்டுக் கொள்கிறாய். நீ எதைத் தேடுகிறாயோ, அதைக் கண்டுபிடித்து விடுவாய். ஆனால், நீ செய்வது எதுவாக இருந்தாலும், அது வெறுமனே மனதின் வெளிப்பாடாகத்தான் அமையும்.

அப்படியென்றால் என்ன செய்வது? மனதின் மூலமாக உண்மையைப் பார்த்துவிட முடியாது. உண்மையை நீ தேட விரும்பினால், மனதைத் தூக்கிப் போட்டுவிட வேண்டும். உண்மையை நோக்கி, நிஜத்தை நோக்கி,

வாழ்க்கையை நோக்கி, பிரபஞ்ச இருப்பை நோக்கி, நீ அடியெடுத்து வைக்க வேண்டுமானால், உன் மனதை முழுமையாகத் தூக்கி எறிந்துவிட்டு வர வேண்டும். முழு நிர்வாணமாக, கற்பனா சாஸ்திரங்களைப் பற்றிய முழுமையான அறியாமையுடன், முழுமையான வெறுமையுடன் வர வேண்டும். அப்போது தான், நீ உண்மையிடம் வரமுடியும். இல்லையென்றால், வேறு எந்த வழியில் நீ வந்தாலும், அது உன் சொந்த மனம், உன்னிடம் செய்யும் தந்திரம்தான். நீ ஏமாற்றப்பட்டுக் கொண்டே இருக்க வேண்டியதுதான். பல பிறவிகளாக நீ இதைத்தான் செய்து வந்திருக்கிறாய்.

இதுதான் நேரம். இப்போது நேரம் முழுமையாகக் கனிந்திருக்கிறது. இந்தத் தந்திர விளையாட்டிலிருந்து நீ மீண்டு வர இதுதான் சரியான தருணம். நீ இந்த விளையாட்டை நீண்ட காலமாக விளையாடி விட்டாய். இதற்கு மேல் இது தேவையில்லை. அந்த விளையாட்டிலிருந்து வெளியே வா. அந்த விளையாட்டு இதுதான். உன்னிடம் உள்ள எண்ணத்தை, மனம் கனவாக சிருஷ்டிக்கிறது, பிறகு அந்தக் கனவை, நிஜம் என்று உன்னை நம்ப வைத்து விடுகிறது.

மனத்தின் வழியாக நிஜத்தை அறிந்து கொள்ள முடியாது. ஏனென்றால் மனம் என்பது அறிந்தது, கடந்த காலம், இறந்தது. நிகழ்வு இருக்க வேண்டுமானால், கடந்த காலம் அழிக்கப்பட வேண்டும். அறிவின்மை இருக்க வேண்டுமானால், அறிவு அழிக்கப்பட வேண்டும். கடவுள் இருக்க வேண்டுமானால், மனம் அழிக்கப்பட வேண்டும். உன்னிடம் இருக்கும் அனைத்தையும் நீ தூக்கிப் போட வேண்டும். உன்னால், அப்படித் தூக்கிப் போட முடிந்தால், கெட்டியாகப் பற்றிக் கொள்வதை நீ தவிர்த்துவிட்டால், ஒரு மாபெரும் புரட்சி, ஒரு மகத்தான மாற்றம் உனக்குள் சாத்தியப்படும்.

தியானம் என்பதன் அர்த்தம், மனமற்ற நிலை.

ஒவ்வொரு நாளும், ஒரே பிரச்சினையை நான் எதிர் கொள்கிறேன்: குண்டலினி ஒரு குறிப்பிட்ட முறையில் எழும்புகிறது என்று ஏதோ ஒரு புத்தகத்தில் நீ படித்து விடுகிறாய். புத்தகத்தில் அப்படி எழுதியிருப்பதால், அது எழும்பும் என்று உறுதியாக நினைக்கிறாய். அதற்குப் பிறகு, உன்னுடைய எண்ணம் தவறானது என்பதை நிரூபிக்க, யாராக இருந்தாலும் கடினம்தான். ஏனென்றால், உனக்கு அந்த அனுபவம் இருக்கிறது. நீ இப்படிக் கூறுவாய், ''நான் அனுபவ ரீதியாக உணர்ந்திருக்கிறேன். நான் தவறு என்று நீ எப்படிச் சொல்வாய்? குண்டலினி, ஒரு பாம்பு போல ஊர்ந்து, என் முதுகில் எழும்பியதை நான் உணர்ந்தேன். அது அபரிமிதமான ஒரு சக்தியுடன், மேல் நோக்கிச் செல்கிறது.'' நீ அதை உணர்கிறாய் - அந்த உணர்வு மிகவும் அழுத்தமாக, எந்தவிதச் சந்தேகத்துக்கும் இடமில்லாத வகையில் இருக்கிறது. ஆனால், நான் சொல்கிறேன், இதற்குக் காரணம் உன் மனம் தான். ஏனென்றால், குண்டலினியைப் பற்றி அறியாத பலர் இருக்கிறார்கள். அவர்களுக்கு அந்தச் சக்தி எழும்புவதில்லை, அதை அவர்கள் உணர்வதும் இல்லை. அவர்களும்கூட அடைந்திருக்கிறார்கள்.

ஜைனர்கள் குண்டலினியைப் பற்றிப் பேசுவதில்லை. ஆனால், குண்டலினி எதுவும் இல்லாமல், ஒரு மகாவீரர் இருத்தலின் இறுதி நிலையை அடைந்திருக்கிறார். புத்தர்கள் குண்டலினியைப் பற்றி எதுவும் பேசுவதில்லை. இந்துக்கள் அதைப் பற்றிப் பேசுகிறார்கள் - பிறகு அது எழும்புகிறது.

புத்தர்கள் நான்கு சக்கரங்களைப் பற்றிப் பேசுகிறார்கள். அதனைத் தொடர்ந்து, புத்த மதத்தைப் பின் பற்றுபவர் நான்கு சக்கரங்களை மட்டுமே உணர்கிறார். இந்துக்கள் ஏழு சக்கரங்களைப் பற்றிப் பேசுகிறார்கள்.

இந்துமதத்தைப் பின்பற்றுபவர், ஏழு சக்கரங்களை உணர்கிறார். ஒருமுறை, ஏழு சக்கரங்களை அறிந்திருந்த ஒரு மனிதரிடம், ''பதின்மூன்று சக்கரங்கள் இருக்கிறதே, உனக்குத் தெரியாதா?'' என்று கேட்டேன்.

உடனே அவன் கூறினான், ''என்னது, பதின்மூன்றா?'' நான் இதுவரை ஏழு சக்கரங்கள் மட்டும்தான் தெரிந்து வைத்திருக்கிறேன்.

''மேலும் ஆறு சக்கரங்களை நீ தெரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது'' என்று நான் கூறினேன். ''சரி, நீ சென்று முயற்சி செய். பதின்மூன்று சக்கரங்களையும் மொத்தமாக நீ உணர்ந்த பிறகு, என்னிடம் வா.''

ஆறு மாதம் கழித்து அந்த மனிதன் வந்தான். பதின்மூன்று சக்கரங்களையும் அவன் உணர்ந்துவிட்டான் - அந்த மனிதன் ஏமாற்றவில்லை. அவன் ஏமாற்றப்பட்டிருக் கிறான். அவன் பொய் சொல்பவன் அல்லன். அவன் என்னிடம் பொய் சொல்லவில்லை. அவன் உண்மையான மனிதன்.

மனத்தால் அனுபவங்களை உருவாக்க முடியும். அதனால் நினைவு வைத்துக்கொள். நான் மீண்டும் மீண்டும் சொல்வது இதுதான். ஆன்மிகம் என்பது அனுபவம் அல்ல. அது அனுபவிப்பவன். அது அனுபவம் அல்ல. அது அனைத்து அனுபவங்களின் சாட்சியம். தனிப் பட்ட எந்த அனுபவத்துக்கும் அல்ல. மற்ற அனுபவங்கள் எல்லாம் அலுத்துப் போன பிறகு, நீ ஆன்மிக அனுபவத்துக்கு வருகிறாய். ஆன்மிக அனுபவம் என்பது, இதற்கான அனுபவமோ, அதற்கான அனுபவமோ அல்ல. அது, எந்தவித அனுபவித்தலுமின்றி, பிரக்ஞையோடு வெறுமனே இருப்பது.

மனத்திற்கு அனுபவிக்க வேண்டும் என்ற பேராசை இருக்கிறது. அந்தப் பேராசை நிறைவேறி விட்டால்,

முட்டாள்தனமான விஷயங்களில் கூட அது மகிழ்ச்சி அடைகிறது. முதுகில் சக்தி எழும்புகிறது என்ற உணர்வினால், உனக்கு என்ன பலன் கிடைத்து விடப் போகிறது? அது வெறுமனே ஓர் உணர்ச்சி - அது மனதால் சிருஷ்டிக்கப்பட்ட ஒன்று. மனம் சக்தி மிக்கது.

தகிக்கும் நெருப்பில் யாராவது நடந்து செல்வதை நீ பார்த்திருக்கிறாயா? ஆனால், இப்போது, இந்தத் தீ மிதி விழாக்கள் பல இடங்களில் பரவலாக நடந்து வரு கின்றன. சில வருடங்களுக்கு முன், ஸ்ரீலங்காவைச் சேர்ந்த யோகி ஒருவர், ஆக்ஸ்போர்ட் பல்கலைக் கழகத்தில், நெருப்பில் நடந்தார் - எந்தவித ஏமாற்றுத்தனமும் இல்லாமல், விஞ்ஞான ரீதியாக அவர் அதைச் செய்து காட்டினார். கொதிக்கும் நெருப்புக் கட்டிகளின் மீது ஒரு யோகி நடந்தால் என்ன ஆகும்? அவருக்கு எதுவும் நடக்கவில்லை - இது எப்படி நடந்தது?

மனதிற்கு அபாரமான ஆற்றல்கள் உண்டு. நெருப்பு சுடாது என்று மனம் கருதினால், அந்த உணர்வு முழுமை யாக இருந்தால், அந்த உணர்வே, ஒரு பாதுகாக்கும் சக்தியாக, உன்னைச் சுற்றி நின்று, உனக்கு எந்தப் பாதிப்பும் இல்லாமல் செய்துவிடுகிறது. பிறகு, உன் னுடைய பாதங்கள் நெருப்புக் கட்டிகளைத் தொடுவ தில்லை. நெருப்புக் கட்டிக்கும் உன்னுடைய பாதத்திற்கும் இடையில், ஓர் இனம் தெரியாத சக்தி, பாதுகாக்கும் அரணாக அமைந்து விடுகிறது. நெருப்பு உன்னைத் தீண்டாது. கண்ணுக்குப் புலப்படாத சக்தி உன்னைக் காப்பாற்றி விடுகிறது. உன்னுடைய உடலின் பாதுகாப்புக் கவசம், உன் பாதங்களில் மையம் கொண்டு விடுகிறது. உண்மையில், நீ நெருப்பின் மீது நடப்பதில்லை, உன்னுடைய சுய சக்திதான் நடக்கிறது. அது உன் காலணி போல உன்னைப் பாதுகாக்கிறது. மனதின் சக்தி, காலணி வடிவத்தில் செயலாற்றுகிறது.

ஒரு பல்கலைக் கழகத்தின் பேராசிரியர், யோகி நெருப்பில் நடக்கும் அந்தக் காட்சியைப் பார்த்து மெய்ம் மறந்து போய், ஒருவிதக் காந்தக் கவர்ச்சியில் மிக அருகில் சென்று பார்த்தார். அவர் அருகில் வந்ததைப் பார்த்த யோகி, அவரையும் அந்த நெருப்பு மேடையில் இழுத்துக் கொண்டார். அந்தப் பேராசிரியரும் நடந்தார். அதற்கு முன்பு அவர் நெருப்பின் மீது நடக்க முயற்சித்ததே இல்லை. அதற்கான பயிற்சியும் அவருக்குக் கிடையாது. என்ன நடந்தது? சிறிது கணங்களே ஆனாலும், உன்னுடைய நம்பிக்கை முழுமையாக இருக்குமேயானால், உடனடியாக உடல் பாதுகாக்கப்பட்டு விடுகிறது.

இப்போது, மருத்துவக் கல்வி, சில விஷயங்களில் மிகவும் விழிப்படைந்து வருகிறது. அவற்றில் இந்த விஷயமானது, உண்மையிலேயே மிகவும் நூதனமானது. அது என்னவென்றால், ஒவ்வொரு நாட்டிலும், பரவலான நோய்கள் பல்வேறு விதங்களில் ஏற்படுகின்றன. ஒவ்வொரு சமூகத்திற்கும், ஒவ்வொரு மதத்திற்கும், ஒவ்வொரு பிரிவினருக்கும் என்று அதனதற்கு உரிய வித்தியாசமான நோய்கள் உண்டாகின்றன.

உதாரணத்திற்கு, கிழக்கிந்திய மக்களுக்கு, பிளேக், காலரா போன்ற பெருவாரியாகப் பரவும் நோய்கள் ஏற்படுகின்றன. மேலும், சமூகம் சார்ந்த தொற்று நோய்களால் அவர்கள் பெரிதும் பாதிக்கப்படுகிறார்கள். ஏனென்றால், கிழக்கைப் பொறுத்தவரை, ஒரு தனி மனிதனைவிட, சமூகம்தான் அதிக முக்கியத்துவம் பெற்று விளங்குகிறது. இந்தியாவின் கிராமங்களை எடுத்துக் கொண்டால், கிராமம்தான் வாழ்கிறது. எந்தத் தனிப்பட்ட கிராமவாசிக்கும் முக்கியத்துவம் இருப்பதில்லை. சமூகம் தான் முக்கியமாகக் கருதப்படுகிறது. அந்த அளவுக்கு ஒரு சமூகம் வலுவான நிலையில் இருக்கும்போது, தொற்று நோய்கள் பரவலாக ஏற்படுகின்றன. ஏனென்றால், எந்தத்

தனி மனிதனுக்கும், அவனைச் சுற்றி ஒரு பாதுகாப்புக் கவசம் இருப்பதில்லை. ஒருவனுக்கு காய்ச்சல் வந்து விட்டால், பிறகு எந்தச் சமூகம் முழுவதும், கொஞ்சம் கொஞ்சமாக, அந்தக் காய்ச்சலுக்குப் பலியாக நேரிடு கிறது. அதே சமூகத்தில், மிகச்சில மேற்கத்தியர்கள் இருக்கக் கூடும் - ஆனால், இந்தத் தொற்று நோய்களால் அவர்கள் எந்தவிதப் பாதிப்பும் அடைவதில்லை.

உண்மையைச் சொல்வதென்றால், இது தலை கீழாகத்தான் இருந்திருக்க வேண்டும். ஏனென்றால், இந்தியாவில் வாழும் மேற்கத்திய மனிதனுக்கு, தடுப்பு ஆற்றல் இல்லை என்பதால், அவன்தான் இத்தகைய பரவலான நோய்களால், அதிக பாதிப்பு அடைய வேண்டும். இந்தியாவின் சீதோஷணம் அவனுக்குப் பழக்கப்படாததால், இத்தகைய தொற்று நோய்களுக்கு அவன்தான் உடனடியாகப் பலியாக வேண்டும். ஆனால் அப்படி எதுவும் நடப்பதில்லை. கடந்த பல நூற்றாண்டு களாக, நாம் தெரிந்து கொண்ட உண்மை என்னவென்றால், தொற்று நோய்கள் பரவும் காலங்களில், ஏதோ ஓர் இனம் தெரியாத சக்தியால், ஐரோப்பியர்கள் நோயின் பாதிப் பின்றி, பாதுகாக்கப்பட்டு வருகிறார்கள். இந்தியர்கள்தான் பலியாகிறார்கள்.

ஓர் இந்திய மனம் என்பது சமூகம் சார்ந்தது. ஆனால் ஐரோப்பிய மனம் மிகுந்த சுயநலம் கொண்டது. இதனால், மேற்கில் வேறுசில நோய்கள் பரவலாக இருக்கின்றன. உதாரணத்திற்கு, மாரடைப்பு நோய். அது தனி மனிதனுக்கு உரிய நோய், தொற்றக்கூடியது அல்ல. கிழக்கைப் பொறுத்தவரை, மாரடைப்பு அதிகமாக ஏற்படுவதில்லை. நீ மேல்நாடுகளில் கல்வி பயின்றாலோ, அல்லது மேற்கத்திய முறையில் வாழ்க்கையை அமைத்துக் கொண்டாலோ, கிட்டத்தட்ட ஒரு மேற்கத்தியனாக நீ மாறினாலோதான், உனக்கு இத்தகைய நோய்க்கான

சாத்தியம் இருக்கிறது. கிழக்கைப் பொறுத்தவரை, மாரடைப்பு என்பது ஒரு பெரிய பிரச்சினையல்ல, நீரிழிவு என்பது ஒரு பெரிய பிரச்சினையல்ல, இரத்தக் கொதிப்பு என்பது ஒரு பெரிய பிரச்சினையல்ல - இவையெல்லாம், தொற்றக்கூடிய நோய்கள் அல்ல. இவற்றால், கிறிஸ்துவர்கள் அதிகமாகப் பாதிக்கப்படுகிறார்கள் மேற்கத்தியன் எப்போதும் தனி மனிதனாகத்தான் வாழ்கிறான். நீ தனி மனிதனாக வாழ்க்கை நடத்தும் போது, சமூகத்துக்கு நீ அதிக முக்கியத்துவம் தருவதில்லை. அதனால் நீ தொற்று நோய்களிலிருந்து பாதுகாக்கப்படுகிறாய்.

மேற்கைப் பொறுத்தவரை, தொற்று நோய்கள் கொஞ்சங்கொஞ்சமாக அழிந்து வருகின்றன. ஆனால், இப்போது மேற்கத்தியர்கள், தனிப்பட்ட சில நோய்களால் அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். மாரடைப்பு, தற்கொலை, இரத்தக் கொதிப்பு, சித்த பிரமை - இவை தான் தனிப்பட்ட நோய்கள். இவை தொற்றக் கூடியவை அல்ல. மன இறுக்கம், கோபம், வருத்தம் போன்ற பாரங்களின் அழுத்தம் இல்லாமல், கிழக்கிந்திய மக்கள் தளர்வாக வாழ்கிறார்கள். அவர்கள் படபடப்பாக இருப்பதை உன்னால் பார்க்க முடியாது. தூக்கமின்மையால் அவர்கள் அவதிப்படுவதில்லை. இதய நோய்களால் அவர்கள் பாதிப்படைவதில்லை. இந்த நோயிலிருந்து அவர்களைக் காப்பாற்றுவது சமூகம்தான். ஏனென்றால், சமூகத்திற்கு இதயம் இல்லை. நீ சமூகத்தோடு இணைந்து வாழ்ந்தால், இதய நோய் உனக்கு ஏற்படுவதில்லை.

இது ஓர் அரிதான விஷயம். சில குறிப்பிட்ட நோய்கள் ஏற்படுவதற்குக் காரணம் மனம்தான். சில குறிப்பிட்ட நோய்களிலிருந்து உன்னைக் காப்பாற்றுவதும் மனம்தான். உன் மனம்தான் உன்னுடைய உலகம், உன் மனம்தான் உன்னுடைய ஆரோக்கியம், உன் மனம்தான் உன்னுடைய உடல் நலக்குறைவு. நீ மனதோடு வாழ்ந்தால், ஒரு

மூடிய உறைக்குள் நீ தொடர்ந்து வாழ்வதாக இருந்தால், உன்னால் நிஜத்தைத் தெரிந்து கொள்ளவே முடியாது. அந்த நிஜம் எப்போது உனக்குச் சாத்தியம் என்றால், உன்னுடைய பலவித மனங்கள் அனைத்தையும் நீ கைவிடும் போதுதான் - அதாவது, சமூகம், தனி மனிதன், கலை போன்ற பலவித மனங்களை எல்லாம் நீ தூக்கிப் போட்டுவிட வேண்டும். பிறகு, உன் மனம், பிரபஞ்சம் முழுமைக்கும் பொதுவானதாகிவிடும். பிறகு உன் மனம், பிரபஞ்ச மனதோடு ஐக்கியமாகிவிடும்.

உனக்கென்று சுயமாக மனம் இல்லாதபோது, உன்னுடைய பிரக்ஞை பிரபஞ்ச மயமாகிவிடும். கடவுள் ஒரு பொருளாக, கண்ணுக்குப் புலனாவதில்லை. உண்மை ஒரு பொருளாகத் தெரிவதில்லை. நீ உண்மையாக மாறு. நீயே கடவுளாக ஆகிவிடு. அல்-ஹிலாஜ் மன்சூரின் புகழ்பெற்ற வாக்குமூலமான அனல் ஹாக் என்பதன் அர்த்தம் இதுதான். அவர் கூறுகிறார், "நான் தான் கடவுள்; அஹம் பிரஹம்மாஸ்மி, நான்தான் பிராமணன்".

சுஃபிக்கள் பிரபஞ்ச மனத்தின்மீது நம்பிக்கை வைத்துள்ளனர். அவர்கள், உன்னுடைய தனிப்பட்ட மனத்தை, சமூக மனத்தைக் கைவிட வேண்டும் என்று விரும்புகின்றனர். பிரபஞ்ச மனத்திலிருந்து, உன்னைப் பிரிக்கக் கூடிய தடுப்புகள் அனைத்தையும் நீ உடைத்தெறிய வேண்டும் என்று கூறுகின்றனர். நீ கடலின் ஒரு துளியாக மாறிவிடு. நீ கடலாக மாறினால்தான், உன்னால் அதைப் பற்றித் தெரிந்து கொள்ள முடியும். அதற்குப் பிறகுதான், பிரபஞ்ச இருப்பு உனக்குப் புலனாகும். அதற்கு, மனம் இறக்க வேண்டும்.

நீ இறக்காத வரை, கடவுள் உனக்குச் சாத்தியம் இல்லை. கடவுள் ஓர் அனுபவம் அல்ல. அவர் உன்னிடமிருந்து வேறுபட்டவர் அல்லர். உன்னால் அவரைப் பார்க்க முடியாது. காரணம், பார்ப்பவருக்குள் அவர் மறைந்திருக்

கிறார். உன்னால் அவரை எதிர்க்க முடியாது. எந்த இடம் என்று உன் எதிர்ப்பைக் காட்டுவாய்? அவர் உனக்குள்தான் இருக்கிறார்.

ஒரு கதையை உனக்குச் சொல்ல விரும்புகிறேன். அது ஒரு பழைய இந்துக்கதை. அதில், இந்த உலகத்தைக் கடவுள் படைத்தார் என்று சொல்லப்படுகிறது. எல்லாம் நல்லபடியாக நடந்து கொண்டிருந்தன. கடவுள் எப்போது மனிதனை சிருஷ்டித்தாரோ, அப்போது பிரச்சினை ஆரம்பமாயிற்று. அந்தக் காலத்தில் எல்லாம், கடவுள் பூமியில்தான் வாழ்ந்து கொண்டிருந்தார். அவர் தாம் வாழ்வதற்காக, இந்தப் பூமியை உருவாக்கினார். இந்த மரங்கள், இந்தப் பூக்கள், இந்த ஆறுகள், மலைகள் ஆகிய இவற்றையெல்லாம் அவர் யாருக்காக உருவாக்கியிருக்கப் போகிறார்? இந்தக் கதை என்ன சொல்கிறது என்றால், தான் வாழ்வதற்காகப் படைத்த இந்தப் பூமியில், அதன் படியே அவரும் வாழ்ந்து வந்தார். எல்லாம் நல்லபடியாக நடந்து கொண்டிருந்தது. பறவைகள், மரங்கள், ஆறுகள், மிருகங்கள் இவையெல்லாம் மகிழ்ச்சியாக இருந்தன.

பிறகுதான், அவர் அந்தத் தவறைச் செய்தார்: அவர் மனிதனை சிருஷ்டித்தார், பிரச்சினையும் ஆரம்பமாகி விட்டது. ஏனென்றால், மனிதன் புகார் செய்யத் தொடங்கி விட்டான். அது இரவு நேரமா, நடுநிசியா, அல்லது கடவுள் தூங்கிக் கொண்டிருக்கிறாரா என்றெல்லாம் பார்க்காமல், நேரம் கெட்ட நேரத்தில், அவன் புகாருடன் வந்து, கதவைத் தட்டுவான். இது நாளடைவில் அதிகரித்துக் கொண்டே இருந்தது. கடவுளின் இருப்பிடத்திலேயே, மனிதன் எப்போதும் இருக்கத் தொடங்கினான். கடவுளை ஒரு கேலிப் பொருளாக அவன் கருதினான். அவனுடைய புகார்களுக்கு எல்லையே இல்லாமல் போயிற்று. அதில் பிரச்சினை என்னவென்றால், ஒரு மனிதனின் புகாரை நீ தீர்த்து வைத்தால், அந்தத் தீர்வு, இன்னொரு மனிதனின் புகாருக்குக் காரணமாக அமைந்துவிடும்.

''இன்று மழை பெய்ய வேண்டும்'' என்று சிலர் வேண்டுவார்கள். அதன்படி, கடவுள் மழையைப் பெய்ய வைத்தால், இன்னும் சிலர் வந்து முறையிடுவார்கள், ''நீங்கள் என் வீட்டை பாழ்படுத்தி விட்டீர்கள். நான் இப்போதுதான் என் வீட்டிற்கு சுண்ணாம்பு அடித்திருந்தேன்''. ஆனால் வேறு சிலருக்கு தோட்டத்திற்குத் தண்ணீர் தேவைப்படுகிறது. அனைவரையும் திருப்திப் படுத்துவது என்பது முடியாத காரியம். அதனால், குழம்பிப் போன கடவுள், தன் ஆலோசகர்களிடம், ''என்ன செய்வது?'' என்று கேட்டார். ''நீங்கள் இமயமலைக்குச் சென்று ஒளிந்து கொள்வதுதான் நல்லது'' என்று ஒருவர் அறிவுரை கூறினார்.

கடவுள் கூறினார், ''நீ சொல்வது சரிதான். ஆனால், எதிர்காலத்தில் நடக்கப் போகிற விஷயம் பற்றி உனக்குத் தெரியாது. உடனடியாகவோ அல்லது சிறிது காலம் கழித்தோ, எட்மண்ட் ஹிலாரி (Edmund Hillary) என்னும் பெயர் கொண்ட ஒரு மனிதன், எவரெஸ்ட் சிகரத்தில் நான் இருந்தாலும் கூட, அங்கு வந்து என்னைச் சந்திப்பான். அங்கும் என்னைத் தனிமையில் இருக்கவிட மாட்டார்கள். நான் இமயமலையில் இருப்பது தெரிந்துவிட்டால், மொத்த உலகமும் அங்குப் படையெடுத்து வந்துவிடும். இல்லை, அந்தத் திட்டம் சரிப்பட்டு வராது. நான் இப்போது, தற்காலிகமாக அங்கு செல்லலாம் என்று நினைத்தால்கூட, அந்த மனிதன் எட்மண்ட் ஹிலாரி விட மாட்டான். அவன் என்னை நோக்கி வந்து கொண்டிருப் பதை என்னால் பார்க்க முடிகிறது. ஏனென்றால், முக்காலமும் நான் பார்ப்பவன் ஆயிற்றே.

பிறகு அவர்கள் கூறினார்கள், ''அப்படியென்றால், நீங்கள் சந்திர மண்டலத்துக்குச் செல்வதுதான் உகந்தது.''

கடவுள் கூறினார், ''இல்லை, தற்காலிகமாக வேண்டு மானால் அது உதவும். ஆனால், மனிதர்கள் அங்கும் இப்போது சென்று கொண்டிருக்கிறார்கள்.''

பிறகு, ஒரு வயதான ஆலோசகர், கடவுளின் காதில் ஏதோ முணுமுணுத்தார். உடனே கடவுள் தலையை அசைத்துவிட்டுக் கூறினார், ''ஆமாம், நீங்கள் சொல்வது தான் சரி.''

அந்த வயதான மனிதர் கூறியது இதுதான்: ''மனிதனுக் குள்ளேயே நீங்கள் ஒளிந்து கொள்வது தான் நல்லது. அவன் இதயத்தின் அடியாழத்துக்குச் சென்று, அங்கே மறைந்திருங்கள்.''

கடவுள் கூறினார், ''நீங்கள் சொல்வதுதான் சரி. காரணம், அந்த இடத்தை அவன் ஒருபோதும் சந்தேகிக்க மாட்டான். 'கடவுள் உனக்குள்ளேதான் இருக்கிறார்' என்று சந்தேகிக்க முடியாத வகையில், இருக்கக்கூடிய ஒரே இடம் அதுதான்.''

கடவுள் என்பவர் ஓர் அனுபவம் அல்ல. அவர் உன்னுள் மறைந்திருக்கிறார். நீ வெறுமனே, அவர் மறைந் திருக்கக்கூடிய இடம்தான். கடவுள் ஓர் அனுபவம் அல்ல. அவர் எல்லா அனுபவங்களையும் அனுபவிப் பவர்.

ஜாக்கிரதையுடன் கூடிய சாத்விகத்துடன் இருங்கள். திடீரென, அவர் உனக்குள் இருப்பது உனக்குப் புலனா கும். இந்தக் கதை உண்மைதான், முற்றிலும் உண்மை... ஏனென்றால், நான் இந்தக் கதையைப் பின்பற்றி, கடவுளை அறிந்து கொண்டேன். நீயும் இந்தக் கதையைப் பின்பற்றத் தொடங்கு. இது ஒரு கட்டுக்கதை அல்ல. இது முற்றிலும் ஓர் உண்மைக் கதை. கடவுள் உங்கள் உள்ளேதான் இருக்கிறார்.

இன்றைக்கு இது போதும்.



# அனுபவப்பட ஓர் அழைப்பு

**ஓஷோ**
**பிறக்கவுமில்லை**
**இறக்கவுமில்லை**
**இந்த பூமிக்கு விஜயம் செய்த காலம்**
**11.12.1931 முதல் 19.1.1990**

## ஓஷோ ஒரு ஞானமடைந்த சித்தர்

தேடுபவர்களுக்கும் நண்பர்களுக்குமான தனது முப்பது வருடப் பேச்சில், ஓஷோ அவர்களது கேள்விகளுக்குப் பதிலளிக்கிறார். உலகின் மிகச்சிறந்த ஞானவான்கள் மற்றும் புனித நூல்களின் உபதேசங்களை விவரித்திருக்கிறார். அவருடைய பேச்சுக்கள் தொடர்ந்து புதிய பார்வைகளை எல்லாவற்றிற்கும் அளித்து வருகிறது. தெரியாத உபநிஷத்துக்களிலிருந்து தெரிந்த குருட்ஜிப் சொற்கள்வரை, அஷ்டவக்ராவிலிருந்து ஜரதுஸ்ட்ரா வரை, ஹசீட்ஸ், சூபீஸ், பவுல்ஸ், யோகா, தந்த்ரா, தாவோ மற்றும் கௌதம புத்தர் ஆகிய எல்லாவற்றையும் தனது அனுபவத்திலிருந்து ஆணித்தரமாகப் பேசுகிறார். கடைசியாக ஸென்னின் தனித்தன்மை வாய்ந்த ஞான அறிவை நம்மிடம் பாய்ச்சுவதில் முழுக் கவனமெடுத்துக் கொண்டார். அதற்கு அவர் கூறுகிற காரணம் என்னவென்றால், மனிதனின் உள்வாழ்க்கையை நோக்கும் ஆன்மிக அணுகுமுறையில் ஸென் ஒன்று மட்டுமே காலத்தின் சோதனைகளையெல்லாம் கடந்து நிற்பது மட்டுமின்றி இன்றைய மனிதகுலத்திற்கும் ஏற்புடையதாகத் திகழ்கிறது என்பதே. 'தியான்' என்ற சொல்லின் மருவிய வழக்கே ஜப்பான் மொழியின் 'ஸென்' என்பது. ஆங்கிலத்தில் இதை 'மெடிடேசன்' என்று மொழி பெயர்க்கலாம். ஆனால் முழுமையான மொழி பெயர்ப்பல்ல என்றே ஓஷோ கூறுகிறார். ஆகவே நீங்கள் தியானம் அல்லது ஸென் அல்லது வேறு எப்படி அழைத்தாலும் சரி– ஓஷோ சுட்டிக்காட்டுவது அதை அனுபவித்தலை.

ஓஷோ 1974இல் பூனேயில் தங்க ஆரம்பித்தார். அவருடைய பேச்சைக் கேட்கவும், அவருடைய இன்றைய மனிதனுக்கான தியானமடையும் வழிமுறைகளைப் பழகவும் சீடர்களும் நண்பர்களும் உலகெங்கிலும் இருந்து அவரைச் சூழ்ந்தனர்.

மேற்கத்திய குழு அணுகுமுறை, வகுப்புகள், பயிற்சிகள் போன்ற உள சிகிச்சைகளும் படிப்படியாக புகுத்தப்பட்டது. இது கிழக்கித்திய நாடுகளின் அணுகுமுறையையும் இணைக்கும் பாலமாக விளங்குகிறது. இப்போது 'ஓஷோ கம்யூன் இண்டர்நேஷனல்' உலகின் மிகப் பெரிய தியானம் மற்றும் ஆன்மிக வளர்ச்சிக் கேந்திரமாக உருவாகியுள்ளது. இது உள் உலகை அனுபவிக்கவும் ஆழ்ந்து செல்லவும் நூற்றுக் கணக்கான பல்வேறு முறைகளை வழங்குகிறது.

ஒவ்வொரு வருடமும் ஆயிரக்கணக்கில் சத்தியத்தை நாடுபவர்கள் உலகெங்கிலுமிருந்து ஓஷோவின் புத்த மண்டலத்திற்கு கொண்டாடவும் தியானம் செய்யவும் வருகிறார்கள். கம்யூனில் அடர்ந்த பசுமை நிறைந்த தோட்டங்களும் குளங்களும், அருவிகளும், பெருமித அன்னங்களும், அழகிய மயில்களும், அழகான கட்டடங்களும், பிரமிடுகளும் உள்ளன. இப்படிப்பட்ட அமைதியும் இசைவும் உள்ள சூழல் உள்அமைதியைப் பெற ஆனந்தமான வழியைக் காட்டுகிறது.

புத்த மண்டலத்தில் பங்குபெறவும் மேற்கொண்டு
விரிவான விவரங்களுக்கும் தொடர்பு கொள்க:



ஓஷோ கம்யூன் இண்டர்நேஷனல்
17, கோரகன் பார்க், பூனே–411 001. மஹாராஷ்ட்ரா, இந்தியா.
போன் : 020–6128562 பேக்ஸ்: 020–612181
ஈ–மெயில்: visitor@osho.net வெப்–சைட் : www.osho.com

# BOOKS BY OSHO

## IN ENGLISH LANGUAGE EDITIONS

### EARLY DISCOURSES AND WRITINGS

A Cup of Tea

Dimensions Beyond The Known

From Sex to Superconsciousness

The Great Challenge

Hidden Mysteries

I Am The Gate

Psychology of the Esoteric

Seeds of Wisdom

### MEDITATION

And Now and Here (Vol 1 & 2)

In Search of the Miraculous (Vol 1 & 2)

Meditation: The Art of Ecstasy

Meditation: The First and Last Freedom

Vigyan Bhairav Tantra
(boxed 2 - volume set with 112 meditation cards)

### BUDDHA AND BUDDHIST MASTERS

The Dhammapada: (Vol 1-12) The Way of the Buddha

The Diamond Sutra

The Discipline of Transcendence (Vol 1-4)

The Heart Sutra The Book of Wisdom
(combined edition of Vol 1 & 2)

### BAUL MYSTICS

The Beloved (Vol 1 & 2)

### KABIR

The Divine Melody

Ecstasy: The Forgotten Language

The Fish in the Sea is Not Thirsty

The Great Secret

The Guest

The Path of Love

The Revolution

### JESUS AND CHRISTIAN MYSTICS

Come Follow to You (Vol 1-4)

I Say Unto You (Vol 1 & 2)

The Mustard Seed

Theologia Mystica

### JEWISH MYSTICS

The Art of Dying

The True Sage

### WESTERN MYSTICS

Guida Spirituale on the (Desiderata)

The Hidden Harmony
The Fragments of Heraclitus

The Messiah (Vol 1 & 2)
Commentaries on Khalil
Gibran's
The prophet

The New Alchemy: To Turn You On
Commentaries on Mabel Collings'
Light on the Path

Philosophia Perennis (Vol 1 & 2)
The Golden Verses of Pythagoras

Zarathustra: A God That Can Dance

Zarathustra: The Laughing Prophet
Commentaries on Nietzsche's
Thus Spake Zarathustra

## SUFISM

Just Like That

Journey to the Heart (same as Until You Die)

The Perfect Master (Vol 1 & 2)

The Secret

Sufis: The People of the Path (Vol 1 & 2)

Unio Mystica (Vol 1 & 2)

The Wisdom of the Sands (Vol 1 & 2)

## TANTRA

Tantra: The Supreme Understanding

The Tantra Experience

The Royal Song of Saraha (same as Tantra Vision, Vol 1)

The Tantric Transformation

The Royal Song of Saraha (same as Tantra Vision, Vol 2)

## THE UPANISHADS

Heartbeat of the Absolute (Ishavasya Upanishad)

I Am That Isa Upanishad

Philosophia Ultima (Mandukya Upanishad)

The Supreme Doctrine (Kenopanishad)

Finger Pointing to the Moon (Adhyatma Upanishad)

That Art Thou (Sarvasar Upanishad, Kaivalya Upanishad, Adhyatma Upanishad)

The Ultimate Alchemy (Atma Pooja Upanishad (Vol 1 & 2))

Vedanta: Seven Steps to Samadhi (Akshaya Upanishad)

## TAO

The Empty Boat

The Secret of Secrets

Tao: The Golden Gate

Tao: The Pathless Path

Tao: The Three Treasures

When the Shoe Fits

## YOGA

Yoga: The Alpha and the Omega (Vol 1-10)

## ZEN AND ZEN MASTERS

Ah, This!

Ancient Music in the Pines

And the Flowers Showered

A Bird on the Wing (same as Roots and Wings)

Bodhidharma: The Greatest Zen Master

Communism and Zen Fire, Zen Wind

Dang Dang Doko Dang

The First Principle

God is Dead: Now Zen is the Only Living Truth

The Grass Grows By Itself

The Great Zen Master Ta Hui

Hsin Hsin Ming: The Book of Nothing Discouses on the Faith-Mind of Sosan I Celebrate Myself: God is No Where, Life is Now Here

Kyozan: A True Man of Zen

Nirvana: The Last Nightmare

No Mind: The Flowers of Eternity

No Water, No Moon

One Seed Makes the Whole Earth Green

Returning to the Source

The Search: Talks on the 10 Bulls of Zen

A Sudden Clash of Thunder

The Sun Rises in the Evening

Take it Easy (Vol 1) Poems of Ikkyu

Take it Easy (Vol 2) Poems of Ikkyu

This Very Body the Buddha Hakuin's Song of Meditation

Walking in Zen, Sitting in Zen

The White Lotus

Yakusan: Straight to the Point of Enlightenment

Zen: Manifesto: Freedom From Oneself

Zen: The Mystery and the Poetry of the Beyond

Zen: The Path of Paradox (Vol 1, 2 & 3)

Zen: The Special Transmission

**ZEN BOXED SETS**

The World of Zen ( 5 Volumes) Live Zen

This. This. A Thousand Times This

Zen: The Diamond Thunderbolt

Zen: The Quantum Leap from Mind to No-Mind

Zen: The Solitary Bird, Cuckoo of the Forest

Zen: All the Colors Of The Rainbow (5 Vol.)

The Buddha: The Emptiness of the Heart

The Language of Existence

The Miracle

The Original Man

Turning In

Osho: On the Ancient Masters of Zen (7 Vol)

Dogen: The Zen Master

Hyakujo: The Everest of Zen - With Basho's haikus

Isan: No Footprints in the Blue Sky

Joshu: The Lion's Roar

Ma Tzu: The Empty Mirror

Nansen: The Point Of Departure

Rinzai: Master of the Irrational

•Each volume is also available individually.

## RESPONSES TO QUESTIONS

Be Still and Know

Come, Come, Yet Again Come

The Goose is Out

The Great Pilgrimage: From Here to Here

The Invitation

My Way; The Way of the White Clouds:

Nowhere to Go But In

The Razo's Edge

Walk Without Feet, Fly Without Wings and Think Without Mind

The Wild Geese and the Water

Zen: Zest, Zip, Zap and Zing

## TALKS IN AMERICA

From Bondage To Freedom

From Darkness to Light

From Death To Deathlessness

From the False to the Truth

From Unconsciousness to Consciousness

The Rajneesh Bible (Vol 2-4)

The Rajneesh Upanishad

## THE WORLD TOUR

Beyond Enlightenment (Talks in Bombay)

Beyond Psychology (Talks in Uruguay)

Light on the Fath (Talks in the Himalayas)

The Path of the Mystic (Talks in Uruguay)

Sermons in Stones (Talks in Bombay)

Socrates Poisoned Again After 25 Centuries (Talks in Greece)

The Sword and the Lotus (Talks in the Himalayas)

The Transmission of the lamp (Talks in Uriguay)

## OSHO'S VISION FOR THE WORLD

The Golden Future

The Hidden Splendor

The New Dawn

The Rebel

The Rebellious Spirit

## THE MANTRA SERIES

Hari Om Tat Sat

Om Mani Padme Hum

Om Shantih Shantih Shantih

Sat-Chit-Anand

Satyam-Shivam-Sundram

## PERSONAL GLIMPSES

Books I Have Loved

Glimpses of a Golden Childhood

Notes of a Madman

INTERVIEWS WITH THE WORLD PRESS

The Last Testament (Vol 1)

INTIMATE TALKS BETWEEN MASTER AND DISCIPLE-DARSHAN DIARIES

A Rose is a Rose is a Rose

Be Realistic: Plan for a Miracle

Believing the Impossible Before

Breakfast

Beloved of My Heart

Blessed are the Ignorant

Dance Your Way to God

Don't Just Do Something, Sit There

Far Beyond the Stars

For Madmen Only

The Further Shore

Get Out of Your Own Way

God's Got A Thing about You God is Not for Sale

The Great Nothing

Hallelujah!

Let Go!

The 99 Names of Nothingness

No Book, No Buddha, No Teaching, No Disciple

Nothing to Lose but Your Head

Only Losers Can Win in This Game

Open Door

Open Secret

The Shadow of the Whip

The Sound of One Hand Clapping

The Sun Behind the Sun Behind the Sun

The Tongue-Tip Taste of Tao

This Is it

Turn On, Tune In and Drop the Lot

What Is, Is, What Ain't, Ain't

Won't You Join The Dance?

COMPILATIONS

Bhagwan Shree Rajneesh: On Basic Human Rights

Jesus Crucified Again, This Time in Ronald

Reagan's America

Priests and Politicians: The Mafia of the Soul

GIFT BOOKS OF OSHO QUOTATIONS

A Must for Contemplation Before Sleep

A Must for Morning Contemplation

Gold Nuggets

More Gold Nuggets

Words From a Man of No words

At the Feet of the Master

PHOTOBOOKS

Shree Rajneesh: A Man of Many Climates, Seasons and Rainbows through the eye of the camera

Impressions... Osho Commune International Photobook

**BOOKS ABOUT OSHO**

Bhagwan: The Buddha for the Future
by Juliet Forman, S.R.N. S.C.M.,R.M.N.

Bhagwan Shree Rajneesh: The Most Dangerous Man Since Jesus Chrish
by Sue Appleton, LLB., M.A.B.A.

Bhagwan: The Most Godless Yet the Most Godly Man
by Dr. George Meredith, M.D. M.B.B.S.M.R.C.P.

Bhagwan: One Man Against the Whole Ugly Past of Humanity
by Juliet Forman S.R.N. S.C.M.,R.M.N.

Bhagwan: Twelve Days That Shook the World
by Juliet Forman S.R.N. S.C.M.,R.M.N.

Was Bhagwan Shree Rajneesh Poisoned by Ronald Reagan's America? by Sue Appleton. LLB., M.A.B.A.

Diamond Days With Osho
by Ma Prem Shunyo

**GIFTS**

Zobra the Buddha Cookbook

# OSHO BOOKS

[UPDATED BOOK LIST]

**THE SCIENCE OF THE INNER**

From Sex to Superconsciousness (a new edition!)
Hidden Mysteries
The Inner Journey
In Search of the Miraculous (Vol. 2)

**GUIDES TO MEDITATION**

Meditation: The Art of Ecstasy
Meditation: The First and Last Freedom
The Path Of Meditation
The Perfect Way

**PUBLISHED LETTERS**

A Cup of Tea
Seeds of Wisdom

**AUTOBIOGRAPHIC**

Books I Have Loved
Glimpses of a Golden Childhood
My Way: The Way of the White Clouds
Notes of a Madman
Autobiography of a Spiritually Incorrect Mystic

**ONE-TO-ONE TALKS WITH OSHO**

Blessed Are the Ignorant
Hammer on the Rock
Nothing to Lose but Your Head
The Shadow of the Whip

**RESPONSES TO SEEKER'S QUESTIONS**

Come, Come, Yet Again Come
The Goose is Out
The Great Pilgrimage: From Here to Here
The Invitation
The Razor's Edge

**TRANSFORMATION SERIES**

From Bondage to Freedom
From Darkness to Light
From Death to Deathlessness
From the False to the Truth
From Unconsciousness to Consciousness

**OSHO WORLDWIDE MYSTERY SCHOOL**

Light on the Path Talks in the Himalayas
The Osho Upanishad
Socrates Poisoned Again After 25 Centuries
Talks in Greece
The Sword and the Lotus Talks in the Himalayas

OSHO VISION FOR THE WORLD

The Golden Future
The Hidden Splendor
The New Dawn
The Rebellious Spirit
Mantra Series
Hari Om Tat Sat
Om Mani Padme Hum
Om Shantih Shantih Shantih
Sat-Chit-Anand
Satyam, Shivam, Sundaram

BUDDHA AND BUDDHIST MASTERS

The Book of Wisdom
The Dhammapada (Set ofVols 1-12)
The Way of the Buddha
The Diamond Sutra
The Heart Sutra

TANTRA MASTERS

Tantra: The Supreme Understanding
The Book of Secrets Vigyan Bhairav Tantra

TAO MASTERS

Absolute Tao
Living Tao
The Empty Boat
When the Shoe Fits
The Secret of Secrets (Vols. 1 & 2 in one volume)

ZEN STORIES

A Bird on the Wing (originally Roots and Wings)
Ancient Music in the Pines
And the Flowers Showered
No Water, No Moon
Returning to the Source
The Search Talks on the 10 Bulls of Zen

ZEN MASTERS

The Book of Nothing: Hsin Hsin Ming ( Sosan)
Dogen: The Zen Master
Hyakujo: The Everest of Zen - with Basho's haikus
Isan: No Footprints in the Blue Sky
Joshu: The Lion's Roar
Kyozan: A True Man of Zen
Ma Tzu: The Empty Mirror
Nansen: The Point of Departure
Rinzai: Master of the Irrational
Yakusan: Straight to the Point of Enlightenment

ZEN EXPERIENCE

Christianity & Zen
Communism and Zen Fire, Zen Wind
God is Dead: Now Zen is the Only Living Truth
I Celebrate Myself: God is No Where Life is Now Here
One Seed Makes the Whole Earth Green
The Buddha: The Emptiness of the Heart
The Language of Existence
The Miracle
The Original Man
Turning In
Yaa-Hoo! The Mystic Rose

Zen: The Diamond Thunderbolt

*Zen:* The Mystery and the Poetry of the Beyond

Zen: The Solitary Bird, Cuckoo of the Forest

The Zen Manifesto: Freedom From Oneself

THE UPANISHADS

Behind a Thousand Names Nirvana Upanishad

Finger Pointing to the Moon Adhyatma Upanishad

Flight of the Alone to the Alone Kaivalya Upanishad

Heartbeat of the Absolute Ishavasya Upanishad

The Message Beyond Words Kathopanishad

A Dialogue with the Lord of Death

The Supreme Doctrine Kenopanishad

That Art Thon Sarvasar Upanishad, Kaivalya Upanisnad, Adhyatma Upanishad

The Ultimate Alchemy Atmapooja Upanishad (Vol. I)

Vedanta: Seven Steps to Samadhi Akshya Upanishad

The Way Beyond Any Way Sarvasar Upanishad

INDIAN MYSTICS

Enlightenment: The Only Revolution

Discourses on the great mystic Ashtavakra

Showering Without Clouds

Reflections on the poetry of an enlightened woman mystic, Sahajo

The Last Morning Star

Talks on the Enlightened Woman Mystic, Daya

PATANJALI

The Path of Yoga

(Originally Yoga: The Alpha and the Omega, Vol. 1)

Yoga: the Science of the Soul

(Originally Yoga: The Alpha and the Omega, Vol. 2)

KABIR

The Great Secret

The Path of Love

The Revolution

BAUL MYSTICS

The Beloved (Vol. 1)

The Beloved (Vol. 2)

SUFI MYSTICS

Just Like That

Sufis: The People of the Path (Vol. 1)

Unio Mystica Vol. 1

Unio Mystica Vol. 2

JEWISH MYSTICS

The Art of Dying

The True Sage

JESUS AND CHRISTIAN MYSTICS

Come Follow to You (Vol. 1)

Come Follow to You (Vol. 2)

Western Mystics

Guida Spirituale On the Desiderata

The Hidden Harmony The Fragments of Heraclitus.

The Messiah (Vol. 2) pb.

Commentaries on Khalil Gibran's The Prophet

The Voice of Silence

Zarathustra: A God That Can Dance

Zarathustra: The Laughing Prophet

Commentaries on Nietzsche's Thus Spake Zarathustra

GIFT BOOKS OF OSHO QUOTATIONS

India My Love

COMPILATIONS

At the Feet of the Master

Jesus Crucified Again, This Time in Ronald Reagan's America

PHOTO BOOK

Shree Rajneesh: A Man of Many Climates, Seasons and Rainbows through the eye of the camera

BOOKS ABOUT OSHO

Bhagwan: The Buddha for the Future *by* Juliet Forman

Bhagwan Shree Rajneesh: The Most Dangerous Man Since Jesus Christ

*by* Sue Appleton

Bhagwan: The Most Godless Yet the Most Godly Man *by* Dr. George Meredith

Bhagwan: One Man Against the Whole Ugly Past of Humanity *by* Juliet Forman

Bhagwan: Twelve Days That Shook the World *by* Juliet Forman

Diamond Days with Osho *by* Ma Prem Shunyo

Was Bhagwan Shree Rajneesh Poisoned by Ronald Reagan's America? *by* Sue Appleton

Tarot Cards

Osho Transformation Tarot

# ஓஷோ (ரஜனீஷ்) நூல்கள்

1581 அஷ்டாவக்ர மகா கீதை (பாகம்-1)
1583 அஷ்டாவக்ர மகா கீதை (பாகம்-2)
2049 அஷ்டாவக்ர மகா கீதை (பாகம்-3)
2182 அஷ்டாவக்ர மகா கீதை (பாகம்-4)
2205 அஷ்டாவக்ர மகா கீதை (பாகம்-5)
2229 அஷ்டாவக்ர மகா கீதை (பாகம்-6)
2230 அஷ்டாவக்ர மகா கீதை (பாகம்-7)
2240 அஷ்டாவக்ர மகா கீதை (பாகம்-8)
2241 அஷ்டாவக்ர மகா கீதை (பாகம்-9)
1400 ஜென் தத்துவச் சிந்தனை மேதை போதி தருமர்
1474 பாதை சரியாக இருந்தால்
1472 மாயங்களின் சங்கமம் (தொகுதி-1)
1473 மாயங்களின் சங்கமம் (தொகுதி-2)
1528 அன்பெனும் தோட்டத்திலே
1529 பூ மழை தூவி...
1531 தேடுவோம் தேடிப் பெறுவோம்
1530 இன்று புதிதாய் பிறந்தோம்
1532 கல்லும் கனியாகும்
1393 என் இளமைக்கால நினைவுகள்
1410 ஓம் சாந்தி சாந்தி சாந்தி
1911 எப்படி வாழ்வது என அறிந்துகொள்
1905 அந்நியோன்யம்
1841 தைரியம்

1842 புத்திசாலித்தனம்
1808 விடுதலை
1807 விழிப்புணர்வு
1434 வெற்றியின் அபாயம்
1392 புத்தர்களும் மூடர்களும்
1381 அறிவைத் தேடி
1394 இவ்வளவுதான் உலகம்
1435 உயர்நிலை காட்டும் தந்த்ரா
1403 மனதின் இயல்பும் அதைக் கடந்த நிலைகளும்
1436 யாகூசான்: ஞானத்திற்கு நேர்வழி
1414 பதஞ்சலி யோகம்-ஒரு விஞ்ஞான விளக்கம் (பாகம்-1)
1415 பதஞ்சலி யோகம்-ஒரு விஞ்ஞான விளக்கம் (பாகம்-2)
1416 பதஞ்சலி யோகம்-ஒரு விஞ்ஞான விளக்கம் (பாகம்-3)
1417 பதஞ்சலி யோகம்-ஒரு விஞ்ஞான விளக்கம் (பாகம்-4)
1418 பதஞ்சலி யோகம்-ஒரு விஞ்ஞான விளக்கம் (பாகம்-5)
1662 பதஞ்சலி யோகம்-ஒரு விஞ்ஞான விளக்கம் (பாகம்-6)
1663 பதஞ்சலி யோகம்-ஒரு விஞ்ஞான விளக்கம் (பாகம்-7)
1763 பதஞ்சலி யோகம்-ஒரு விஞ்ஞான விளக்கம் (பாகம்-8)
1780 பதஞ்சலி யோகம்-ஒரு விஞ்ஞான விளக்கம் (பாகம்-9)
1793 பதஞ்சலி யோகம்-ஒரு விஞ்ஞான விளக்கம் (பாகம்-10)
1437 ஸென் பரவெளியின் பரவசங்களும் பாடல்களும்
1422 தந்த்ரா - ஓர் உன்னத ஞானம்
1424 தந்த்ரா அனுபவம்
1431 வார்த்தைகளற்ற மனிதனின் வார்த்தைகள்
1411 ஓர் அற்புதப் புதையல்
1432 வாழ்வு, அன்பு, மகிழ்ச்சி

1987 ரகசியமாய் ஒரு ரகசியம் (பாகம்-2)
V100 பகவத் கீதை ஒரு தரிசனம் (பாகம்-3)
V101 பகவத் கீதை ஒரு தரிசனம் (பாகம்-4)
V102 பகவத் கீதை ஒரு தரிசனம் (பாகம்-5)
V103 பகவத் கீதை ஒரு தரிசனம் (பாகம்-6)
V104 பகவத் கீதை ஒரு தரிசனம் (பாகம்-7)
V105 பகவத் கீதை ஒரு தரிசனம் (பாகம்-8)
V106 பகவத் கீதை ஒரு தரிசனம் (பாகம்-9)
V107 பகவத் கீதை ஒரு தரிசனம் (பாகம்-10)
V108 பகவத் கீதை ஒரு தரிசனம் (பாகம்-11)
V109 பகவத் கீதை ஒரு தரிசனம் (பாகம்-12)
V110 பகவத் கீதை ஒரு தரிசனம் (பாகம்-13)
V111 பகவத் கீதை ஒரு தரிசனம் (பாகம்-14)
V112 பகவத் கீதை ஒரு தரிசனம் (பாகம்-15)
V113 பகவத் கீதை ஒரு தரிசனம் (பாகம்-16)
V404 பகவத் கீதை ஒரு தரிசனம் (பாகம்-17)
V405 பகவத் கீதை ஒரு தரிசனம் (பாகம்-18)
V114 பஜகோவிந்தம்
V115 காமத்திலிருந்து கடவுளுக்கு...
V116 உணர்வின்மையிலிருந்து மெய்யுணர்வுக்கு
V117 தியானமும் அன்பும்
V118 ஞானத்தின் பிறப்பிடம்
V119 தியானம் பரவசத்தின் கலை
V120 மிகவும் தவறாக கருதப்படும் மனிதர்
V121 நான் ஒரு வாசல்
V123 காலைப்பொழுதின் கடைசி நட்சத்திரம்